# RASSELAS

IN

# TAMIL



PUBLISHED BY ORDER OF THE DIRECTOR OF PUBLIC INSTRUCTION

MADRAS
PRINTED AT THE S. P. C. K. PRESS

1916

TRANSLATION

OF

# RASSELAS

## A TALE

BY

DR. JOHNSON



PUBLISHED BY ORDER OF THE DIRECTOR OF PUBLIC INSTRUCTION

Madras

PRINTED AT THE S. P. C. K. PRESS

1,500 Copies

1916

ஜான்ஸன் பண்டிதர்

இயற்றிய

# ராஸிலஸ்

எனும்

## கற்பிதக்கதையின்

தமிழ் மொழிபெயர்ப்பு



இஃது

வித்தியாதிகாரி உத்தரவுப்படி

சென்னை

கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது

௧௯௧௫



# நூற்பொருள்.



# ரா ஸி ல ஸ்.



## 1-ம் அதிகாரம்.



பள்ளத்தாக்கில் உள்ள அரண்மனை விவரணம்.



"வெளுத்ததெல்லாம் பால் கறுத்ததெல்லாம் தண்ணீர்" என்பதுபோல, மனக்குரங்கு சொல்வதெல்லாம் மெய்யென்று மதிகெட்டுச் செவிகொடுத்து, ஆசை எனும் பேயை ஆவலாய்த் தொடர்ந்து, வயசில் குறிக்கொள்வதை வார்த்திகத்தில் சாதிக்கலாகுமென்றும், இன்றுள்ள குறை நாளைத் தீருமென்றும் எண்ணியிருப்பவர்களே, அபிஸினிய சக்கரவர்த்தி மைந்தன் ராஸிலஸ் என்பவனுடைய சரித்திரம் சொல்லுகிறேன், கவனமாய்க் கேளுங்கள்.

பராக்கிரமசாலி ஆகிய அபிஸினிய சக்கரவர்த்திக்கு நான்காவது புத்திரன் ராஸிலஸ் என்பவன். அவன் ஆணை செல்லும் எல்லைக்குள் நதியரசு என வியக்கத் தகும் நீல்நதி உற்பத்தியாகி நான்கு திக்கும் பிரவாகிக்க, எகிப்தில் திரளாய் விளையும் தானியாதிகள் அங்குள்ளோர் செலவிற்குக் கண்டு மீந்தன. மீந்தவை வெகு வெகு தேசங்களுக்கு அனுப்பப்படும்.

உஷ்ண சக்கரத்து கொதிபதிகள் தங்கள் புத்திரர் புத்திரிகளைப் பட்டாபிஷேகதினம் கிட்டுந்தனையும் வெளிப்படவிடாமல் அந்தரங்க அரண்மனை ஒன்றிற் சிறையிருத்துவது வழக்கம். தலைமுறைதோறும் தடையற நடக்கும் இவ்வழக்கம் தொன்றுதொட்டு உள்ளது. இவ்வாறே மேற்சொல்லிய அபிஸீனிய ராஜகுமாரன் ராஸிலஸும் சகோதரர் சகோதரிகளும் அவ்வந்தரங்க அரண்மனை வாசஞ்செய்தார்கள்.

தங்கள் புத்திரர் புத்திரிகள் சஞ்சரிக்கத் தகும் இடமெனப் பூர்வகாலத்தில் அபிஸீனிய அரசர் புத்திபூர்வமாய்க் குறித்திருந்தது அம்ஹாரா ராச்சியத்தில் நாற்றிசையும் மலையாணுள்ள அகன்ற பள்ளத்தாக்கு ஒன்று. அம்மலைச் சிகரங்கள் ஓங்கிவளர்ந்து பள்ளத்தாக்கின் மத்தியில் விதானம்போற் கவிந்திருந்தன. அதனுள்ளே செல்ல ஒரேயொரு வழி இருந்தது. அவ்வழி மலையடிக் குகைவழி. அது எந்நாளும் இயற்கையாய் உள்ளதோ, இடையில் மனுஷர் கைத்தொழிலால் அமைந்ததோ ஏதென்று அறியாமல் எல்லோருக்கும் வெகுகாலம் சந்தேகாஸ்பதமாயிருந்தது. புறத்தில் அந்தக் குகைவழியின் வாய் தெரியாவண்ணம் காடு அடர்ந்து படர்ந்திருக்கும். பள்ளத்தாக்கின் அகத்தில் குகைவழியின் வாயில் யந்திர சக்தியாலன்றி ராக்ஷதர் பலத்தாலும் அசையாத பிரமாண்டமான இருபபுக்கதவு இட்டிருந்தது. அது பூர்வ கம்மியர் கைவேலை.

நாற்றிசையும் மலையினின்று விழும் அருவியால் ஆகிய சிற்றாறு அநேகம் பள்ளத்தாக்கு எங்கும் பரந்து சென்று மத்தியில் ஒன்றாய்க் கலந்து ஓர் ஏரியாகும். நீர்வளம் ஒருநாளும் குன்றாத செழுநிலமுழுதும் கண்ணுக்குப்

பசுமையான பயிர்பச்சை செடிகொடி விருட்சம் செழித்து உண்டாயின. அந்த ஏரியில் நானாஜாதி மச்சமும் விர்த்தியாயின. நீரில் நீந்தும் இயற்கையுள்ள அன்னம், நீர்க்காக்கை, சக்கரவாகமுதலிய புள்ளினம் அனைத்தையும் அதிற் காணலாம். ஏரி நிறைந்து வழிந்தோடும் நீர் வடக்கெல்லையாயுள்ள மலையடிப் பள்ளத்தில் விழும். அந்தப் பள்ளமோ சாமானியமல்ல, அடி தெரியாமல் ஆழ்ந்து இருள்மயமாயிருக்கும். அந்தக் கிடுகிடு பாதாளத்தில் வேகமாய் இறங்கும் ஜலப்பிரளயம் நிறுதிட்டமான கற்குவை ஒன்றினின்று மற்றொன்றில் மடமடென்று விழும் ஒலியைக் கேட்கச் செவி அதிரும். நீர் இறங்க இறங்க ஒலி குறைந்து, வெகுதூரத்திற் சேரும்பொழுது நிசப்தமாயிருக்கும்.

மலைச்சார்பு எல்லாம் மரச்செறிவு; ஆற்றங்கரை எல்லாம் அழகிய பூத்திரள். அடிக்கிற காற்றில் செடிகளின் தழை கிளை சிறிது அசைய, இலவங்கம்-ஏலம்-கர்ப்பூரம்-சாதிக்காய் தக்கோலமுதலிய வாசனைத் திரவியங்கள் மலையினின்று பலபலென்று விழும்; வருஷம் பன்னிரண்டு மாசமும் கனிவர்க்கம் குறையறத் தரையில் உதிரும். மனுஷர் கைவசப்பட்டுப் படிந்தவைகளும், படியாதவைகளும், புல் பூண்டு மேய்பவைகளும், தழை குழை கடிப்பவைகளும் ஆகிய நானாஜாதி விலங்குகள் அந்த விஸ்தாரமான பள்ளத்தாக்கில் எங்கும் அச்சமற்று உலாவித் திரியும். மலைமதில் சூழும் அந்நாட்டில் சஞ்சரிக்கும் அவைகள் சிங்கம்-கரடி-புலி-சிறுத்தை-செந்நாய் முதலிய துஷ்ட வனவிலங்குகளால் ஆபத்து உண்டாமென்று அஞ்சி அதிர்ந்து பதுங்க நிமித்தம் இல்லையே. ஆட்டுமந்தைகளும் கன்றுகாலிகளும் திரளாய்க்

கூடி மேயும் பசும்புற்காடு ஒரு பக்கம்; மான்-மரை-முயல் முதலிய விலங்குகள் மகிழ்ச்சியாய்த் துள்ளிக் குதித்து வேகமாய்ப் பாயும் காட்டிடை வெளிநிலம் ஒரு பக்கம்; மலையில் வெள்ளாட்டுக்குட்டிகள் உல்லாசமாய்த் துள்ளிவிளையாடும்; வஞ்சமனமுள்ள வானரங்கள் மரக்கிளைகளில் மகிழ்ச்சியாய்க் குதித்துத் திரியும்; மந்த குணமுள்ள மதயானை கிளை படர்ந்த மரநிழலில் படுத்திருக்கும். உலகத்தில் ஒன்றுக்கொன்று விகற்பமாயுள்ள சமஸ்தமும் அங்குண்டு. மனுஷருக்கு இகத்தில் இயற்கையான நற்பேறு அனைத்தும் அங்கே திரண்டிருந்தன. தீங்கு என்று சொல்லப்படுவது தீர்ப்பாய் அங்கில்லை.

அவ்வகன்ற செழும் பள்ளத்தாக்கில் சஞ்சரித்த மனுஷருக்கு அன்னவஸ்திராதிகளுக்குரிய சகலமும் உற்பத்தியாயின. புத்திரர் புத்திரிகளைக் கண்டு கொண்டாடச் சக்கரவர்த்தி வருஷம் ஒரு முறை அங்கு எழுந்தருளுவார். அந்தப் பெருநாளில் வையகத்தை ஆளும் முடிமன்னர் பெருவாழ்விற்கு உரிய வைபவங்கள் யாவும் அங்குண்டு. பரிஜனம் சூழச் சக்கரவர்த்தி மலையரணுள்ள அந்தப் பள்ளத்தாக்கிற் பிரவேசிக்க, இருப்புக்கதவு யந்திரப்பிரயோகத்தால் திறக்கப்படும். அச்சமயத்தில் நாதகீத காலக்ஷேபம் நடக்கும். ஏகாந்த வாழ்விற்கு இனியதும், அவதானம் ஒழிந்த நேரத்திற்கு விநோதமும், அலுப்பு நீங்க விளைவிற் பொழுதுபோக்கும் உபாயமும் ஏதேதென்று அங்கிருக்கும் அத்தனை பெயரையும் தனித்தனி அழைத்துச் சக்கரவர்த்தி கேட்டு, அவரவர் மனதிற்கு இதமான விநோதத்தை ஏற்குமாறு செய்யக் கற்பிப்பார். இம்மங்கல வருஷோற்சவத்தில் யாவரும் ஆனந்த பூர்த்தியடையும்பொருட்டு நடனமுதலிய வித்தைகளை நால்வ

ருக்கும் வியப்பாகத் தினம் ஒருவண்ணம் சாதிக்கவல்ல நிபுணர்கள் அழைக்கப்படுவோர்கள். யாழ்வல்லோர் முறுக் காணிகளை இறுக்கிச் செவிக்கு இனிய விதவித நாதம் பிறக்க யாழ் வாசிப்பார்கள். நாடகர் அசைந்து விளைந்து நடனம் செய்வார்கள். அந்த நாதகீத நடனசாலைக்குப் போயிருக்கும் ராஜகுமாரருக்குத் தாம் ஏகாந்தமாய் வாழ்வது எவ்வளவும் நிர்ப்பந்தமாகத் தோன்றுதே. சகல நற்பேறும் பெற்று அனுபவித்து அலுப்புற்றிருப்பவர்களுக்குத் தினம் ஒருவித விநோதம் காட்டிச் சிந்தை மகிழ்விக்கும் வித்தகர்கள் எவ்வளவு சாமர்த்தியவான்களாயிருப்பார்கள். இந்த அபூர்வ தரமுடையோரன்றி இதரமானவர்கள் அங்கே போக இடம்பெறுவதில்லை. மேற்சொல்லிய காலக்ஷேபங்கள் எட்டுத்தினம் இடையறாது நடந்தேறும். அவைகளை நூதனமாய்ப் போய்க் கண்டு கேட்டு இன்புற்றவர்கள் அவ்வின்பத்தையும் அவ்விடத்தின் அரணையும் நினைந்து எந்நாளும் அங்கிருக்க இடம்பெறுவதே இகத்தில் முத்தியென்று எண்ணுவார்கள். சில காலம் அங்கிருந்து வெளிப்படுமவர் மீண்டும் உட்செல்ல விதி இல்லை. அதனால் அங்கே நாட்பட இருப்பது இன்பமோ துன்பமோ ஏதென்றறிவது அசாத்தியம். மேற்சொல்லியவாறே வருஷத்திற்கு வருஷம் அங்கே நடந்துவரும் இன்பகாலக்ஷேபமும் நூதனம், சிறையிருக்க வாதாடிப் புகும் மனுஷரும் நூதனரே.

அரண்மனை சமைந்திருப்பது ஏரி நீர்மட்டத்திற்குமேல் முன்பின் முப்பது தப்படி உயர்ந்த மேட்டுத்தரையில். வாசம்செய்வோர் தராதரப்படி வேலைப்பணிக்கு ஏறத்தாழ உள்ள வெவ்வேறு கூடம் கொலுச்சாவடிகள் அவ்வரண்மனையில் வகுத்து அமைத்திருந்தன. அந்தக் கூடங்

கள்—சாவடிகளின் முகடு வில்வளைவாகக் கனத்துப் பருத்த கற்களால் சமைந்திருந்தது. கல்லையும் கல்லையும் சந்து தெரியாமற் பொருத்தியது ஒரு விசப் பசை. அந்தப் பசை நாள் ஏற ஏற இறுகிக் கல்லோடு கல்லாய்ச் சேரும் இயற்கையுள்ளது. அந்தப் பலத்த கட்டடம் சமைத்து வெகு நூற்றாண்டு சென்றும், சரற்காலத்துப் பெருமழைக்கும் நிரக்ஷரேகை மண்டலத்தில் வாலாயமாய் அடிக்கும் சண்டமாருதத்திற்கும் அணுவத்தனையும் அசையாமல் கட்டுறுதி அழியாதிருந்தது. பழுது சிறிதும் இல்லாத மண்டபத்தைப் பழுதுபார்க்க நிமித்தம் இல்லையே.

அம்மாளிகை வெகு விஸ்தாரமானது. பூர்வம் ஒருவர் பின் ஒருவராக அங்கிருந்து அதன் அந்தரங்க உறுப்பு அனைத்தையும் அறிந்த உத்தியோகஸ்தர் சிலரன்றி, மற்றொருவரும் அதை ஆதியோடந்தம் அறியார். அச்சமும் ஐயமும் சிற்பிவடிவு தாங்கிக் கட்டட விதி கற்பித்திருக்குமென்று உத்தேசிக்கத்தக்கதாக அது மிக சூக்ஷமமாய் அமைந்திருந்தது. ஒவ்வொரு அறைக்கும் வாசல் இரண்டு, அந்தரங்க வாசல் ஒன்று, பகிரங்க வாசல் ஒன்று. அவரவர் வசிக்கும் மனைவகுப்பு அனைத்திற்கும் ஒன்றுக்கொன்று மேன்மாடத்தினின்றாவது கீழ்மாடத்தினின்றாவது போக வர அந்தரங்க மார்க்கம் உண்டு. கீழ்மாடத்தினின்று செல்வது தரைக்கீழ்ப்பாதை. நிரைநிரையாயிருக்கும் தூண்கள் பலவற்றினுள் அறைகள் அமைத்திருந்தன. தூணின் புறத்தைக் காண்பவர்க்கு அதன் அகம் குழிந்திருக்குமென்று அற்பமேனும் சந்தேகம் தட்டாது. தொன்றுதொட்டு அடியடியாய் முடிதாங்கி அரசாண்ட மன்னர் அந்தத் தூணறைகளில் அளவற்ற திரவியம் சேமித்துவைத்தனர். மயிர்க்கிடையும் சந்துதெரியா

மல் தூணறைகளின் வாயை அடைத்திருக்கும் வெண் கற்களைப் பஞ்சம்-யுத்தமுதலிய கடிய ஆபத்துகளால் பீடிக்கப்படும் அருஞ்சமயத்திலன்றி, மற்றப்படி அரசர் திறந்து ரொக்கம் கைக்கொள்வதில்லை. தூணறைகளில் சேமிக்கப்படும் ரொக்கக்கணக்கு ஒரு புஸ்தகத்திற் பதிவு செய்திருந்தது. அந்தக் கணக்குப்புஸ்தகம் ஒளித்து வைத்திருந்த துருக்கத்திற்குள் சக்கரவர்த்தியும் இளவரசருமொழிய மற்றொருவரும் போக விதி இல்லை.



# 2-ம் அதிகாரம்.



## போகபூமி ஆகிய பள்ளத்தாக்கில் ராஸிலஸுக்கு மனக்குறை உண்டானது.



இங்கிருந்த அபிஸினிய சக்கரவர்த்தி புத்திரர்-புத்திரிகள் கஷ்டஜீவனம் இன்னதென்று ஒருநாளும் அறியார்கள். அவர்கள் மாறி மாறி உண்டு உடுத்து உவப்பதும் உறங்குவதுமாய் நாள்கழித்தார்கள். இனிய விநோதம் செய்யும் திறமையுள்ள வித்தகர் எல்லோரும் அவர்களைச் சுற்றிக்கொண்டிருந்தனர். விஷயவாசனைகள் எல்லாம் அவர்கள் இதயத்திற்கு இதமாயிருந்தன. புஷ்பம் பரிமளிக்கும் நந்தவனங்களில் அவர்கள் உலாவி, அரணிப்பான துருக்கங்களில் அச்சமற்று நித்திரைசெய்தார்கள். அந்தப் பதவியே தங்களுக்கு ஆனந்தபதவியென்று அவர்கள் சிந்தை உவக்கும்படி ஏதேது உபாயதந்திரம் உண்டோ, அவை அனைத்தும் செய்யப்பட்டன. அவர்களுக்குக்

கல்வி கற்பித்த சான்றோர் ராஜாதிகாரம் நிர்வகித்தும் ஊர்க் காறுபாறு விசாரித்தும் வருவோர்க்கு விளையும் துன்பத்தையும், மலையரணுக்குப் புறத்தில் எங்கும் தேசோபத்திரவம் தலைப்படுவதையும், அங்குள்ளவர்கள் மனவொருமையின்றி மல்லுக்கட்டி உழல்வதையும், சிறு விலங்கைப் பெருவிலங்கு பட்சிக்குமாப்போல மனுஷரில் எளியாரை வலியார் பட்சிப்பதையுமே விரித்துரைத்துக் கொண்டுவருவார். இவைகளையன்றி மற்றொன்றையும் அந்தப் பண்டிதர் சொல்லுகிறதில்லை. அன்றியும், அவர்கள் பெற்ற பெருஞ்செல்வத்தைப்பற்றி அவர்களுக்கு மேலுமேலும் அபிமானம் உண்டாக்கும்பொருட்டு, அந்த வித்தியாதருக்கள் அவ்வானந்தபூமியின் அருமைபெருமையைச் சுட்டி அன்றன்று நூதனமாகச் சிந்து-பதம் முதலிய செய்யுட்களை இயற்றி, செவிகூர்ந்து கேட்டு மனம் கனியப் பாடுவார்கள். இன்பமும் சுகமும் தரும் விதவிதமான போகங்களின் மர்மத்தை அவர்களுக்கு அடிக்கடி எடுத்துச் சொல்லி ஆசைகொளுத்துவார்கள். உதயாதி அஸ்தமனபரியந்தம் நாழிகைதோறும் உண்டாட்டும் கொண்டாட்டமுமே அவர்களுக்கு ஓயா மணியமாயிருந்தன. இந்த உபாயங்கள் சிதறாமற் பெரும்பாலும் சித்தித்தன. எல்லை தாண்டிச் செல்ல ராஜகுமாரர் எவரும் மனம்கொள்ளவில்லை. அவர்கள் உள்ளநாள் உள்ளமட்டும் இயற்கைப்பேறு செயற்கைப்பேறு இருவகைப்பேறும் தமக்குக் கைக்கு எட்ட அமைந்திருப்பதை ஐயமறக் கண்டு தேறினார்கள். உபசாந்தத்திற்கு உறைபதி ஆகிய அவ்விடத்தில் இருந்து வாழ இடம் பெறாமல், ஆழித்துரும்பென அங்கும் இங்கும் அலைந்து, சூறைக்காற்றிற் பதரெனப் பறந்து, துன்பத்திற்கு அடி

யாராகி அவஸ்தைப்படும் மனுஷரை நினைத்து நினைத்துப் பரிதபித்தார்கள்.

இவ்வாறே அவர்கள் அன்றன்று அதிகாலையில் எழுந்து பகல் முழுதும் கூடிக் குலாவி அவரவர் இதயம் களிகூர்ந்து, ராத்திரிகாலத்தில் கிலேசமற்றுப் படுத்து அயர்ந்து தூங்குவார்கள். ராஸிலஸ் ஒருவன்மாத்திரம் இருபத்தாறுவது பருவம் தொடங்கி அவர்கள் கேளிக்கைகளில் வெறுப்புற்று, அவர்கள் கூட்டத்திற் கூடாமல் தன்னந்தனியே உலாவி மௌன யோகப்பியாசம் செய்து உவக்கத் தலைப்பட்டான். அறுசுவை உண்டி வகை அனைத்தும் புஷ்களமாய் வட்டித்திருக்கும் பந்தியில் உட்கார்ந்து மற்ற ராஜகுமாரர் அவரவர் நாவிற்கு இதமான உண்டிகளைப் பரிவோடும் உண்ண, ராஸிலஸோ மெய்மறந்தவன்போல் உண்ணுதிருப்பான். சிலவேளை சங்கீத காலக்ஷேபத்தில் யாவர் சிந்தையும் அழுந்தியிருக்கும் சமயத்தில் அவன் சரேலென்று எழுந்து அந்தக் கானம் செவிக்கு எட்டாத தூரத்திற்கு விரைந்து செல்வான். குற்றேவல் செய்வோர் அவன் குணம் மாறியதுகண்டு அவனுக்கு மீளவும் சிற்றின்பத்தில் ஆசை புகட்டப் பார்த்தனர். தன்னைக் காத்து இங்கிதம் பேசும் அவர்கள் சொல்லை அவன் லக்ஷியம் செய்கிறதில்லை. அவர்கள் வரவழைக்கும்பொழுது மறுத்து, மரம் அடர்ந்து நிழலிட்டிருக்கும் ஒதுக்கிடமாகிய நதி தீரத்திற்குப் போய், குயில் முதலிய பக்ஷிகள் கிளைகளிற் படிந்து இனிதாய்க் கூவுவதைச் செவிகொடுத்துக் கேட்பான்; சிலவேளை இளவாளை வரால் கெண்டை முதலிய மச்சங்கள் நீரிற் பாய்வதைப் பார்ப்பான்; அடுத்து, பசும்புல் நிலத்திலும், மலைச்சாரிலும் ஆடு மாடு குதிரை கழுதை முதலிய நாற்கால்

விலங்கினம் திரளாய்ச் சேர்ந்து உலாவித்திரிவதைக் காண்பான். அவற்றுள் சில தழை பூண்டு புல் மேயும்; சில அடர்ந்த செடி ஒதுக்கில் அச்சமறப் படுத்து உறங்கும். ராஸிலஸுக்கு இந்த விசித்திரம் உண்டானதை எல்லாரும் கவனித்தனர். அங்குள்ள அறிஞரில் முக்கியமாய் ஒருவருடன் வார்த்தையாடுவது முன்பு அவனுக்கு ஆனந்தமாயிருக்கும். அவர் அவன் மனச்சஞ்சலத்திற்கு நிமித்தம் எதென்று கண்டறிய நாடி ஒரு நாள் அந்தரங்கமாய் அவனைத் தொடர்ந்துபோனார். அவர் அண்டையிற் போயிருந்ததை அறியாமல், ராஸிலஸ் மலைச்சாரிபில் தழை மேய்ந்துகொண்டிருந்த வெள்ளாடுகளைச் சிறிது நேரம் உற்றுப்பார்த்து, தனக்கும் அவைகளுக்கும் உள்ள தாரதம்மியத்தைச் சொல்லத் தொடங்கினான்.

அவன் வாய்ப்பிறப்பு இது:—"மனுஷர் இயற்கை ஒன்றும், மற்றுள்ள ஜீவகோடிகள் அனைத்தின் இயற்கை ஒன்றுமாக வேறுபடும் காரணம் என்ன? என் அண்டையிற் சஞ்சரிக்கும் விலங்குஜாதி அனைத்திற்கும் எனக்கு உள்ள தேக உபாதிகள் உண்டு. பசிக்கும்பொழுது, அவை பசி அடங்கப் புல் மேயும்; தாகம் எடுக்கும்பொழுது, தாகம் தீரத் தண்ணீர் குடிக்கும். இவ்வாறு பசி தாகம் தீரவும் அவை திருப்தி அடைந்து நித்திரைசெய்யும். அயர்ந்து தூங்கி விழித்து எழுந்தபின்னும் உண்டாகும் பசிதாகத்தை மேற்சொல்லியபடி தீர்த்துப் பதைப்புறுதிருக்கும். அவ்விலங்கைப்போல் எனக்கும் பசிதாகம் முதலிய தேக உபாதிகள் உண்டு. இந்த உபாதிகள் அன்னபானாதிகளால் தீர்ந்தபின்னும், என் பதைப்புத் தீருகிறதில்லை. பசி தாக முதலிய குறைகளால் விலங்கும் வருந்துகின்றது. நானும் வருந்துகிறேன். அக்குறை தீரவும், விலங்குக்

குத் திர்பதி உண்டாகின்றது; எனக்கோ திர்ப்தி இல்லை. பசிதீர உண்டு, மீண்டும் பசிக்கிறவனாயில் என் மனம் குறுவிசாரப்படுகின்றது. பொழுது போகாமல் அலுப்பு உண்டாகின்றது. அன்னபானாதிகளில் விருப்பு உண்டாகும்படி பசிதாகம் மிஞ்சவேண்டுமென்று வாஞ்சிக்கிறேன். பறவைகள் காய்-கனி-தானியாதிகளைக் கொந்திப் பொறுக்கி இரைகொள்ளி நிறையத் தின்றபின், சோலைகளுக்குப் பறந்துபோய் விருக்ஷக்கொம்புகளிற் படிந்து களிகூர்ந்து கூவும். அவை கூவும் அடுக்கொலி அன்று ஒருவிதம், இன்று ஒருவிதமல்ல. விகற்பமின்றி என்றும் ஒரே விதமாயிருக்கும். நானும் கின்னரர் பாடகரை வரவழைத்து வீணாகானம் பண்ணுவித்துச் சங்கீத காலக்ஷேபம் செய்விப்பதுண்டு. உண்டெனினும், நேற்று என் மனதிற்கு இனிதாயிருந்த பண்ணை இன்றும் கேட்டால், அலுப்பு உண்டாகாமற்போகாது; நாளைக்குக் கேட்கில், பின்னும் அலுப்புப் பெருகும். அததற்கு உரிய போகம் தெவிட்டாத ஞானேந்திரியபலம் எனக்கு இல்லை. போகம் தெவிட்டினும், என் மனம் இன்பம் அறியாதிருக்கின்றது. இந்த ஸ்தலத்தில் எற்கும் நுகர்ச்சி இல்லாத சூக்ஷ்மமான ஆறுவது இந்திரியம் ஏதோ மனுஷருக்கு உண்டு. இது நிசம். பின்னும் சற்று தெளியச் சொல்லுகிறேன்.—பஞ்ச இந்திரியத்துக்குள் அமையாத ஆசை ஏதோ இருக்கின்றது. அவ்வாசை தீர்ந்தே ஆனந்தம் பிறக்கவேண்டும்."

இவ்வாறு மொழிந்தபின் ராஸிலஸ் தலைநிமிர்ந்து சந்திரோதய காலமாவது கண்டு, அரண்மனை முகமாய்த் திரும்பிப்போனான். வயற்காட்டு வழியாய்ப் போகும்பொழுது, நாலண்டையும் விலங்கினத்தைக் கண்டு, "நீங்கள் சுக

போகிகள். துக்கமனச்சுமை எடுத்துச் செல்லும் என்னைக் கண்டு உங்களுக்கு மாற்சரியம் உண்டாக நிமித்தம் இல்லை. சாத்மிக பிராணிகாள், உங்கள் பரமானந்தத்தைக் கண்டு நான் அசூயைப்படவுமில்லை. அது மனுஷர் இயற்கைக்கு உரிய பரமானந்தமல்லவே. உங்களுக்கு இல்லாத பரிசிரமம் அநேகம் எனக்கு உண்டு. துன்பப்படாதிருக்கும்பொழுது துன்பத்திற்கு அஞ்சுகிறேன்; சிறுபான்மை, மறந்துபோன துன்பத்தை நினைக்கவும் எனக்கு உதைப்பு உண்டாகிறது; சிறுபான்மை, இனித் துன்பம் வருமென்று எண்ணி என் நெஞ்சு அதிர்கின்றது. தெய்வம் மனுஷருக்கு நடுவுநிலை தவறாமல் இன்பத்தையும் துன்பத்தையும் ஏற்கும் அளவாய் நிறுத்துக் கொடுத்திருக்கிறது நிசம்" என்று சொன்னான்.

இவைபோலும் பலபல குறிப்புகளை வழிதொலையச் சொல்லிக்கொண்டு இளவரசன் அரண்மனைக்குத் திரும்பினான். அவன் இவைகளை மொழிந்தது தன் துயரை வாய்விட்டு அழுது அழுது சொல்லும் மாதிரியாக. கூரிய புத்திமானதலால், அவனுக்குச் சிறிது சந்தோஷம் பிறந்தது. இப்பிறவித் துயரை நெஞ்சில் அழுத்தாமல் புளியம் பழமும் ஓடும்போலப் பட்டும்படாமல் அனுபவித்ததைத் தன் நெஞ்சு அறிந்து தன் குறை கூறியதினால், அவன் மனம் சற்றுத் தேறியது. இது அவன் முகக்குறியால் விளங்கிற்று. அன்று இராத்திரி அவன் பிறருடன் கூடி, நடந்த விநோதங்களில் சிந்தைவைத்தான். இதை முக மலர்ச்சியால் அறிந்து, அவன் மனோதுக்கச்சுமை குறைந்ததென்று எல்லாரும் சந்தோஷித்தனர்.



# 3—ம் அதிகாரம்.



## குறை ஒன்றும் இல்லாதவனுக்கு உள்ள குறை.

மறுநாள் வார்த்திகராகிய வித்தியாகுரு ராஜகுமாரனுடைய மனேவியாதிக்கூறு தமக்கு மயக்கமறத் தெரிந்ததாகப் பாவித்து, புத்தி புகட்டி அப்பிணியைத் தீர்க்க நினைந்து, அவனைத் தரிசித்து வார்த்தையாடும்படி இங்கிதம் பேசிச் சமயம் பார்த்திருந்தார். அவர் அறிந்தனவெல்லாம் தனக்குக் கற்பித்தாயினவென்று இளவரசன் மதிப்பிட்டிருந்ததனுல், குருவைத் தன் அண்டையிற் சேர்க்க முக்கியமாய் விரும்பவில்லை. "இவர் என் இப்படி வலிய நுழைய வருகிறுர்? கல்வி நூதனமாயிருக்கும் பொழுதே எனக்கு இன்பமாயிருந்தது. கற்றறிந்த கல்வியை மறந்தாலல்லவா அது மீளவும் நூதனமாகும்? அதை மறக்க இவர் என்னை ஒருபொழுதும் விடாரா?" என மொழிந்து, அவன் வனத்திற் புகுந்து, வழக்கப்படி சிந்தனை செய்ய உட்கார்ந்தான். அவன் நெஞ்சில் சிந்தனை உண்டாகி ஒரு துறையிற் செல்லுமுன் தொடர்ந்த குருவை அண்டையிற் கண்டு சற்றுப் பதைத்து, அவ்விடத்தினின்று விரைந்து விலக முதலில் எண்ணமிட்டான். அந்தக் குருவோ சாமானியரல்ல, முன்பு அவனுல் சம்மானிக்கப்பட்டவர்; அன்றளவும் அவன் உள்ளன்பைக் கொள்ளைகொண்டவர். ஆனதுபற்றி, அவருக்கு அபகா

ரம் செய்ய அவன் மனம் ஒப்பவில்லை. தன்னோடு ஸரி கரையில் உட்காரச் சொன்னான்.

'கொஞ்ச இடம் தந்தால் மிஞ்ச இடம் தேடிக்கொள் வான்' என்னும் பழமொழிப்படி, அந்த முதியவர் உட் கார இடம் பெறவும், சமீபகாலத்தில் சக்கரவர்த்தி புத்திரனுடைய குணம் மாறியதைப்பற்றிப் பிரலபித்து, "நீர் அரண்மனையில் நாளொருவண்ணம் நடக்கும் இன்ப காலக்ஷேபங்களை வெறுத்துத் தள்ளி, இவ்விடத்திற்கு அடிக்கடி தனித்து வந்து மௌனம் சாதிப்பதேன்?" என வினவினார். அதற்கு ராஸிலஸ் "இன்பபோகம் முன்போல் எனக்கு இனிதாயிருக்கவில்லை. ஆனது கொண்டு, போகத்தைப் போக்கடித்துவிட்டுப் போகி றேன். மனத்துயர் தீரத் தனித்திருக்க நாடுகிறேன். பிற ரோடு கலந்து அவர் சுகத்திற்கு இடர் செய்வது எனக்கு இதமல்ல" என்றான். அது கேட்டு, ஆசிரியர் "இன்பத் திற்கு இருப்பிடமாகிய இந்தப் பள்ளத்தாக்கில் துன்பப் படுவதாக என் செவிப்பட முதலிற் குறைகூறினவர் நீர் ஒருவரே. குறைகூறச் சிறிதும் ஏது இல்லையென்று உமக்கு உள்ளுற உணர்த்த வாஞ்சித்திருக்கிறேன். அபி ஸினிய சக்கரவர்த்திக்கு உள்ள வைபவங்கள் எல்லாம் குறையாமல் உமது ஸ்வாதீனத்தில் இருக்கின்றன. இங் குமக்குப் படுவதற்குப் பாடும் இல்லை, அஞ்சுவதற்கு அபாயமும் இல்லை. இல்லாதிருந்தும், பாட்டினாலும் அபாயத்தினாலும் விளையும் பயன் அனைத்தும் இங்குண்டு. நாற்றிசையும் பார்த்துச் சொல்லும். உமக்கு இங்கே தீராதிருக்கின்ற குறை என்ன? குறை ஒன்றும் இல்லாதி ருந்தால், மனக்குறை உண்டாவதேன்?" என்று கேட் டார்.

இப்படி ஆசிரியர் கேட்ட கேள்விக்கு ராஸிலஸ் பகர்ந்த மறுமொழி இது:—“குறை ஒன்றும் எனக்கு இல்லாதிருப்பதும், இருந்தால் அது இன்னதென்று அறியாதிருப்பதுமே என் மனக்குறைக்கு நிமித்தமாம். நெஞ்சறிய எனக்கு ஏதும் குறை இருந்தால், அதைத் தீர்க்க ஆசை உண்டாகும். அவ்வாசை முயற்சியைத் தரும். முயற்சி பிறந்தால், ஆதித்தன் அஸ்தகிரிசேர நெடும்பொழுது செல்கின்றதேயென்று என் மனம் பதைக்காதே; நித்திரை ஒழிந்து அறிவு தெளிந்து பொழுது விடியவும், நான் பிரலபிக்க நிமித்தம் இராதே. வெள்ளாட்டுக்குட்டி செம்மறியாட்டுக் குட்டிகள் ஒன்றையொன்று தொடர்ந்து ஓடுவதைப் பார்க்கும்பொழுது, அவ்வாறு தொடர எனக்கும் யாதாயினும் விஷயம் இருக்குமானல், ஆனந்தம் உண்டாகுமேயென்று என் இதயம் நினைக்கின்றது. வேண்டுவன யாவும் குறையாதிருப்பதனல், யாதொரு விகற்பமின்றி, நேற்றையதினம் அச்சம் இன்றையதினம்போலும், சென்ற நாழிகை செல்கின்ற நாழிகைபோலும் இருக்கின்றன. பின்னும் சொல்லில், எனக்கு ஒருநாள் அல்ல, ஒரு நாழிகை ஒரு வருஷம்போல நீடித்து நிற்கின்றது. என் சிறு பருவத்தில் ஒரு நாள் ஒரு நாழிகைபோலக் குறுகி விரைவிற் கழிந்தது. பிரபஞ்சப் பரப்பு விநோதமாகத் தோன்றியது. நிமிஷத்திற்கு நிமிஷம் முன் காணுத நூதனங்களைக் கண்டேன். நாள் என்பதை அவ்வண்ணம் குறுகத் தோற்றுவிக்கும் உபாயம் ஏதும் அறிந்தாற் சொல்லும். எனக்கு இப்பொழுதே போகம் தெவிட்டுகின்றது. விரும்பத்தகும் நூதனவிஷயம் ஏதும் காட்டும்.”—புதிதாய் விளைந்த இவ்வகைத் துயரைக் கண்டு அந்த வயோதிகருக்குப் பிரமை உண்டாயிற்று. ராஸிலஸ் கேட்ட கேள்விக்கு ஏற்

கும் உத்தரம் இன்னதென்று அவர் அறியவில்லை. மௌனமாயிருக்கவும் அவர் மனம் ஒப்பவில்லை. "துரையே, விஸ்தாரமான இவ்வையகத்தில் விளையும் துன்பம் துயரைக் கண்டறிந்திருப்பீரானால், உமது தற்கால நிலையின் அருமை பெருமையை அறிவீர்" எனப் பண்டிதர் சொல்ல, ராஜகுமாரன் "ஆஹா, விரும்பித் தொடர விஷயம் ஒன்று காட்டினீர். துன்பம் இன்றி இன்பம் இல்லை. ஆதலால் இனி இவ்வுலகில் உள்ள துன்ப துயரத்தைக் காணும் பேரவா எனக்கு உண்டாகின்றது" என்றான்.



## 4-ம் அதிகாரம்.



### ராஜகுமாரன் பின்னும் துக்கித்துச் சிந்தனைசெய்தது.



அவ்வேளையில் சிற்றுண்டி கொள்ளக் காலம் கிட்டியது. அது கீதவாத்திய ஓசையால் தெரியவந்தது. ஆனதுபற்றி, அம்மட்டிற் சம்வாதத்தை நிறுத்திவிட்டார்கள். தாம் நியாயம் சொல்லித் தவிர்க்கக் கருதிய சித்தாந்தமே அறுதியில் உறுதிப்பட்டதெனக் கண்டு, அந்த வயோதிகர் மெத்தவும் சலிப்புற்றுப் போய்விட்டார். வெகுகாலம் எடுத்து எடுத்து வழக்கப்பட்ட சுமையை மனுஷர் எளிதில் எடுத்துக்கொண்டு போவார்கள்; தம்மை அவமதி செய்யும் இளையோரை முதியோரும் அவமதி செய்வார்கள்; மரணதூதன் கரத்தால் ஒழிவிக்க எத்தனிக்கும் உபத்திரவத்தை மனுஷர் பாராட்டுகிறதில்லை. ஆகவே, பரு

வம் சாய்ந்தவர்களுக்கு வெட்கமும் துக்கமும் நீடித்து நில்லா.

மனக்கருத்தை நெடுந்தூரம் செலுத்திப் பார்த்து வழக்கப்பட்ட சக்கரவர்த்தி புத்திரனுக்கு உண்டான மனோவிகாரம் விரைவில் தணியவில்லை. நாள் ஏற இருப்பவர்கள் சுமந்து உத்தரிக்கவேண்டிய பாரம் மிகுதியென்று முன்பு அவன் சிந்தனையிற் பட்டது. ஆனதுபற்றி, வாலிபனாகிய தனக்கு இவ்வுலகில் அல்லலும் அலைச்சலும் தீர வெகுகாலம் செல்லுமென்று எண்ணி அவன் இதயம் பகீரிட்டது. காலம் நீடித்தாற் செய்தொழில் பெருகுமென்று இப்பொழுது கண்டறிந்து, தான் பாலியனாயிருப்பதை எண்ணி மனம் மகிழ்ந்தான். ஆசை என்னும் சூரிய விம்பத்தினின்று ஒரு கதிர் அவன் உள்ளத்தை உருவச் செல்லவும், இளமை பெயர்ந்து, முகம் மலர்ந்து, அவன் விழி இரண்டும் ஒளி இரட்டித்தன. யாதாயினும் ஒரு கருமத்தைச் செய்யும் ஆசை என்னும் நெருப்பு அவன் இதயத்தில் மூண்டது. அதைச் செய்து விளையும் பயனும், செய்ய உதவும் சாதனமும் அவனுக்குத் தெளியத் தெரியவில்லை. அன்று தொடங்கி ஒருநாளும் அவன் குறுவிசாரப்படவுமில்லை, மனுஷரோடு கலந்து அளவளாவாதிருக்கவுமில்லை. ஒளித்துவைத்தன்றி அனுபவிக்கக்கூடாத இன்பம் என்னும் சரக்கு எவரும் அறியாமல் தன் கையிருப்பாயுள்ளதை எண்ணி, எவ்வகை விநோதத் துறையிலும் இறங்கியவன்போல நடித்து, தனக்கு அலுப்பு உண்டாக்கிய நிலையிற் பிறர்க்கு இதம் உண்டாக்கப் பகைத்தான். ஆனாலும், ஒன்று வாஸ்தவம். இன்பம் எவ்வளவு பெருகினும், இடையறாது நீடிப்பினும், மனுஷர் வாழ்நாளின் அதிக பாகம் செயலொழிந்து வியர்த்த

மாய்க் கழியுமேதவிர், மற்றப்படியல்ல. எவரும் அறியாமல் தன்னந்தனியே இருந்து யோகாப்பியாசம் செய்ய ஒழிந்த நாழிகை அவனுக்கு இராப்பகல் இருபொழுதும் மிகவும் உண்டு. அந்தப் பள்ளத்தாக்கில் இருப்பது முன் அவனுக்குத் தாங்க அரிய பாரமாகத் தோன்றிற்று. பின்னிட்டு அந்தப் பாரம் மிகவும் லேசாயிற்று. அடிக்கடி ஜனசங்கத்திற் கலப்பது தன் தாற்பரிய சித்திக்கு ஆவசியகமென்று எண்ணி அவன் ஆவலுடன் செல்வான். சிந்திக்க விஷயம் இருந்ததனால், ஜனசங்கத்தினின்று சந்துஷ்டியாய் விலகித் தனித்திருப்பான். முன் எப்பொழுதும் கண்டிராத இவ்வுலகப் பரப்பைப் படத்திற் சித்திரித்திருக்குமாப்போலக் கருத்தினாற் கண்டு, வெவ்வேறு நிலைகளில் தன்னை நாட்டி, இல்லாத இன்னல் இடைஞ்சல் அல்லல் அவதிகளைக் கற்பித்து அவைகளில் சிக்குண்டு, வம்பாய் முடியும் சண்டைகள் தொடங்கியதாக மனோபாவனை செய்வதே அவனுக்கு முக்கிய காலக்ஷேபமாயிருந்தது. பரோபகாரசிந்தை அவனுக்கு ஜன்மப்பிரகிருதி. ஆதலால், இடர் தீர்ப்பது-கள்ளம் கபடம் சூது கண்டு வெளியிடுவது—நிஷ்டூரம் செய்வோரைத் தலைப்படவிடாமல் அடக்குவது – சுகத்தைப் பெருக்குவது முதலிய சத்கிரியைகளில் அவன் சிந்தனை சென்றது.

ராஸிலஸின் வாழ்நாளில் இருபது மாசகாலம் இவ்வாறு கழிந்தது. மனோரதமான ஆதாளியில் அவன் மனம் அழுந்தப் பிரவர்த்தித்திருந்ததனால், ஏகாந்தவாழ்வின் மர்மத்தை மறந்திட்டான். உலகத்தில் மனுஷருக்கு அவரவர் நிலையில் நேரிடும் பற்பல நிகழ்ச்சிகளுக்கு வேண்டும் எத்தனங்களை நாழிகைதோறும் சிந்தித்து, ஜனசங்கத்திற் கலந்து உறவாடுமுறைகள் எவ்வையென்று சிந்தையிற் கொள்ளாது விட்டான்.

ஒருநாள் நதிதீரத்தில் உட்காந்திருக்கையில், நண்பனென்று இதம் சொல்லிச் சதி நினைந்த ஒருவன் தந்தை தாய் தமர் இல்லாத கன்னிப்பருவப் பெண்ணொருத்திக்கு உள்ள அற்ப சொத்தைக் கொள்ளையிட்டுக்கொண்டு ஓட, அப்பெண்பேதை தன் சொத்தைக் கொடுத்துவிடும்படி அழுதழுது கேட்டு அவனைத் தொடர்வதாக ராவிலஸ் மனோபாவனை செய்தான். இந்தப் பாவனை அவன் நெஞ்சில் முத்திரித்தாற்போல் அழுந்தியிருந்ததனால், அந்த அனாதகன்னியைத் துணைநின்று ரக்ஷிக்க நினைந்து குதித்தெழுந்து, அவன் கண்ணுக்கு எதிரிற் கண்டு காதலித்துத் தொடர்வதுபோல, கள்வனைப் பிடிக்கக் கருத்தில் விரைந்தோடினான். தோஷத்தின் கதிக்கு அச்சத்தால் தீவிரம் உண்டாவது இயற்கை. ஓடின கள்வனை ராவிலஸ் மூச்சு அடக்கிப் பறந்து தொடர்ந்தும், அகப்படுத்த முடியவில்லை. விரைந்து ஓடி அகப்படுத்த முடியாதிருந்தும், விடாது ஓடிக் களைக்கப்பண்ண நிர்ணயித்து, மலையடிவாரம் கிட்டுமளவும் ராவிலஸ் அவனைச் சலிப்பற்றுத் தொடர்ந்தான். அப்பால் ஓட வழி இல்லையே.

இம்பட்டில் மெய்மறந்திருந்த அவன் அறிவு தெளிந்து, வீணிலே வேகமாய் ஓடியதை எண்ணி நகைத்தான். பின்பு மலைச் சிகரத்தை அண்ணாந்துபார்த்து, "சுகபோகத்தையும் சுகிர்தத்தையும் ஒருங்கு தடுக்கும் படுதண்டா இதுதான். என் வாழ்நாளுக்கு எல்லையாக ஏற்பட்ட இந்த மலையின் உச்சியை என் ஆசையும் இச்சையும் தாண்டி எத்தனைநாட்சென்றது. நானோ இம்மலையைக் கடக்க ஒருநாளும் எத்தனிக்கவில்லையே!" என மொழிந்தான். பின்பு இந்தச் சிந்தனை அவன் நெஞ்சைத் தாக்க, அவன் யோகாப்பியாசம் செய்ய உட்காந்தான். சிறையினின்று விலகும்

நிர்ணயம் தன் நெஞ்சிற் பிறந்து கிட்டத்தட்ட ஒரு வருஷமாயிற்றென்று அவன் நினைவுகூர்ந்தான். அப்பொழுது அவன் உள்ளம் என்றும் படாத பாடு பட்டது. வியர்த்தமாய்க் கழிந்த காலத்தில் நன்முயற்சி மெத்தவும் செய்யலாகுமேயென்று அவன் எண்ணினான். மனுஷர் வாழ்நாளுக்கும் இருபது மாசத்திற்கும் அவன் ஒப்பு—உயர்வு—தாழ்வு பார்த்தான். அவன் வாய்ச்சொல் இது:— "பேதைமையுள்ள இளப்பருவமும், பலம் ஒடுங்கும் முதிர் பருவமும் மனுஷர் வாழ்நாட் கணக்கிற் சேரா. ஒன்றைச் சிந்தித்து யுக்தம் அயுக்தம் தெரியும் சக்தி வாலிபருக்கு உண்டாக வெகுநாள் செல்லுகின்றது. ஆடவருக்குச் செய்திறம் விரைவில் ஒழிந்துபோகின்றது. தப்பறப் புத்திபூர்வமாய் மதிப்பிட்டால், மனுஷருக்குப் பருவம் ஆக நாற்பது. இதில் இருபத்துநான்கில் ஒரு பாகமாகிய இருபது மாசத்தை அவமே சிந்தனையிற் போக்கினேன். போன காலம் உள்ளது. அது என் சுவாதீனத்தில் இருந்ததற்கு ஐயம் இல்லையே. இனி வரும் இருபது மாசம் எனக்குச் சுவாதீனப்படுமென உறுதிசொல்லமாட்டுவார் யார்?"

அவன் மதியீனத்தை அவன் நெஞ்சு அறிய, அவ்வறிவு கூரம்புபோல அவன் இதயத்தை ஆழ ஊடுருவித் தொளைத்தது. அவன் நெறி அவனுக்கே சமாதானப்பட வெகு காலம் சென்றது. "என் காலத்தில் மேற்குறித்தது போக, மீந்தது என் மூதாக்கள் தோஷத்தாலும், துர்ப்புத்தியாலும், நியாய விரோதமான தேசாசார மதாசாரங்களாலும் கைகடந்துபோயிற்று. அதை நினைக்க நினைக்க, எனக்கு வெறுப்புத் தட்டுகின்றது. மனோபாதியோ இல்லை. என் இருதயத்தில் புது ஒளி உதயமாகியபின், நான் யுத்திபுத்திக்கு ஏற்கச் சுகம் பெறும் உபாயம் சூழ்ந்தபின் சென்றமாசம் எத்தனை, அத்தனையும் வியர்த்தமாய்க்

கழிந்தது என் தோஷமே. மீண்டு ஒருபொழுதும் அகப்படாத அரும்பொருளைப் போக்கடித்தேன். சென்ற இருபது மாசகாலம் நித்தநித்தம் உதயாதி அஸ்தமனபரியந்தம் வாளெளியைச் செயலொழிந்து பார்த்த மணியமாயிருந்தேன். இதன் இடையிற் பரிபவித்த குருவிக்குஞ்சுகள் வளர்ந்து, தாய்க்குருவியின் கூட்டைவிட்டுப் பறந்து, ஜாதித் தன்மைப்படி சில வனத்திலும், சில ஆகாயத்திலும் சஞ்சரிக்கப் போய்விட்டன. வெள்ளாட்டுக்குட்டி தாய் முலை மறந்து, நாளாவர்த்தியில் மலைஏறப் பயின்று யதேச்சையாய்த் திரிந்து, தழை குழை மேய்ந்து பிழைக்கின்றது. நான் ஒருவன்மாத்திரம் விர்த்தியடையாமல் இன்றளவும் அகதியாகவும் முட்டாளாகவும் இருக்கிறேன். இருபது முறைக்கு அதிகம் கலை வளர்ந்து தேய்ந்துகொண்டுவந்த சந்திரன் வரவரப் பருவம் ஏறுவதை எனக்கு உணர்த்தியது. என் பாதத்தண்டை அலை புரண்டு ஓடிய நதி என்னைச் சோம்பனென்று கடிந்துகொண்டது. பூகோள கதியையும் கிரகங்கள் உணர்த்தும் பாடத்தையும் எண்ணமல் உட்காந்து யனுபவ உண்டியை உண்டு களித்தேன். இருபது மாசகாலம் சென்றது. சென்ற காலத்தைத் திரும்பி வருவிப்பவர் யாவர்?" என்று அவன் மொழிந்தான்.

துயர் தரும் இச்சிந்தனைகள் அவன் இதயத்தில் அறைந்த ஆணிபோல் அழுந்தியிருந்தன. இனி வியர்த்தமான நிர்ணயம் செய்து வீண்பொழுது போக்காதிருக்கும்படி அவன் மனவுறுதிசெய்யப் பின்னும் நாலுமாசம் சென்றது. ஒருநாள் பீங்கான் ஒன்றைக் கைப்பிழைப்பாடாய் உடைத்த மனுஷி தீராப்பழுதை நினைத்துத் துக்கிக்கலாகாது என்று சொன்ன சொல் கேட்டு, தூங்கின அவன் சடிதியில் விழித்துப் பின்னும் அதிக மனவுறுதியோடு முயற்சி செய்ய நிர்ணயித்தான்.

ஞாது திர்ஷ்டிகோசரமாயிருந்தது. இதை முன்னடிக் கண்டறியாதது தன் குற்றமென்று ராஸிலஸ் தன்னையே நொந்துகொண்டான். முன் அறியாமலும், அறிந்து நினைக்காமலும் இருந்த காரியானுகூலமான குறிப்புகள் எத்தனை எத்தனை இருந்தாற்போல ஆகஸ்மீகமாய் மனதிற்குப் புலப்படும். எத்தனை முறை மனமானது தூரதிர்ஷ்டி விஷயங்களை ஆவலாய்ப் பற்றப் பதைத்து, அதன் எதிரில் கண்கூடாயிருக்கும் மெய்ப்பொருளை உபேக்ஷையாய் விட்டுவிடுகின்றது. ராஸிலஸ் நாலைந்து நாழிகைநேரம் தன் மனநோவை நினைந்து அதற்காக மனம் நொந்தான். அதுமுதல், இன்பத்திற்கு உறைவிடமாகிய அந்தப் பள்ளத்தாக்கினின்று தப்பும் வகை யாதென்று அவன் மனம் குவிந்து சிந்திக்கத் தொடங்கினான்.



## 5-ம் அதிகாரம்.



### சக்கரவர்த்திபுத்திரன் தப்ப உபாயம் சூழ்ந்தது.



ஒன்றைச் சாதிக்கலாகுமென்று உத்தேசிப்பது எளிது, சாதிப்பதோ மிக அரிது என்று பின்னிட்டு அவன் எண்ணத்திற் பட்டது. அவன் நாலண்டையும் சுற்றிப்பார்த்து, வலிய உருவாகி ஒருநாளும் பின்னப்படாத தாழ்ப்பாள் இட்டுக் கதவடைத்த மலைமதில் சூழ்ந்த கோட்டைக்குள் தான் சிறையிருப்பதைக் கண்டான். அந்தக் கதவு திறந்து ஒரு முறை உட்செல்வோர்க்கு அப்புறம் மீட்சி இல்லை. அவனுக்கு இப்பொழுது இருப்புக்கிராதிக் கூட்டில்

விட்டு அடைத்த கழுகைப்போலப் பதைப்பும் உதைப்பும் உண்டாயின. மலைவழி ஏதும் புதர்மறைவில் இருந்தாலும் இருக்குமென்று அவன் அடுத்து அநேக வாரம் மலை ஏறிப்பார்த்தான். மலையின் உட்பக்கம் கவிந்திருந்ததனால், சிகரத்திற் போய்ச்சேர மாளவில்லை. இருப்புக்கதவு திறக்கும் ஆசை வீணாசையென்று அவன் உள்ளம் சலித்தது. அக்கதவிற்கு இட்டிருந்த பூட்டு வலியது. முறை மாறித் துவாரபாலகர் நித்தமும் அங்கு இருந்தனர். கதவு இருக்கும் இடம் அங்குள்ள குடிகள் அனைவருக்கும் பகல் இரவு அறுபது நாழிகையும் தடையறத் தோன்றும் இடம்.

அதன்பின் எரிநீர் வடிகாலாகிய கற்புழையை ராவிலஸ் பரீக்ஷித்தான். அந்தப் புழைவாயில் வெயில் தீக்ஷணமாய் எறிந்ததனால், அதற்குள் உடைந்து நிறைந்திருந்த கல்லின் திரள் அவன் கண்ணுக்கு மயக்கமறத் தெரிந்தது. அதில் விழும் நீர் தங்காமல் கல்லுக்கும் கல்லுக்கும் இடையில் உள்ள பல சந்துவழியாய் இறங்கியது. கனத்துக் காத்திரங்கொண்ட வஸ்து எதுவும் விழுந்தால், அது விழுந்த இடத்தில் தங்குவதொழிய இறங்காது. அவன் இந்த மர்மம் அறிந்து மனம் மடிந்து திடனற்றுத் திரும்பினான். ஆனாலும், ஆசை எனும் வரப்பிரசாதம் இப்பொழுது அவனுக்கு அமைந்திருந்ததனால், அகதியானேனென்று இனி ஒருநாளும் பரிதபிப்பதில்லையென நிர்ணயித்தான்.

இவ்வித வீண்சோதனைகளிற் பத்து மாசம் கழிந்தது. பயன் ஒன்றும் அல்லாதிருந்தும், அந்தக் காலம் அவனுக்கு இதமாகச் சென்றது. காலையில் எழுந்திருக்கும்பொழுது அவன் இதயம் நூதன ஆசை பூரித்திருக்கும். மாலையில் அவன் தன் செய்தொழில் முயற்சியைப் பாராட்டு

வான் இராத்திரியில் அலுப்புத் தீர அயர்ந்து நித்திரை செய்வான். உழைப்பின் கஷ்டத்தை மறக்கடித்து மனதை அலுப்புறுவண்ணம் பல துறைகளில் செலுத்திய காலக்ஷேபங்கள் அவனுக்கு மெத்தவும் வாய்த்தன. ஜீவகோடிகளுக்கு இயற்கையான பற்பல குணங்களையும் மூலவர்க்கத்திற்கு உரிய கூறுகளையும் அவன் நுணித்து உணர்ந்தான். அவ்விடம் எங்கும் அவன் கண்ணுக்கு எதிர்ப்பட்டனவெல்லாம் விந்தை விந்தையாயிருந்தன. விரும்பியபடி அங்கிருந்து என்றாளும் மீட்சிபெற இசையாதிருக்குமாகில், அவ்விந்தை விநோதங்களைச் சிந்தித்தாயினும் மனம் தேறலாகுமென்று அவன் நினைத்திருந்தான். செய்த பிரயத்தனங்கள் சிதறியும், ஆய்ந்து ஆய்ந்து தீராத அரிய விஷயம் அப்பிரயத்தனங்களால் வாய்த்ததை நினைந்து மனம் களிகூர்ந்தான்.

ஆதியில் அவனுக்குள்ள அதிசயம் கண்டறியும் அபேக்ஷையோ தணியவில்லை. லௌகிக தர்மம் சிறிது அறிந்துகொள்ள அவன் நிர்ணயித்தான். அவனுக்கு ஆசை அன்றுள்ளபடி இன்றும் உண்டு. ஆசைப்பட்டது கிட்டுமெனும் மன உறுதியோ குன்றியது. அவன் சிறைச்சாலை மதிலை ஏற இறங்கப் பார்த்துக்கொண்டு வரும் வழக்கத்தை அன்றுதொட்டு விட்டுவிட்டான். பின்னும் கஷ்டப்பட்டுச் சந்துபொந்து பார்த்துத் திரிவதும் அவமென்று தள்ளிவிட்டான். சந்து காண்பது அசாத்தியமென அவன் நெஞ்சு அறியுமே. ஆனாலும், அஜாக்கிரதையாயிராமல் தன் அபிப்பிராயத்தில் திர்ஷ்டிவைத்துக்கொண்டிருக்கவும், வரவரத் தோன்றும் எந்த உபாயத்தையும் விடாது பற்றவும் நியதி செய்தான்.



# 6-ம் அதிகாரம்.

## பறக்கும் வித்தை பயிற்றும் பிரபந்தம்.

இன்பத்திற்கு இருப்பிடமாகிய பள்ளத்தாக்கு வாசிகளுடைய சுகத்துக்கும் ஆனந்தத்துக்கும் ஏற்கும் எத்தனம் செய்ய அங்கு அடைந்த வித்தகர் வகுப்பில் பல யந்திரங்களை நன்குணர்ந்த ஒருவன் இருந்தான். அவன் பிழைப்புக்கும் பொழுது போக்குக்கும் உதவும் யந்திரங்கள் பல யூகித்து நிர்மாணித்தான். நீரிற் சுழலும் சக்கரம் ஒன்று நீரை எழுப்பி ஒரு கோபுரத்திற் செலுத்தும். அங்கிருந்து அந்தத் தெண்ணீர் அரண்மனை அறைகள் அனைத்திற்கும் வெவ்வேறு மார்க்கமாய்ப் போய்ச் சேரும். அன்றியும் அந்த யாந்திரிகன் உத்தியானத்தில் அடித்த கூடாரம் ஒன்றில் இருந்து சமீபத்தில் நாற்றிசையும் மழை வருஷிப்பதுபோல நீர் இறைத்து இளங்குளிர்காற்று உலாவும்படி யந்திர உபாயம் ஏற்படுத்தியிருந்தான். பிரத்தியேகமாய்ப் பெருமாட்டிகள் உலாவும் பூங்காவனம் ஒன்றில் ஆற்றுக்கால் நீர் ஓடும் வேகத்தால் ஆலவட்டங்கள் தடையறச் சாமரை இரட்டுவதுபோல் அசைய, வனம் எங்கும் ஆரோக்கியமான இளங்காற்று உலாவும். தூரம் அளந்து ஒன்றுக்கொன்று ஏற்கும் இடத்தில் வைத்திருக்கும் யாழ்முதலிய சில கீதக்கருவிகள் காற்றுத் தாக்கியும், சில நீர் தாக்கியும் சேஷ்டிக்க, செவிக்கு இனிய மிருதுவான நாதம் பிறக்கும்.

சிறை நீங்கி உலகப்பரப்பிற் செல்ல இடம்பெறும் பொழுது கற்றறிந்தனவெல்லாம் சமயத்திற்கு உதவுமென்று எண்ணி நானு கல்வித்துறைகளையும் பரிந்து வருந்திக் கற்ற ராஸிலஸ் மேற்சொல்லிய வித்தகனைச் சில தருணங்களில் கண்டு வார்த்தையாடுவதுண்டு. வழக்கப்படி ஒரு நாள் ராஸிலஸ் அவனைக் கண்டு சம்பாஷித்துப் பொழுது போக்கப் போனபோது, அவன் மரக்கலத்தைப்போலப் பாய்வலித்து ஓடும் ரதம் ஒன்று நிர்மாணித்துக்கொண்டிருந்தான். வித்தகன் கருதியபடி அந்த ரதம் ஒப்பமான தரையில் செல்வது சாத்தியமென்று கண்டு, ராஸிலஸ் அவன் யுத்தியை வியந்து பாராட்டி, வேலையை அரைகுறையின்றி முடிக்க நயந்து கேட்டான். அந்தக் கைவினைஞன் சக்கரவர்த்தி புத்திரனுல் தனக்கு இத்தனை மதிப்பு உண்டானது கண்டு இதயம் மகிழ்ந்து, பின்னும் உயர்ந்த கௌரவம்பெற வருந்தி உழைக்கும்படி நிர்ணயித்தான். அப்பால் யாந்திரிகன், "துரைசிங்கமே, யாந்திரிக வித்தையின் துணையால் இயற்றக்கூடும் அதிசயங்கள் எண்ணிறந்தன உண்டு. தாங்கள் கண்டவைகள் இரண்டொன்றுதானே. மனுஷர் நிலத்திலும் நீரிலும் போக வர வாகனமாய்ப் பிரயோகிக்கும் ரதமும் மரக்கலமும் குறித்துச்செல்லும் இடத்தில் கடுகெனக் கொண்டுபோய்ச் சேர்க்கத்தக்கவைகளல்ல; அவை தாமசகதியாய்ச் செல்வன. எற்கும் எத்தனம் செய்து, மனுஷர் பக்ஷிகளைப்போல் இறகு கட்டி விரைவில் பறக்கினும் பறக்கலாம். வாயுவின் குணத்தையும் கிரியைகளையும் கலைகள் தப்பற வகையறுத்திருக்கின்றன. மனுஷரில் மூடரும் சோம்பரும்தவிர, மற்றவர்கள் பூச்சி புழுக்களைப்போலத் தரையில் நகர நிமித்தம் இல்லை. இந்தத் தாற்பரியம் என் இதயத்தில் உற்பத்தியானது இன்று நேற்று அல்ல, வெகு நாள் முந்தியே" என மொழிந்தான்.

எரிகிற நெருப்பில் நெய் விட்டதுபோல, யாந்திரிகன் வாக்கினின்று பிறந்த இம்மொழி செவிப்படவும், ராஜகுமாரன் இதயத்தில் மூண்டிருந்த மலை தாண்டும் ஆசை எனும் நெருப்பு பக்குப்பக்கென்று எரிந்தது. யாந்திரிகன் இயற்றிய அதிசயங்களைக் கண்டு, பின்னும் பல அதிசயங்கள் இயற்றமாட்டுவானென்று எண்ண ராஜகுமாரன் மனம் உடன்பட்டது; உடன்பட்டும், இயலாதது இயலுமென்று எண்ணி, ஈற்றிலே ஏமாறித் துயருருவண்ணம் விஷயத்தை இன்னும் நுழைந்து விசாரித்தறிய அவன் சங்கற்பித்து, யாந்திரிகன் கேட்கப் பின்வருமாறு பேசினான்:—"உமது சம்பாவனை செய்திறத்தை மேற்கொண்டதுபோலும். நீர் அறிந்ததையல்ல, ஆசையுற்றிருப்பதைச் சொன்னீரென்று என் மனம் சிறிது ஐயப்படுகின்றது. பிராணிகள் அனைத்திற்கும் அதததற்கு உரிய பதவி பகவானால் ஏற்பட்டிருக்கின்றது. பக்ஷிஜாதி சஞ்சரிப்பது ஆகாயத்தில் மற்ற விலங்குஜாதிகளும் மனுஷரும் பூமியில்." இப்படி ராஸிலஸ் சொல்ல, யாந்திரிகன், "வாஸ்தவந்தான். அவ்வாறே மச்சஜாதி வாழ்ந்திருப்பது நீரில். நாற்கால் விலங்குகள் நீரில் நீந்துவது சகஜம். புத்தியால் சில உபாயங்களை அனுசரிக்கும் மனுஷருக்கும் நீந்தும் யோக்கியதை கைவரும். ஏற்கும் உபாயம் சூழ்ந்து நீரில் நீந்தப் பயின்றவன் எத்தனித்தால் அவ்வாறே ஆகாயத்தில் பறக்கவுங்கூடாதா,—கூடாதென்று எண்ணித் துயருற நிமித்தம் இல்லையே. நீந்துவதும் பறப்பதும் ஒன்றே. நீந்துவதற்கு நிலை நீர், பறப்பதற்கு நிலை வாயு. நீர், வாயு இவ்விரண்டும் திரவம்.—ஆனால் நீர் ஸ்தூல திரவம், வாயு சூக்ஷ்ம திரவம்—இதுதான் இவ்விரண்டுக்கும் உள்ள பேதம். நாம் ஊடறுத்துச் செல்லும் நீர்—வாயு

இவ்விரண்டின் அணுவடர்த்தி — அடர்த்தியின்மையை அளவறுத்து, அவ்வளவிற்கு ஏற்கப் பலம் கூட்டியும் குறைத்தும் தாங்குவதன்றி, மற்றொரு புதுமையும் செய்ய வேண்டுவதில்லை. தமது உடற்கனம் தாக்கி வாயு விலகும் விரைவினும் மிக்க விரைவுடன் மீண்டு அணைத்து அமர்த்து வீராணல், அவ்வாயு தம்மை விழவொட்டாமல் தாங்குவது நிசம்" என விரித்துரைத்தான்.

அப்பால் அரசன் மைந்தன் யாந்திரிகனை நோக்கி, "சொல்லக் கேளும், யாந்திரிகரே, நீந்தப் பயில்வது என்ன லேசா? மிகவும் கஷ்டம். நீந்துவோர்க்குக் கை கால்முதலிய அவயவங்கள் எவ்வளவு உரத்திருப்பினும், சற்று நேரத்திற்குள் சலித்துப்போம். ஆகாயத்தில் பறக்கும் சாதகம் உடலைப் பின்னும் வருத்துமென்று எனக்குச் சந்தேகம் தட்டுகின்றது. நீரில் நீந்தும் தூரத்திலும் அதிக தூரம் ஆகாயத்தில் பறக்க நிர்வாகம் இல்லாதிருப்போமா னல், சிறகு இருந்து உண்டாம் பெரும்பயன் என்ன?" என வினவினன்.

இதுகேட்டு யாந்திரிகன், "முதலில் தரையினின்று எழுவது கஷ்டந்தான். இதற்குத் திர்ஷ்டாந்தம் வீட்டில் வளர்க்கும் கோழி—வாத்துமுதலிய பக்ஷிகளின் இயற்கை யைக் கண்டு அறியலாம். தரையினின்று எழுந்து உயர உயர, பூமியின் ஆகருஷண சக்தியும் உடலின் குருத்துவ மும் படிப்படிப்பாய் இளைத்துவரும். உயரப் பறந்தபின் உடல் தரையில் இறங்காமல் அந்தரத்தில் நிற்கும். அப் புறம் எவ்வளவும் சிரமம் வேண்டுவதில்லை. அற்ப முயற் சியால் நெடுக்குக் குறுக்கு இருவழியும் பறக்கலாம். பல துறைகளிலும் நுழைந்து நுட்பவிசாரணைசெய்து பயின்ற துரையே கேளும், சிறகு கட்டிப் பறந்து ஆகாயத்தில்

வட்டமிடும் கலைவல்லோனுக்குக் கீழே பூமி பிரஜைகளுடன் உருள்வதையும், பூமியின் தினாந்தரகதியால் ஒரு அக்ஷரேகையின் எல்லைக்கு உட்பட்ட நானாதேசங்களும் அதனதன் இடத்தில் இருப்பதையும் தடையறக் கண்டு ஆனந்தம் உண்டாம். தரை—சமுத்திரம்—நகர்--வனம் இவை நடைபெறுவதைக் காண்பதும், வர்த்தகம் வளம்பெற நடக்கும் கடைகளைப்போல ரணகளங்களையும் அச்சமற்று ஆய்ந்தோய்ந்து பார்ப்பதும், கண்டகர் வாழும் குன்றம், நிலவளமுதலிய பலவளம் மலிந்து நிஷ்கலக ஸ்திதியில் பிரஜைகள் ஆசோதையாயிருக்கும் பிரதேசம் இவை கண்ணுக்கு எதிர்ப்படுவதும் உயரப் பறக்கும் மேற்படி கலைவல்லோனுக்கு எத்தனை இன்பமாயிருக்கும். நதி பரமென்று நாற்றிசையும் பெயர்பெற்ற நீல்நதி மார்க்கத்தை முழுதும் கண்டறிந்து தூரப் பிரதேசங்களுக்குப் போய், பூகோளத்தின் ஒரு முனைதொடங்கி மறு முனை வரையும் நெடுக்குக் குறுக்கு எங்கும் உள்ளவைகளைப் பரீக்ஷித்தறிவோம்” என்றான்.

பின்பு ராஜகுமாரன் “நீர் மொழிந்தனவெல்லாம் மெத்தவும் விரும்பத்தகும். கேவலம் மனோதிர்ஷ்டியாய்க் காணும் காற்றொடுக்கமான ஆகாயத்தில் உயரப் பறந்து உச்சுவாச நிச்சுவாசம் செய்து பிழைக்க வல்லவன் இல்லை. உயர்ந்த மலைச்சிகரங்களில் மனுஷர் உச்சுவாச நிச்சுவாசஞ் செய்வது கஷ்டமென்று சொல்லக் கேள்வி. உயரப் போகப்போக, காற்று உரம் குன்றி நுண்ணிதாகும். மிக உயர்ந்த செங்குத்தான மலைச்சிகரம் சேர்ந்த ஒருவன் அடி சறுக்கினால் கீழே தரையில் விழுவதற்கு ஐயம் இல்லை. ஆகவே ஜீவனுக்குத் தாயகமான வாயு எவ்வளவெனினும் உள்ள உயர்ந்த ஸ்தானத்தில் நிலை

தவறினால் விழுந்துவிடும் அபாயம் இருக்கின்றதுபோலும்" என ஆக்ஷேபித்தான்.

அதற்கு யாந்திரிகன், பிறக்கும் ஆக்ஷேபம் அனைத்திற்கும் முந்தியே சமாதானம் சொல்லத் தலைப்படில், எக்காலத்திலும் எவ்வகை முயற்சியும் சாயாது. என் சிந்தையில் பிறந்த உபாயத்தை அடுத்துக் கருமம் முடிக்க எனக்கு அனுகூலியாயிருப்பீரானால், வந்த விக்கினம் வாட்டுமென்ற மனம் துணிந்து நானே முந்தப் பறப்பேன். ஆகாயத்தில் பறக்கும் சிறகுள்ள பக்ஷிஜாலம் அனைத்தின் உடலுறுப்பு அமைதியையும் தீரத் தெளியச் சிந்தித்தேன். சிந்தித்த அளவில், வௌவால் இறகின் மடக்குத்தொடர் மனுஷர் அங்கத்தின் இயற்கைக்கு எளிதில் இசையுமென்று தோன்றுகிறது. இம்மாதிரியை அனுசரித்து, கருதிய கருமத்தை நாளைக் கையிடுவேன். இன்னும் ஒரு வருஷம் செல்லுமுன் ஆகாயத்தில் உயரப் பறக்க நினைத்திருக்கிறேன். அங்கே மனுஷர் மாற்சரியம் செல்லாது; அவர்கள் என்னைத் தொடர்ந்து அங்கே வருவது அசாத்தியம். இந்த உபாயத்தைத் தாம் எவருக்கும் வெளியிடலாகாது; நம்மிருவருக்கன்றிப் பிறருக்குப் பறக்கச் சிறகு அமைத்துக் கொடுக்க என்னைக் கேட்கவொண்ணாது. இவ்விரு சங்கேதமும் தவறாது கைக்கொள்வீர்களானால், சொற்படி செய்யத்தொடங்குவேன் என்றான்.

**ராஸிலஸ்:**—"அழுக்கா றவாவெகுளி யின்னாச் சொன்னான்கு—மிழுக்கா வியன்ற தறம்" எனும் நீதியை மறந்தீரா? பெறுவதற்கு அரிய இப்பெரும்பயனைப் பிறர் அடையாவண்ணம் உமது மனதில் மாற்சரியம் உண்டாவதேன்? செய்தொழில் அனைத்தையும் சர்வ ஜனோபகாரார்த்

தம் செய்வது கடன். எவன் ஒருவனுக்கும் பிறரால் விளையும் பயன் மிகுதி. ஆகவே, அவனவன் பெற்ற உபகாரத்திற்குப் பிரதியுபகாரம் செய்வது தர்மமே.

**யாந்திரிகன்:**—மனுஷர் எல்லாரும் நல்லவர்களானல், நான் பறக்கும் வித்தையை மிகவும் மனமகிழ்ந்து யாவருக்கும் கற்பிப்பேன்; எல்லாரும் நல்லோரல்லவே. தப்பிப் பிழைக்கக் கருதி உயரப் பறக்கும் சர்ஜனரைத் துர்ஜனர் நேர்ந்தபடி தாவடிபோய்த் தாக்கத் தலைப்படில், அப்புறம் அவர்களுக்கு மற்றென்ன கதி உண்டு? மேகமண்டலத்தை ஊடறுத்துச் செல்லும் சேனு சமுத்திரத்திற்குத் தப்பிப் பிழைக்க ஆகாயத்தில் மதிலரணும் இல்லை, மலையரணும் இல்லை, கடலரணும் இல்லையே. உத்தர தேசவாசிகளாகிய மிலேச்சர் அத்தனை பெயரும் பறந்து வந்து ஆகாயத்தில் வட்டமிட்டுச் சமயம்பார்த்து, செழுநில வளம் மலிந்து சிறந்த தேசத்து ராஜமாநகரத்தைப் பருந்து கோழிக்குஞ்சை விழுந்து அடித்துக் கொண்டுபோவதுபோலச் சடிதியில் மேல்விழுந்து அமர்த்திக் கட்டிக்கொள்வார்களே. அந்தத் தறுகணுளரோடு எதிர்க்க வல்லவர் ஆர்? தென்சமுத்திரக்கரை அடுத்த தேசத்தில் ஈக்கூட்டம்போல மொய்த்திருக்கும் நிர்வாணிகளாகிய கண்டகர்கள் ராஜபுதல்வர்க்குப் புகலிடமும் ஆனந்தத்திற்கு உறைவிடமும் ஆகும் இச்செழும் பள்ளத்தாக்கை முதலாக அசதியில் பறந்துவந்து இறங்கி அபகரித்துப் பாழாக்கினும் பாழாக்குவார்களே.

" இதுகேட்டு ராஜகுமாரன் இவ்வந்தரங்கத்தை எவர்க்கும் வெளியிடேன் என வாக்குறுதிசெய்து, சிந்தித்த கருமம் சித்தியானலும் ஆகுமென்று எண்ணி, முயற்சி தொடங்கி முடியுந்தனையும் பதைப்பற்றுக் காத்திருந்

தான். வேலை நடந்தேறுவதைக் காலத்திற்குக் காலம் போய்ப் பார்த்தான். தடையறத் தீவிரகதி உண்டாய், கனம் குறைந்து உரம் ஏறும்படி புத்திசூக்ஷமமாய் ஏற்பட்டிருந்த பற்பல உறுப்புகளைக் கண்டு வியப்புற்றான். பருந்தும் கழுகும் பாயமெரனைத் தொடரினும், அவைகளுக்கு எட்டா உயரத்திற்குப் பறக்கும் அரும் திறம் தனக்கு அமையுமென்று நாள் ஏற ஏற யாந்திரிகனுக்குக் குன்றாத மன உறுதி உண்டாயிற்று. அம்மன உறுதி எனும் பிணி ராஜபுதல்வனுக்கும் தொத்தியது. சிறகுகள் குறையற ஒரு வருஷத்திற்குள் செய்து முடிந்தன. யாந்திரிகன் ஒரு தினம் குறித்து அன்று அதிகாலையில் ஏரிமுகத்தில் புடைத்து எழுந்த மேட்டுத்தரையில் சிறகு கட்டிப் பறக்கச் சித்தமாய்ப் போய் நின்று, சிறிதுநேரம் சிறகை விரித்து அடித்துக் காற்று வாங்கி, பறக்க உன்னி, நின்ற நிலை பெயரா ஆகாயத்தில் பாய்ந்து இமைப்பொழுதில் ஏரியில் விழுந்தான். ஆகாயத்தில் பறக்க உதவாமற் போன சிறகு இரண்டும், வாதப் பூற்றி வைத்தியன் ஆனைற்போல, ஜலமுகத்தில் படிந்து அவனை முழுக ஒட்டாமல் தாங்கிக்கொண்டன. இவ்வண்ணம் பாதி திகிலினாலும், பாதி சஞ்சலத்தினாலும் குறைப்பிராணியாய்ப்போன யாந்திரிகனை ராஜகுமாரன் தாவிப் பிடித்து இழுத்துத் தரையில் விட்டான்.



# 7-ம் அதிகாரம்.

## இளவரசன் பண்டிதன் ஒருவனைக் கண்டது.

இந்தப் பீடையை நினைந்து இளவரசன் மிதமிஞ்சிச் சிந்தை நொந்து வருந்தவில்லை. எண்ணியபடி, பள்ளத்தாக்கின் எல்லை தாண்டிச் செல்லும் உபாயம் அவனுக்கு இது ஒன்றுதவிர வேறில்லையே. ஆனதுகொண்டு தன் எண்ணம் இம்முறை சிதறியும், இனி ஒருபொழுது சித்திபெறுமென்று எதிர்நோக்கிப் பதைப்புறுதிருந்தான். சமயோசிதம் பார்த்திருந்து சகல பாக்கியத்திற்கும் உறைவிடமாகிய பள்ளத்தாக்கை விட்டு நீங்கும் அபிப்பிராயத்தைச் சாதிக்கவேண்டுமென்று அவன் ஒரு பிடியாய் நின்றான்.

பிற்பாடு அவன் மனம் போக்கற்று ஒரு நிலையாக நின்றது; உலகப்பரப்பில் அடிவைக்கும் உபாயம் ஏதும் உண்டென்று அவனுக்குத் தோன்றவில்லை; பதைப்பற்று ஆறியிருக்க அவன் செய்த எத்தனங்கள் பல; அவை ஒன்றும் பலிக்கவில்லை. மனக்குறை நாளொருவண்ணம் அவன் உயிரைக் கொள்ளைகொண்டது; மீண்டும் அவன் துக்கசாகரத்தில் மூழ்கி மனம் தடுமாறினன். அடுத்து மாரிகாலம் வந்தது. ஆகவே, நேர்ந்தபடி வனத்தில் உலாவித்திரிய மாளவில்லை.

அவ்வருஷம் கடுமழை நாட்பட வருஷித்தது. அதற்கு முன் எப்பொழுதும் அப்படி இல்லை. நாலு திக்கும்

சூழ்ந்த மலைகளில் மேகம் மிகு மழை பொழிய, அம்மலைகளினின்று தாரைதாரையாக விழும் அருவி தாழ்ந்த சமநிலப்பரப்பில் எத்திசையும் பிரவாகித்தது. தங்கு நீர் சிறிதுமன்றி அந்தப் பிரவாகமுழுதும் ஓடி வடிய அங்கே இருந்த கற்புழை விசாலமானதல்ல, ஒடுங்கியிருந்தது. ஏரி நிறைந்து வெள்ளம் கரை புரண்டது. பள்ளத்தாக்கு எங்கும் வெள்ளமயமாயிருந்தது. அந்தப் பிரவாகமுகத்தில் கண்ணுக்குப் பொட்டுப் பொட்டாகத் தோன்றினவைகள் அரண்மனை சமைந்த திட்டும் வேறுசில மேட்டுத்தரையுமே. மாடு ஆடுமுதலிய விலங்கினமெல்லாம் அடிவைக்க இடமின்றிப் பசும் புன்னிலத்தைவிட்டு நீங்கின. மனுஷரோடு பழகிப் படிந்த மிருகஜாதிகளும் துஷ்டவனவிலங்குகளும் பிரவாகத்திற்குத் தப்ப மலை ஏறி ஒதுக்கம் பார்த்து அடைந்தன.

இந்தப் பிரவாக நிர்ப்பந்தத்தால் ராஜபிரபுக்கள் அத்தனைபெயரும் அம்மாளிகையை விட்டு நீங்காதிருந்து, அவரவர்க்கு இதமான கேளிக்கைகளில் பொழுது கழித்தார்கள். மனுஷருக்கு உரிய நானாவித நிலைமையையும் தெளிவுற விளக்கும் செய்யுள் ஒன்றை இம்லாக் எனும் கவிராஜன் சொல்லக் கேட்டு, ராஸிலஸுடைய மனம் அதில் குவிந்து சென்றது. செல்லவே, தனிமையாய்த் தன் மாளிகைக்கு வந்து, மீண்டும் அச்செய்யுளைப் பாடும்படி அவன் கவிஞனுக்குக் கற்பித்தான். பின்பு இருவரும் மனம் கலந்து சம்பாஷித்தார்கள். சம்பாஷித்த அளவில், லௌகிக இயற்கையை நன்குணர்ந்து பிரபஞ்ச வியாபாரத்தைச் சாதுரியமாய் வர்ணித்த நிபுணனைக் காண இடம் பெற்றது பெரும்பாக்கியமென்று ராஸிலஸ் ஆனந்த பூர்த்தியடைந்தான். சாமானியமாய் எவரும் அறிந்த லௌ

கிக இயற்கைகள் அநேகம் இளம்பருவந்தொட்டு வீட்டுக்கு முற்றம் வெளிப்படாதிருந்த அவனுக்குத் தெரியுமா---தெரிவது எப்படி? அவன் அவைகளைச் சோர்வறப் பூராயமாய் விசாரித்தறிந்தான். பூலோக வியாபாரத்தைக் குறித்து இளவரசனுக்கு அந்நாள்வரையில் ஏதும் தெரியாதது கண்டு கவிஞன் பரிதபித்தான். விஷயத்தில் நுழைந்து அவன் பூராயமாய்க் கேட்ட கேள்விகளைத் தொட்டுப் பரிவு கூர்ந்தான். அன்றன்று நூதன விஷயங்களை அன்பாய் உரைத்து அறிவு கொளுத்தினன். இந்த நற்காலக்ஷேபத்தை நிறுத்திவிட்டு இராத்திரி காலத்தில் நித்திரைசெய்ய எழுந்து போகும்பொழுது, ராஜபிரபுவிற்கு மிகு மனஸ்தாபம் உண்டாகும். ஆனாலும் நித்திரையின்றித் தீராதே. மீண்டும் அவ்வின்பகாலக்ஷேபத்தில் பிரவேசிக்கப் பொழுது எப்போது விடியுமென்று மிகு வாஞ்சையோடு எதிர்நோக்கியிருப்பான்.

ஒரு நாள் இருவரும் கூடி உட்காந்திருக்கையில், ராவிலஸ் "உமது பூர்வோத்தரங்களைத் தெரியச்சொல்லும். நீர் பாக்கியம் முதிர்ந்த இப்பள்ளத்தாக்கில் இறக்குந்தனையும் எங்கும் வெளிப்படாதிருக்க வந்த நிமித்தம் என்ன" என்று இம்லாக்கைக் கேட்க, அவன் சொல்லத் தொடங்கினன். தொடங்கவும், சங்கீத விநோதத்திற்கு வரும்படி தூதன் ஒருவன் விரைந்துபோய் ராவிலஸை அழைத்தான். ஆனதுபற்றி, அவன் அஸ்தமனகாலமாமளவும் தன் ஆசையை அடக்கிக்கொண்டு போனன்.



# 8-ம் அதிகாரம்.

## இம்லாக்கின் சரித்திரம்.

உஷ்ணசக்கரத்திற்கு உட்பட்ட தேசங்களில் மனுஷர் எவ்வித காலக்ஷேபம் செய்வதும் விருந்து உண்டு கொண்டாடுவதும் பகலில் அல்ல, பொழுது அஸ்தமித்த பின். ஆகவே, தொடங்கிய சங்கீத வினோதம் முடிந்து ராஜகுமாரத்திகள் எழுந்து பள்ளிகொள்ளப் போக அர்த்த ராத்திரியனையில் சென்றது. அப்பால் ராஸிலஸ் தன் கூட்டாளியை வரவழைத்துக் கதை சொல்லச் சொன்னான்.

**இம்லாக்:**—துரையே, என் கதை சொல்லிமுடிய நாழிகை செல்லாது. வேறு முயற்சியின்றிக் கலைபயிலும் விர்த்தியுடையோர் காலம் ஆரவாரமற்று அமைதியாய்க் கழியும். அதில் கவனிக்கத்தகும் முக்கிய சங்கதிகள் பல இரா. நாலு பெயர் கூடும் சமூகத்தில் பேசுவது, தனித்திருக்கும்பொழுது விஷய சிந்தனை செய்வது, நூல் வாசிப்பது, வாசிக்கக் கேட்பது, தெரிந்தோரைக் கேட்டுச் சந்தேகம் தெளிவது, தெரியாதவர்க்குச் சந்தேகம் தெளிவிப்பது இதுவே வித்தியாவினோதன் வேலையாம். அவன் ஆடம்பரமும் அச்சமுமின்றித் தேசங்கள் தோறும் திரிவான். அவனைப்போல் கற்றவர்களன்றி மற்றவர்கள் அவன் பெயர் ஊர் விவரம் அறிவதுமில்லை, அவனைச் சம்மானிப்பதுமில்லை.

எனது ஜன்மராச்சியம் கொய்யாமா,—அது நீல்நதி உற்பத்திஸ்தானத்திற்குத் தூரமல்ல, சமீபந்தான். என் தந்தை திரண்ட திரவியமுள்ள வர்த்தகர். அவர் வர்த்தகம் ஆப்பிரிக்காவின் மத்தியப் பிரதேசங்களிலும் செங்கடற்றுறை அடுத்த நாடு நகரங்களிலும் நடந்தது. அவர் யதார்த்தவாதி, சிக்கெனவும் தாளாண்மையும் உள்ளவர்; அவர் மனமோ, அற்ப விஷயங்களில் பிரவர்த்தித்தது. அவர் அகன்ற அறிவினர் அல்ல. திரவியம் தேடுவதும், தேடும் திரவியத்தை அதிகாரிகள் அபகரித்துக்கொள்ளா வண்ணம் க்ஷேமித்து வைப்பதுமே அவருக்கு முக்கிய இஷ்டம்.

**ராஸிலஸ்:**—என் தந்தை செங்கோல் செலுத்தும் இந்த ராச்சியத்தில் வாழும் குடிகளில் எவனுவது பிறர் சொத்தை அபகரிக்கத் துணிவதுண்டானல், ராஜதர்மம் தவருது நிறைவேற்றுவதைப்பற்றி அவர் எண்ணமற்றிருப்பது வாஸ்தவமே. அரசர் தாம் செய்யும் அநியாயத்திற்கன்றி, பிறர் செய்ய இடங்கொடுக்கும் அநியாயத்திற்கும் உத்தரவாதிகள். இது என் பிதாவிற்குத் தெரியாதா? நான் சக்கரவர்த்திப்பட்டம் ஆளச் சம்பவித்தால், என் குடிகளில் கடையருக்கும் நிஷ்டூரம் செய்யும் பாதகனைத் தண்டனைக்குத் தப்பவிடேன். ஒருவன் பிறர் பொருளைத் தன் பொருள்போலப் பேணி வாணிகம் செய்து தேடிய திரவியத்தை நாடாள்வார் அச்சுறுத்திக் கொள்ளை கொள்வாரென்று ஏங்கி, அனுபவிக்காமல் ஒளித்து வைத்தானென்று உமது வாக்குமூலமாய்க் கேட்டு, என் உதிரம் கொதிக்கின்றது. குடிகள் சொத்தைக் கொள்ளை கொண்ட அதிகாரி எவன்? பெயர்—ஊர் விவரமாய்ச் சொல்லும். அவன் செய்த பாதகத்தைச் சக்கரவர்த்திக்கு அறிக்கைசெய்வேன்.

**இம்லாக்:**—மஹா பிரபூ, உங்கள் ஆசக்தி இளம்பருவத்திற்கு உரிய சுகுணத்தின் வேகத்தால் விளைந்தது. இந்தப் பருவ இயற்கை நீடித்து நிற்காது. உங்கள் தந்தை மீது தோஷம் இல்லையென்று நீங்களே ஒப்புக்கொண்டு, குறித்த அதிகாரி செய்த அநியாயத்தை இவ்வாறு பதைக்காமல் பொறுத்துக் கேட்கும் காலம் வரும். அபிஸினிய ராச்சியத்தில் நிஷ்டூரம் அடுத்து நடப்பதும் இல்லை, நிஷ்டூரம் செய்வார் தண்டனைக்குத் தப்புவதுமில்லை. ஆனாலும், குரூர கிர்த்தியங்களை ஒட்டுப் பற்றறத் தவிர்க்கத்தக்க அரசாட்சிவகை இன்னதென்று இந்நாள்வரையும் எவரும் கண்டறியவில்லை. அரசாட்சி உத்தியோகம் நிர்வகிப்பவர்கள் அரசருக்கு அடங்குவதும் குடிகளை அடக்கி ஆள்வதும் இயற்கை. அதிகாரம் மனுஷர் கைவசப்பட்டால், சிறுபான்மை அக்கிரமமாய்ச் செலுத்தப்படும். அதிகாரிகளை அடக்க வல்ல அரசருடைய ஜாக்கிரதையால் அதிக்கிரமம் தவிர்க்கும் உபாயம் தவறாது சித்திக்கும். பின்னும் அவ்வகை உபாயம் செய்வதற்கு நிமித்தம் இல்லாமற் போகாது. ராச்சியத்தில் நடக்கும் அக்கிரமம் அனைத்தையும் அரசன் ஒருபொழுதும் அறியவுமாட்டான், அறிந்த அக்கிரமம் அனைத்திற்கும் தண்டனை செலுத்தவுமாட்டான்.

**ராஸிலஸ்:**—இது எனக்குப் புத்திகோசரமாகவில்லை. ஆகாதிருந்தும், முக்கியமாய் ஆக்ஷேபிக்கவல்ல, உமது வாய்மொழியைச் செவிகூர்ந்து கேட்க வாஞ்சித்திருக்கிறேன். உமது சரித்திரத்தை விட்ட குறையினின்று சொல்லும்.

**இம்லாக்:**—ஆதியில் தகப்பனார் எனக்கு வாணிக யோக்கியதை உண்டாக்கும் தன்மையுள்ள கல்வித்துறை

கலையன்றி மற்றொன்றையும் கற்பிப்பதில்லையென்று எண்ணமிட்டிருந்தார். பின்பு நாளடைவில் எனக்கு அபூர்வ ஞாபகசக்தியும் தீவிர மனோகதியும் இருப்பதறிந்து, மகனே, நீ இனிமேல் அபிஸினியாவில் இணையற்ற செல்வனாயிருக்கவேண்டுமென்று ஆசைப்பட்டிருக்கிறேன் எனப் பெரும்பாலும் சொல்வார்.

ராஸிலஸ்:—அனுபவிக்கவும் நாலு பெயர் காண அறிய வைத்தாளவும் துணிவின்றி, அபரிமித திரவியம் தேடிப் புதைத்து வைத்திருந்த உமது தந்தை பின்னும் அதன் விர்த்தியை விரும்பிய காரணம் என்ன? நீரோ சத்திய வாதி. உமது சொல்லுறுதியைப்பற்றி ஐயுற எனக்கு மனம் இல்லை. ஆனாலும், ஒன்றுக்கொன்று பொருந்தாத வாக்கியம் இரண்டும் வாஸ்தவமாதல் கூடாதே.

இம்லாக்:—ஒன்றுக்கு ஒன்று இசையாத இரண்டில் ஒன்றொழிய இரண்டும் வாஸ்தவமாகா,—மனுஷனைச் சுட்டிச் சொல்லில், அவை இரண்டும் வாஸ்தவமாயினும் ஆகும். ஆனாலும், விகற்பம் என்பதும் ஒவ்வாமை அல்லது பொருந்தாமை என்பதும் ஒரு பொருட் பதங்கள் அல்ல. இனி எவ்வளவும் அச்சமற்றிருக்கும் காலம் வருமென்று என் பிதா எதிர்பார்த்திருப்பினும் இருப்பாரே. எவ்விதத்திலும், வாழ்நாளை அவமே போக்காதிருக்க வேண்டுமாயினும் ஓராசை இருக்கத்தான் வேண்டும். வாஸ்தவமாய் உள்ள குறை தீரப்பெற்றவன் இல்லாக் குறைகளை மனோபவமாய் வருவிக்கவேண்டும்.

ராஸிலஸ்:—இது எனக்கு ஒருவாறு புலப்படுகின்றது. இடையிலே தடுத்துக் கதைப்பொருத்தைக் குலைத்ததைப் பற்றி மனஸ்தாபப்படுகிறேன்.

**இம்லாக்:** — இவ்வாசையை இதயத்தில் இருத்தி, என்னை என் பிதா பள்ளிக்கு வைத்தார். அறிவால் உண்டாம் இன்பமும், ஆய்மதியால் விளையும் ஆனந்தமும், கற்பனாசக்தியால் பிறக்கும் அபிமானமும் அங்கெனக்கு அனுபவப்படவும், ஆருக்கும் சொல்லாமல் நிறைசெல்வத்தைத் துரும்பென நிந்தித்துத் தள்ளத் தலைப்பட்டேன். என்னைக்குறித்துத் தந்தை உள்ளத்தில் குடிகொண்ட எண்ணம் சிதறிப்போகும்படி செய்யச் சங்கற்பித்தேன். என் பிதாவுடைய ஸ்தூலபுத்தியை எண்ணி எண்ணிப் பரிதபித்தேன். என் க்ஷேமத்தில் கண்ணும் கருத்துமாயிருந்த அவர் என்னை நானாதேசங்களுக்கும் அனுப்பிப் பக்குவசாலி ஆக்க நினைத்திருந்தார். எனக்கு மிகு இளைப்பும் தவிப்பும் உண்டாக்கும் இந்தப் பிரயாணத்கிற்குத் தகப்பனார் குறித்திருந்த காலம் கிட்டுமுன் எனக்கு இருபது பருவமாயிற்று. அதற்குள் ஒருவர்பின் ஒருவராகப் பண்டிதர்கள் பலர் என் ஜன்ம தேசத்தில் வழங்கும் இலக்கண விலக்கியங்கள் அனைத்தும் எனக்குக் கற்பித்திருந்தார்கள். நாழிகைக்கு நாழிகை எதாயினும் நூதன விஷயம் கற்றுக்கொண்டு வந்ததனால், நான் இடையறாது எப்பொழுதும் மனமகிழ்ந்திருந்தேன். நான் வளர்ந்து ஆடவனாக ஆக, முன் உள்ள ஆசிரியவணக்கம் மிகக் குறைந்துபோயிற்று. பாடம் கற்பித்து முடிந்தபின் என் ஆசிரியர்கள் சாமானிய ஜனங்களைக்காட்டிலும் விவேகிகளென்றும் குணநலத்தால் சிறந்தவர்களென்றும் எனக்குத் தோன்றவில்லை. இதே எனக்கு அவர்கள் மீதுள்ள மதிப்பு குன்றியதற்கு நிமித்தம்.

அப்பால், தகப்பனார் எனக்கு வர்த்தகத்தொழில் பயிற்ற நிர்ணயித்து, ரொக்கம் வைத்திருந்த நிலவறைகளில்

ஒன்றைத் திறந்து, பதினாயிரம் பொன் எண்ணிக்கொடுத்து, "இந்தா, மகனே, இம்முதலை வைத்திருந்து வர்த்தகம் செய்துகொண்டுவா." நான் வர்த்தகம் செய்யத் தொடங்கியபொழுது வைத்திருந்த கைம்முதல் இத்தொகையில் ஐந்தில் ஒரு பங்கும் காணாது. அந்த அற்ப மூலதனம் முயற்சியினாலும் சிக்கெனவினாலும் எவ்வளவு விர்த்தியாயிற்றென்று பிரத்தியக்ஷமாய் அறிவாயே. வீண்செலவு செய்தாலும் சரி, விர்த்தியாக்கினாலும் சரி, இந்த ரொக்கம் உன் சொந்த ரொக்கமென்று அறி. நிர்விசாரமாயிருந்தாயினும், அடிக்கொரு நினைவிற்கு இடங்கொடுத்தாயினும் அர்த்தநாசம்பண்ணி அவதிப்படுவாயானால், அப்பால் நான் இறக்குந்தனையும் உன் மிடி தீராது. இன்றுமுதல் நாலு வருஷத்திற்குள் இம்முதலை இரட்டியாக்கிக்கொள்வாயானால், அதன்மேல் பிதா—புத்திரன் என நமக்குள்ள தாரதம்மியத்தை ஒழித்துவிட்டு, இஷ்டர்களாய் மனம் கலந்து உறவாடிக் கூட்டுவர்த்தகம் செய்து நாள் கழிப்போம். திரவியம் தேடும் வித்தையில் என்னளவு சாதுரியனாகும் எவனையும் எனக்குச் சமானனாகக் கொள்வேன்" என மொழிந்தார்.

விலை சவதமான சரக்குச் சிப்பங்களில் ரொக்கத்தை க்ஷேமித்து ஒட்டைகளில் ஏற்றிச் செங்கடற்கரைக்குப் பிரயாணப்பட்டோம். நீர்ப்பரப்பை நான் நெட்டாயமாய்ப் பார்த்தபொழுது, சிறைச்சாலையினின்று ஒளித்தோடும் கைதியின் நெஞ்சம்போல் என் நெஞ்சம் குதுகுலித்தது. தேச அதிசயம் பார்க்கும் தீரா வாஞ்சை எனும் நெருப்பு என் இதயத்தில் மூண்டது. தேசாந்தரம் போய் அங்கங்குள்ள மனுஷருடைய பாங்கு பழக்கவழக்கங்களைப் பார்க்கவும், அபிஸினியர் அறியாத கல்வித்துறைக

லைக் கற்றுத் தெளியவும் கிட்டின சமயத்தைத் தப்பவிடாதிருக்கத் தீர்மானித்தேன்.

கைக்கொண்ட மூலதனத்தை விர்த்திசெய்ய வேண்டுமென்றும், செய்யாவிடில் இடுதெண்டம் இன்னதென்றும் தந்தை எனக்கு இடித்துரைத்ததை நான் மறந்துபோகவில்லை. அவ்விடுதெண்டம் வரினும் பெரிதல்லவென்று என் மனம் துணிவுற்றது. தந்தை சொற்படி தவறாது நடக்க வாக்கிட்டிருந்தேனானால், அவ்வாக்கை ஒருபொழுதும் பின்னப்படுத்தவொண்ணாது. ஆனால், நான் வாக்கு நிர்ப்பந்தத்திற்கு உட்படவில்லையே. ஆனதுகொண்டு என் உள்ளத்தில் பிறந்து தலைப்பட்ட ஆசையைத் தீர்க்கவும், வியர்சாபேக்ஷை எனும் தாகம் தணியக் கலையூற்றில் மொண்டு பருகவும் பிரதிக்கினை செய்தேன்.

நான் பிதாவுடன் கூடாமல் பிரத்தியேகமாய் வர்த்தகம் செய்ய இடம்பெற்றதனால், மாலுமி ஒருவனைக் கண்டு பரிச்சயம் பண்ணிக்கொள்வதும், அன்னியதேசம் எதற்காயினும் புறப்படும் மரக்கலம் விசாரித்து ஏறிப்போவதும் பாரமல்லவே. எனக்கு ஒரு தேசத்திற்கு ஒரு தேசம் உசிதமென்று கொள்ள நிமித்தம் இல்லை. எங்கெங்கே போய்த் திரிந்தாலும் சரி, முன் காணாத தேசத்தைக் கண்டாலே போதுமென்று இருந்தேன். ஆதலின், எனது அபிப்பிராயத்தை விளக்கும் கடிதம் ஒன்று தகப்பனாருக்கு எழுதி அனுப்பிவிட்டு, சூரத்திற்குப் போகும் மரக்கலம் ஒன்றில் ஏறினேன்.



# 9-ம் அதிகாரம்

## இம்லாக்கின் சரித்திரம் (தொடர்ச்சி).

பெருநீர் எனப் பெயர் வழங்கும் சமுத்திரத்தில் நான் முதல் முதல் ஏறிய உரு எட்ட ஓடிக் கரைமறைய வும், நான்கு திக்கும் சுற்றிப்பார்த்தேன். பார்த்த அள வில், எனக்கு உவப்பும் திகைப்பும் உண்டாயின. மட் டற விஸ்தரித்த ஜலராசியைக் கண்டு என் மனம் பூரித் ததுபோல் இருந்தது. இவ்வதிசயத்தைத் தினமும் காண் பினும் என் மனம் தெவிட்டாதென்று எண்ணினேன். பொருள் வேறுபாடின்றி, பார்த்த இடம் எங்கும் ஜலரா சிப் பெருவெளி மயமாயிருந்தது. ஒரு முறை கண்டதை யே ஓயாது மேலுமேலும் கண்டேன். ஆனதுபற்றி, சிறிது நேரத்திற்குள்ளாகக் கண் சலித்து மனம் அலுப்புற்றது. அப்பால் நான் மரக்கலத்தினுள் இறங்கிப் போய், இனி எனக்கு உண்டாம் இன்பம் அனைத்தும் இவ்வாறே அரோ சிகமும் ஆசாபங்கமுமாய் முடியுமென ஐயுற்றேன். ஆனா லும், என் இதயத்தில் பின்வருமாறு சிந்தனை உண்டா யிற்று:—நீர் இயற்கை ஒன்று, நில இயற்கை ஒன்று. நீருக்கு ஸ்திதி—கதி எனும் இரு விகற்பம்மாத்திரம் உண்டு. நிலத் திற்கோ, அப்படி அல்ல. அதில் பர்வதங்களும், பள்ளத் தாக்குகளும், பாலைவனங்களும், பட்டினங்களும் இருக் கின்றன. வெவ்வேறு தேசாசார மதாசார முதலியவைக ளைச் சார்ந்து ஒழுகும் மனுஷர் சஞ்சரிக்கிறார்கள். சிர்ஷ்டி

வர்க்கத்தில் விகற்பம் தோன்றிருப்பினும், பிரபஞ்ச வியாபாரத்தில் பேதாபேதங்களைக் காணலாகும்.

இவ்வாறு எண்ணிச் சலிப்பற்று மனம் தேறினேன். சமுத்திர யாத்திரை முடிகிறவரையில் சிறிதுகாலம் கடலோடிகள் இடத்தில் மாலுமி நூல் கற்றும், சிறிதுகாலம் இன்னின்ன ஸ்திதியில் இருக்கும்பொழுது இவ்வாறு இவ்வாறு நடப்பேனென்று திட்டம் கட்டியும் பொழுது போக்கினேன். நான் மாலுமி நூல் கற்றதொழிய மரக்கலம் ஒருபொழுதும் செலுத்தவில்லை; மனதிற் குறித்த ஸ்திதி எதிலாயினும் இருக்கவுமில்லை.

மரக்கலத்தில் செய்த மேற்சொல்லிய காலக்ஷேபங்களில் ஒருவாரை எனக்கு அலுப்புத் தட்டவட்டது. இப்படி இருக்குஞ் சமயத்தில் சூரத்தில் சிந்தாயாத்திரையாய்ப் போய்ச் சேர்ந்தோம். பணத்தைக் கைக்கொண்டு பத்திரப்படுத்தி *முக்காரத்துவகை சில வாங்கிக்கொண்டு, நாட்டகத்திற்குச் செல்லும் பிரயாணிகளுடன் கூடிப் போனேன். எனக்கு வழித்துணையாய் வந்தவர்கள் ஏதோ குறிப்பு அறிந்து என்னைத் தனிகனென்று எண்ணினார்கள். நான் எதையும் பூராயமாய் விசாரித்து வியப்புற்றதனால், அவர்கள் இவனுக்குப் பிரபஞ்ச வியாபாரத்தில் நீக்குப் போக்கு ஒன்றும் தெரியாது. இவனை எளிதில் ஏமாற்றிப் பொருள் பறிக்கலாம். பட்டறியுமுன் இவனுக்கு எங்கள் சூது வெளிவராது என்று நினைத்தார்கள். இப்படி நினைத்துக் குற்றேவல் செய்வோரால் என் கைப்பொருளைத் திருடுவித்தார்கள்; உத்தியோகஸ்தரால் பறிப்பித்தார்கள்; அபாண்டம் சொல்லிக் கொள்ளையடிப்பித்தார்கள். இதனால் அவர்களுக்குப் பொருள் வரவு

*Commodities for show.

எவ்வளவும் இல்லை; என் அறிவிற்குத் தங்கள் அறிவு சிரேஷ்டமென்று எண்ணிக் களிகூர்ந்ததே அவர்கள் பெற்ற லாபம்.

ராஸிலஸ்:—சற்று நிறுத்தும். மனுஷர் தமக்கு நயம் ஏதும் இன்றிப் பிறர்க்கு அபகாரம் செய்யும் கேடுகெட்ட புல்லரா? தமது மேம்பாட்டை நினைந்து நெஞ்சு உவப்பது எவர்க்கும் இயற்கை. இது என் மனதிற்கு மயக்கமறத் தெரியும். ஆனாலும், உமது அறியாமை ஆகஸ்மீகமே தவிர மற்றப்படி அல்ல; அது உமது பாதகமுமல்ல, பைத்தியமுமல்லவே. அல்லாதிருக்கக்கொள்ள, உமது அறியாமையைப்பற்றி அவர்கள் தங்களைப் பாராட்ட நிமித்தம் இல்லையே. உமக்கு இல்லாத புத்தி தமக்கு உண்டென்று அவர்கள் காட்டவேண்டில், ஒன்றும் பேசாதிருந்து உம்மை மோசத்தில் விழுத்துவானேன்? நேரிடும் மோசத்திற்கு விலகும்படி சமயத்தில் எச்சரித்து உமக்குப் புத்தி புகட்டலாமே.

**இம்லாக்:**—அகந்தைக்கு விநயம் இல்லை; அதமப் பிரயோஜனம் அதற்கு ஆனந்தம். பிறர் துக்கத்தையும் தன் சுகத்தையும் எதிர் எதிராக வைத்துப் பார்க்கும்பொழுதன்றி, அசூயைக்குத் தன் சுகம் தெரியாது. என்னைச் சீமானென்று எண்ணிச் சிந்தை நொந்ததனால், அவர்கள் என் சத்துருக்கள்; மதியீனனென்று கண்டு மகிழ்ந்ததனால், அவர்கள் எனக்கு மித்ரேர்.

ராஸிலஸ்:—இனிக் கதையைச் சொல்லும், இம்லாக். நீர் சொன்னதெல்லாம் உள்ளதென்று ஐயமற நம்புகிறேன். நம்பியும், அதற்குச் சார்பாய் நீர் குறிப்பித்த முகாந்தரங்கள் தப்பென்று எண்ணுகிறேன்.

இம்லாக்:—வழித்துணை கூடிய பிரயாணிகளுடனே மஹா மோகல அதிபதி சமஸ்தானமாகிய ஆக்கிராவில்

போய்ச் சேர்ந்தேன். ஆக்கிரா இந்துஸ்தானின் ராஜதானி. அத்தேசபாஷை கற்கத்தொடங்கிச் சில மாசத்திற்குள் அங்குள்ள வித்வஜனருடனே வார்த்தையாட வல்லவனு னேன். அவர்களில் சிலர் முகக்கடுப்பும் நாவடக்கமும் உள்ளவர்கள். சிலர் இணக்கமும் அறிந்ததைக் கரவி ன்றி வெளியிடும் இயற்கையும் உள்ளவர்கள். தாம் வருந் திக் கற்ற நுட்பங்களைப் பிறருக்குக் கற்பிப்பது அவர்க ளில் சிலருக்குப் பிரீதியல்ல. கற்றதனுல் ஆகும் பயன் கற்றவைகளைப் பிறருக்கு உணர்த்திப் பெருமையடை வதே எனச் சிலருடைய பிரகிர்தியால் விளங்கியது.

பாலிய ராஜகுமாரருக்குக் கல்வி கற்பித்த ஆசிரியர் என் குணுதிசயங்களைக் கண்டு வியப்புற்று, என்னைச் சக்கரவர்த்தி சன்னிதிக்கு அழைத்துப் போய்த் தரிசனம் பெறுவித்துக் கல்வியில் இவருக்கு ஈடு இல்லையென்று பாராட்டினுர். சக்கரவர்த்தி என் ஜெனமதேசத்தையும் பிர யாண வரலாறுகளையும் பற்றிப் பல கேள்வி கேட்டார்; சாமானிய புத்திசக்திக்கு மிஞ்ச அவர் வாக்கினின்று பிறந்தது ஒன்றும் இப்பொழுது எனக்கு ஞாபகமாயிருக்க வில்லை. சக்கரவர்த்தி சமுகத்தினின்று விடைபெற்று வரும்பொழுது, எனக்கு அவர் வித்தியா சாமர்த்தியத் தைப்பற்றிப் பிரமையும், சற்குணத்தைப்பற்றி ஆசைப் பெருக்கமும் உண்டாயிருந்தன.

அதன்பின் எனக்கு மதிப்பு ஏறிற்று. வழியில் நான் துணைகூடிப் போன வர்த்தகர் தம்மைச் சுட்டி ராஜபெரு மாட்டிகளுக்குத் துணைச்சொற் கடிதம் எழுதிக்கொடுத்து உதவும்படி என்னைக் கேட்டார்கள். என்னை இந்தக் கேள்வி கேட்க அவர்களுக்குத் துணிவு பிறந்ததை எண் ணிப் பிரமித்தேன். வழியில் எனக்குச் செய்த கபடநா

டக சூத்திரங்களைத்தொட்டு அவர்களை வருத்தாமல் கடிந்து பேசினேன். என் சொல் அவர்களுக்குச் சற்றும் உறைக்கவில்லை. வெட்கமாவது துக்கமாவது அவர்கள் முகக்குறியால் விளங்கவில்லை.

கைக்கூலி தருவதாகச் சொல்லி அந்தக் கேள்வியை மீண்டும் நெருக்கிக் கேட்டார்கள். மனநட்புப் பொருந்தி அவர்களுக்குச் செய்ய மறுத்த உபகாரத்தைப் பணநட்புப் பொருந்திச் செய்ய உடன்படுவேனோ—செய்வதில்லையென்று பின்னும் மறுத்தேன். நான் இப்படி மறுத்தது எனக்கு அவர்கள் செய்த அபகாரத்தை நினைந்தல்ல, பிறர்க்கு அபகாரம் செய்யும் சமயம்—இடம்—ஏது முதலியவைகள் அவர்களுக்குக் கிட்டாவண்ணம் தடுக்க நினைந்தே. என் பெயரைச் சொல்லி, அவர்கள் தம்மிடத்தில் சரக்கு வாங்குவோரை ஏமாற்றுவார்களென்று அறிவேனே.

ஆக்கிராவில் இருந்து கற்றறியத்தக்கவைகள் அனைத்தையும் அறிந்தபின், பாரசீகத்திற்குப் போய், பூர்வாலங்காரத்தைக் குறிப்பாய் விளக்கும் கட்டடமுதலியவைகள் இடிந்து தகர்ந்து குட்டிச்சுவராயிருக்கக் கண்டேன். நாகரிகமான நூதன கட்டடமுதலியவைகள் அநேகம் அங்கிருந்தன. பாரசீகர் முக்கியமாய்ப் பலர் ஒன்றாய்க் கூடி உறவாடி அளவளாவும் பிரகிர்தியுள்ளவர்கள். அவர்கள் பகிரங்கத்தில் கூடும் சபைகளுக்கு நான் நித்தநித்தம் போய் அவர்கள் குணம் குறிகளையும், தேசாசார மதாசார முதலியவைகளையும், மானிடர் இயற்கையின் பேதாபேதங்கள் யாவையும் சாண இடம்பெற்றேன்.

பின்பு பாரசீகத்தினின்று அராபியாவிற்குப் போனேன். அராபியர் இயற்கை மந்தை மேய்த்து வனசஞ்சாரம் செய்வது. அவர்கள் ரணகம்பீரர். அவர்கள் ஓரிடத்

தில் வீடுகட்டி நிரந்தரமாய் வசிக்கிறதில்லை. மாடு ஆடு குதிரை முதலிய கால்நடைகளே அவர்கள் செல்வம். இதர ஜாதியாருடைய செல்வத்தைக் கண்டு அவர்கள் இச்சிப்பதும் இல்லை, பொறாமைப்படுவதும் இல்லை. அவர்களுக்கும் இதர ஜாதி மனுஷருக்கும் தொன்று தொட்டு இடையறாது சண்டை நடந்துவந்தது.



## 10-ம் அதிகாரம்.



### இம்லாக்கின் சரித்திரம் (தொடர்ச்சி).

யாப்பிலக்கண விளக்கம்.

**நா**ன் சென்ற தேசங்கள்தோறும் கவிபாடும் திறமே கல்வித்துறை அனைத்தினும் சிரேஷ்டமென நன்குமதிக்கப்பட்டது. மனுஷர் கவிஞரை ஒருவாறு சுவர்க்கலோகவாசிகளின் அடைவாகப் போற்றிப் பூசித்தார்கள். சர்வ தேசங்களிலும் பூர்வகாலத்துள்ள கவிஞரே உத்தம கவிஞரெனக் கொண்டாடப்படுகிறார்கள். இதைத்தொட்டு எனக்குத் தீரா ஆச்சரியம் உண்டாகின்றது. மற்றக் கல்வித்துறை அனைத்திலும் மனுஷர் காலக்கிரமத்தில் தேறித் தேறிவர, கவி பாடும் திறம் ஒரே முறையில் இருந்தாற்போலச் சிலருக்கு முதிர்வரமாக அமைந்ததனாலோ; அல்லது, நானாதேசத்தாரும் அவரவர் பூர்வ காவியத்தை நூதனமாய்க் கண்டு ஆச்சரிய பரவசமடைய, அவர்கள் சந்ததியார் சர்வஜன சம்மதமாக அதன் அருமை பெருமையைக் கொண்டாடிவருகிறதினாலோ; அல்லது, எப்பொழுதும்

விகற்பமின்றி ஏகமாயிருக்கின்ற பிரபஞ்ச விலாசத்தையும் மனோவிகாரத்தையும் விவரிப்பதே செய்யுள் இலக்கணத்தின் தாற்பரியமாயிருக்கின்றதனால், புராதன கவிஞர்கள் முக்கியமாய்க் குறிக்கொள்ளத்தக்க வஸ்துக்களைத் தப்பவிடாமல் கவிகளில் புனைந்துரைத்தும், சம்பாவித சங்கதிகளைப் புணர்த்திக் கதை கட்டியும், நூதன கவிஞருக்கு முன் பாடிய சங்கதிகளைத் திருப்பிப் பாடவும், முன் உள்ள கற்பனைகளை நவமாய்ப் புணர்த்தவுமன்றி, மூலகவி இயற்ற விஷயம் ஒன்றும் விட்டிராததனாலோ, யாதுகாரணத்தால் புராதன கவிஞருக்குச் சிரேஷ்டபதம் அமைந்ததென்று அறியேன். காரணம் ஏதானாலும் சரி, புராதன கவிஞருக்குச் சுவாதீனம் பிரபஞ்சவிலாசம், நவீன கவிஞருக்கு நிர்மிதவஸ்துக்கள்; புராதன கவிஞருக்கு ஆதிக்கம் வாக்கியசக்தியும், கற்பனாசக்தியும், நூதன கவிஞருக்குச் சொல்லலங்காரமும் நாகரீகமும்.

இவ்வாறு மாட்சிமை விளங்கும் கவிஞர் வகுப்பில் நானும் சேர இடம்பெற வாஞ்சித்திருந்தேன். பாரசீக—அராபிய கவிஞர் பாடல்கள் எல்லாம் பார்த்திருந்தேன்; மக்கா பள்ளிவாசலில் திரளாய் அடுக்கிவைத்துக் கட்டித் தூக்கியிருக்கும் காவியம் அத்தனையும் வாசித்து ஞாபகப்படுத்தியிருந்தேன். ஆனாலும் அனுகரண சாதனையால் எவர்க்கும் பெருந்தகைமை உண்டானதில்லையென்று பின்னிட்டு விரைவில் அறிந்தேன். உயர்பத வாஞ்சையானது புராதனச் செய்யுளை விட்டு, பிரபஞ்ச இயற்கையையும் மனுஷர் இயற்கையையும் உற்று நினைத்து ஆய்ந்து அறிய என்னை நெருக்கி ஏவியது. நான் கவி பாடக் குறித்த விஷயம் பிரபஞ்சம். அதைக் கேட்போர் மனுஷர். நான் முன் கண்டிராததை விவரிக்க வல்லவனு

வது கூடாது. மனுஷர் விருப்பு வெறுப்பையும் சித்தவிர்த்தியையும் தெளிய உணர்ந்தாலன்றி, அவர்கள் உள்ளத்தில் உவப்பு உண்டாக்கவும் திகில் எழுப்பவும் ஆசைப்படுவது வீண்.

கவிவல்லோனாகும்படி பிரதிக்கினை செய்து, விஷயம் அனைத்தையும் நூதன அபிப்பிராயத்துடன் பார்த்தேன். என் கருத்தைக் கவரும் துறைகள் இருந்தாற்போல் விரிந்தன. எவ்வகை அறிவையும் அலக்ஷியமாய் விட்டுவிடவொண்ணாதெனத் தோன்றிற்று. மனோசங்கற்பங்களையும் உவமானங்களையும் நாடிக் காடேறி மலையேறித் திரிந்தேன். வனவிருக்ஷம் அத்தனையும், பள்ளத்தாக்கில் உள்ள புஷ்பஜாதி அனைத்தும் என் மனதில் சித்திரித்தாற்போலப் பதிந்தன. எனக்குச் செங்குத்தான குன்றுக்குவடானாலும் சரி, ராஜ மாடமாளிகைகளின் தூபியானாலும் சரி, இரண்டையும் தாரதம்மியம் பாராமல் சமஜாக்கிரதையுடன் கவனித்தேன். சிலவேளை சுற்றிச் சுழன்று செல்லும் சிற்றாறுகளை மார்க்கமாய்ப் போய் அலைந்து திரிந்தேன். சிலவேளை வெளிற்காலத்து மேகவிகாரத்தைக் குசினையாய்ப் பார்த்தேன். கவிஞனுக்கு எதுவும் வியர்த்தமாய்ப் போகாது. சிறப்புள்ளது எதையும் திகில் வருத்துவது எதையும் அவன் சிந்தை தெளிய அறிந்திருக்கவேண்டும். அச்சம் உண்டாம்படி பருத்தும், விசித்திரமாய்ச் சிறுத்துமிருக்கும் அசேதன வஸ்துக்களையும் அவன் ஊடாடி நிர்ணயித்திருக்கவேண்டும். உத்தியானத்தில் உண்டாம் மூலவர்க்கம், வனத்தில் சஞ்சரிக்கும் விலங்கினம், நிலத்திலுள் விளையும் தாதுவகை, விண்வீழ் கொள்ளி இவைமுதலிய எண்ணித்தொலையாப் பொருள் விகற்பங்களின் அறிவை அவன் மனம் எனும்

பண்டசாலையில் க்ஷேமித்து வைத்திருக்கவேண்டும். நீதி சித்தாந்தத்தையும் மத சித்தாந்தத்தையும் வலியுறுத்திக் காட்டுவதற்கும், அலங்கரிப்பதற்கும் பிரதி கருத்துப்பொருளும் பிரயோஜனப்படுமே. முதிர்ந்த அறிவுடையோர்க்குத் தாம் உணர்த்தும் விஷயத்தை அதன் அவயவம் அனைத்தும் அணியாக விளங்குமாறு வர்ணிக்கவும், வாசிப்பவர்க்குத் தூரசம்பந்தமான குறிப்புகளைத் தோற்றுவித்து முன் நினைக்காத நூதன கல்விப்பொருளை உணர்த்தி இன்பம் விளைவிக்கவும் மிக்க நாவளம் உண்டாம்.

ஆதலால் பிரகிர்திஸ்வரூபம் அனைத்தையும் கருத்தாய் ஆராய்ந்து அறிந்தேன். நான் போய்ப் பார்த்த பிரதிதேசத்தினின்றும் கவி பாடும் திறம் அமைதற்கு அனுகூலமான சாதனங்கள் சில அறிந்தேன்.

ராஸிலஸ்:—நீர் நுட்பமாய் ஆய்ந்து அறியக் கருதிய விஷயத்துறை மிக விஸ்தரித்திருப்பதனால், உமது கண்ணுக்கும் கருத்துக்கும் அகப்படாமல் அநேக விஷயங்கள் தப்பியிருக்கவேண்டும். இதற்கு ஐயம் இல்லை. இத்தனைகாலம் நான் இம்மலையாண் சூழும் தரையில் சஞ்சரித்தும், வெளியில் உலாவிவரும் சமயந்தோறும் முன் என் கண்ணுக்காயினும் கருத்துக்காயினும் தப்பியிருந்த பொருள் ஏதேனும் ஒன்றைக் கண்டுவருகிறேன்—காணாத வேளை இல்லை.

இம்லாக்:—கவிவல்லோனுக்கு உரிய தொழில் வஸ்துக்களைத் தனித்தனி பிரித்தல்ல, ஜாதி ஜாதியாய் வகுத்து உய்த்துணர்வது; சாதாரண தர்மங்களையும் பாரித்த உருக்களையும் குறிப்பிடுவது:- பூவாசம் பூவிதழில் உள்ள ரேகைகள் கவிராயன் ஞாபகத்தில் பதிந்திரா. விருட்ச

வனப் பசுமையின் பற்பல பேதங்களை அவன் விரித்துரைக்கிறதில்லை. பிரகிர்திப் பொருளில் எளிதில் புலப்படும் முக்கிய குணம் குறிகளை அவன் சித்திரிக்கும் படத்தில் எத்திறமையோர்க்கும் தெளிய விளக்கவேண்டும்; நுணுக்கமாய்ப் பகுத்துணரும் நுட்பங்களை ஒருவன் கவனிப்பான், ஒருவன் கவனியான் — கவிஞன் அவைகளைக் குறிப்பிக்கவேண்டுவதில்லை. ஜாக்கிரதையுள்ளவர்கள்—இல்லாதவர்கள் ஆகிய இருதிறத்தார்க்கும் தடையறப் புலப்படும் லக்ஷணங்களைத் தப்பாமல் விளக்கவேண்டும்.

ஆனாலும், பிரகிர்தி ஞானம் என்பது கவிஞனுக்குத் தெரிந்திருக்கவேண்டிய கல்வியில் ஆக ஒரு பாதிதானே. அவன் நானுபேத ஜீவனோபாயங்களையும் நன்குணர்ந்திருக்கவேண்டும். அந்தந்த ஸ்திதிக்கு உரிய சுகதுக்கங்களை அளவிடுவதும், காமம் குரோதமுதலிய விகாரம் அனைத்தின் சக்தியை அவற்றின் புணர்ச்சிகள் யாவற்றிலும் கண்டறிவதும், ஊக்கம் வளரும் இளம்பருவம் தொடங்கி ஊக்கம் தளரும் முதிர்பருவமளவும் குலாசார மதாசார ஏற்பாடுகளாலும் தேசாசார—தேசோஷ்ண சீத சித்தியாய் விளையும் அனுகூல பிரதிகூலங்களாலும் மனதிற்கு உண்டாம் விகாரங்களைத் தொடர்ந்து அறிவதும் கவிவாணர் தொழிற்கு இன்றி அமையா. கவிஞன் தன் தேசத்திலும் காலத்திலும் தலைப்படும் அவிசாரமதியைக் (துரபிமானத்தை) களைந்துவிடவேண்டும்; யுக்தாயுக்தங்களின் ஸ்வரூபத்தைக் கண்டு சிந்திக்கவேண்டும்; தற்கால விதிகளையும் அபிப்பிராயங்களையும் கவனிக்காமல், சந்ததமும் மாறாதிருக்கும் 'உசித சர்தாரண சித்தாந்தங்களை நினைக்கவேண்டும். ஆனதுபற்றி, அவன் தன்

நாமம் விரைவில் பிரசித்தியாகாததை நினைந்து மனம் பேதிக்காது ரமித்திருக்கவேண்டும். தன் காலத்தில் உண்டாம் புகழைப் பெரிதெனப் பாராட்டவொண்ணாது. தன் செய்யுளின் சாராம்சத்தைப் பின்னோர் கண்டு இதாகிதம் தெரிந்து இகழ்ந்தாலும் சரி புகழ்ந்தாலும் சரியென்று எண்ணிச் சமசித்தமாயிருக்கவேண்டும். தன் செய்யுளை வாசிப்பவர்கள் அதன் அருமை பெருமையைக் கண்டு, இந்தக் கவிஞன் பிரவஞ்ச வியாக்கினி, மானிடர்க்கு நியாயப்பிரமாணிகன் என்று மனம் ஒத்துக் கொண்டாடும்படி அவன் செய்யுள் இயற்றவேண்டும். காலம் இடம் எனும் இரண்டின் பந்தம் அறுத்து உயர்ந்து, பின்னோர் சித்தவிர்த்தியையும் ஆசாரக்கிரமத்தையும் சீர்ப்படுத்தும் சிரேஷ்டாதிபதி நானே என்று அவன் நினைத்துக்கொள்ள வேண்டும்.

கவிஞன் தொழில் இம்மட்டில் ஒழிந்துபோகவில்லை. அவன் பல பாஷைகளிலும் சாஸ்திரங்களிலும் பயின்றிருக்கவேண்டும். தன் அபிப்பிராயத்திற்கு ஏற்கக் கம்பீரமான பாஷை நடை தனக்கு அமையும்படி அவன் இடையறாது எழுதி எழுதிப் பயின்று, விநயமான நாநாவித மொழித்தொடர்களையும் இன்சொற் புணர்ச்சி அழகையும் வழக்கப்படுத்தியிருக்கவேண்டும்.

# 11-ம் அதிகாரம்.

## இம்லாக்கின் சரித்திரம் (தொடர்ச்சி).

### புண்ணிய யாத்திரைக் குறிப்பு.

அப்பால் அந்த வைராக்கியாவேசம் இம்லாக்கின் உள்ளத்தில் உறைத்தது. அவன் தனக்குச் சொந்தமாய்க் கொண்ட விர்த்தியின் மேம்பாட்டை விரித்துரைக்கத் தலைப்பட்டான்.

ராஸிலஸ்:— (உரக்கக் கூவி) இந்தமட்டும் போதும்! உமது வாய்ப்பிறப்புக் கேட்டு, மானிடன் எவனும் கவிஞனாவது அசாத்தியமென்று என் மனம் தேறியது. — தொடங்கின சரித்திரத்தைச் சொல்லிக்கொண்டுபோம்.

இம்லாக்:—கவிஞனாவது கஷ்டந்தான்.

ராஸிலஸ்: — கஷ்டமென்று ஒருக்கால் சொன்னால் போதுமா—எட்டாப் பழத்தைப் பார்த்துக் கொட்டாவிக் கொள்வதுபோல, நாம் அவ்வரிய வரத்தை எண்ணி எண்ணி ஏமாறுவானேன்? நீர் பட்ட சிரமத்தை இன்னம் செவிகூர்ந்து கேட்க எனக்கு இப்பொழுது மனம் இல்லை. பாரசீகத்தைப் போய்ப் பார்த்தபின் எங்குப் போனீர் சொல்லும்.

இம்லாக் நாவலன்:—பாரசீகத்தினின்று பிரயாணப்பட்டு, ஸிரியா பிரதேசத்திற்குப் போய், மூன்று வருஷம் பலஸ்தீனாவில் வாசமாயிருந்தேன். அங்கிருக்கும் பொழுது வட ஐரோப்பா தென் ஐரோப்பா தேசத்து மனு

ஷர் வெகு பெயரைக் கண்டு சம்பாஷித்தேன். தற்காலத்தில் அத்தேசவாசிகளுக்கே சர்வ அதிகாரமும் சமஸ்த கல்விப்பொருளும் ஸ்வாதீனம்; அவர்கள் சைனியங்களுக்கு எதிர்நிற்க வல்லவைகள் இல்லை. அவர்கள் கப்பற்படை அதிதூர தேசங்களுக்கெல்லாம் போய் அங்கங்கு ஆதிக்கம் அடைகின்றது. நான் அவர்களையும் நமது ராச்சியத்துப் பிரஜைகளுடன் சுற்றுப்பிரதேசவாசிகளையும் தரம் குறிக்க இணைநோக்காய்ப் பார்த்தபொழுது; அவர்கள் நம்மைப்போல மானிடரல்ல, ஏதோ அபூர்வ ஜன்மம் எடுத்தவர்களென்று என் கருத்திற்பட்டது. அவர்கள் தேசத்தில் விரும்பும் எவ்வகைப் பொருளும் கைக்கு எட்டாதிருப்பது அரிது. நாம் பெயர் முதலாய்க் கேட்டிராத சுகானுபோக உபாயங்கள் ஆயிரம் பதினாயிரம் இடையறாது அவர்கள் தேசத்தில் நடந்துவருகின்றன. அவர்கள் தேசத்திற்கு அன்னியமான பொருள்வகை எதுவும் இதரதேசங்களினின்று வர்த்தகரால் அங்கே கொண்டுபோய்ச் சேர்க்கப்படும்.

11 ஸில ம: — ஐரோப்பியர் இவ்வாறு பலத்திருப்பதற்கு ஏதுக்கள் என்ன? வர்த்தக முகாந்தரமாயானாலும் தேசம் கட்டி ஆளு முகாந்தரமாயானாலும் அவர்கள் ஆசியா ஆப்பிரிக்கா கண்டங்களுக்கு எளிதில் வரப்போக இடம் பெற்றிருக்க, ஆசியரும் ஆப்பிரிக்கரும் ஐரோப்பியர்களை அடுத்த பிரதேசங்களில் தாவடி போகவும், துறை சார்ந்த இடங்களில் தங்கள் ஜாதி ஜனத்தைக் குடியேற்றவும், அந்நிலத்தரசரைச் சட்டதிட்டங்கள் விதித்து ஆளவும் கூடாதிருப்பதேன்? இங்கிருந்து அவர்களை ஜன்மதேசத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும் காற்று நம்மையும் மீண்டு இவ்விடத்தில் கொண்டுவந்து சேர்க்குமே.

**இம்லாக்:**—ராஜபிரபூ, நம்மிலும் அவர்கள் அறிவின் மிக்கோராதலால் பலசாலிகள். மனுஷர் இதர ஜீவஜாதிகளை அடக்கி ஆளும் வண்ணம் அறிவு அறியாமையை எப்பொழுதும் கீழ்ப்படுத்திக்கொள்ளும். நம்மிலும் அவர்களுக்கு அறிவு அதிகரித்திருப்பதேனென்று என்னைத் திருப்பிக் கேட்பீராகில், நான் அதற்கு நியாயம் மனுஷருடைய மிதபுத்திக்கு எட்டாத ஈஸ்வர சித்தமன்றி, மற்றென்னவென்று அறியேன்.

**ராஸிலஸ்:**— (பெருமூச்சு எறிந்து) நான் பலஸ்தீனுவிற்குப் போய் அங்கே நானுதேசத்தார் கூடும் பிரபலமான கூட்டத்திற் சேர இடம்பெறும் காலம் எக்காலமோ? அந்தச் சுபகாலம் கிட்டுமளவும் வீணில் பொழுதுபோக்காவண்ணம் உம்மால் இயன்ற குறிப்புகளை எனக்குச் சொல்லும். அவ்விடத்தில் ஜனம் திரளாய்க் கூடும் முகாந்தரம் எனக்குத் தெரியாதிருக்கவில்லை. சர்வதேசங்களிலுமுள்ள சற்குணரும் நிபுணரும் இடையறாது ஒருங்கு கூடத்தகும் அவ்விடம் ஞானமும் பக்தியும் முக்கியமாய்க் குடிகொள்ளும் ஸ்தலமென்று என் சிந்தனையில் தோன்றுகிறது.

**இம்லாக்:**—சில தேசத்தார் பலஸ்தீனுவிற்குப் போகிறதில்லை. ஐரோப்பாவில் முதிரக் கற்ற வெகு வெகு சமயபேதிகள் புண்ணிய யாத்திரை செய்வது மூடபக்தர் இயல்பென மனம் ஒத்துக் கண்டித்துரைப்பதும், நகைப்புக்கு இடமென நிந்தை சொல்வதும் உண்டு.

**ராஸிலஸ்:** — சிறையிருப்பவன்போல நான் இங்கு அடைந்திருப்பதுபற்றி அங்கங்குள்ள வெவ்வேறு சமயக்கோட்பாடுகளை அற்பமேனும் அறியாதிருக்கிறேன். இது உமக்குத் தெரியுமே. இருபக்ஷத்தார் விவகாரமும்

ஆதியந்தமத்தியம் கேட்டுத்தீர அவகாசம் இராது. அவைகளை நீர் முதிரச் சிந்தனைசெய்திருக்கிறீரே—உமது சித்தாந்தம் என்ன சொல்லும்.

**இம்லாக்:**—தாயைப்போலே பிள்ளை, நூலைப்போலே சீலை. புண்ணிய யாத்திரை செய்வதற்கு மூலம் ஏதாயினும் ஒரு முகாந்தரம். அம்முகாந்தரம் யுக்தமானால், யாத்திரையும் யுக்தம்; விபரீதமானால், யாத்திரையும் விபரீதம். மற்றுள்ள பக்தி கிரியைகளும் இவ்வாறே. சத்தியத்தை நாடி அதிதூரகாதம் யாத்திரை போகவேண்டுமென்று தேவகற்பனை இல்லை. நன்னெறியில் செல்வதற்கு ஆவசியகம் அறியவேண்டிய சத்தியத்தை இருக்கும் இடத்தில் இருந்தே நேர்மனதாய்த் தேடினால் கண்டறியலாம். ஸ்தானபேதம் பக்தி அபிவிர்த்திக்கு இயற்கையான காரணமல்ல. ஸ்தானபேதத்தால் மனநிலை சிதறிப்போவது திண்ணம். ஆனாலும், மகத்துவமான கிரியைகள் நடந்த ஸ்தலங்களை மனுஷர் அன்றன்று போய்ப் பார்த்து அவைகள் நினைவில் அழுந்திப் பதியப் பெற்றுத் திரும்புவதைக் காண்கிறோம். அவ்வண்ணம் நமக்கு அதிக பக்தி சிரத்தை உண்டாமென்று எண்ணி, நமது சமயம் ஆதியில் உற்பத்தியான பலஸ்தீன என்னும் புண்ணிய பூமியைப் போய்ப் பார்த்துவர நம் உள்ளத்தில் ஆசை மூள்வது இயற்கையே. வணக்கமும் அச்சமும் உண்டாக்கும் அந்த ஸ்தலங்களைத் தரிசிக்கும் எவனுக்கும் திரு நிர்ணயங்கள் எவ்வளவேனும் திடப்படாமல் போவதில்லையென்று எண்ணுகிறேன். பாப கர்மம் தீர ஈஸ்வர கடாக்ஷத்தை ஸ்தல விசேஷத்தால் எளிதில் பெறலாகுமென்று எண்ணுவது வீணராகிய மூடபக்தர் காணும் சொப்பனம். ஆனாலும் சில ஸ்தலங்களைக் காணும்பொழுது நம் இத

பத்தில் அபூர்வ சிந்தனைகள் உண்டாய், இம்மதம் உள்ளது. இதற்கு நாழிகைதோறும் நமது அனுபவமே சாட்சி. பலஸ்தீனாவிற்குப் போனால் பாபம் தொலையுமென்று எண்ணுபவன் அவ்வெண்ணம் அபத்தமென்று காண்பான். ஆனாலும் அவன் அங்குப் போவது பைத்தியமல்ல. அந்த ஸ்தலத்தில் தெய்வம் தன் பிழையை மிக எளிதில் பொறுத்தருளுமென்று நம்புகிறவன் தன் மதி—மதம் இரண்டுக்கும் பங்கம் வருத்துகிறான்.

**ராஸிலஸ்:**—இவைகள் ஐரோப்பியர்க்கு உரிய நுட்பாதி நுட்பங்கள். இவைகளை இப்பொழுதல்ல, இனி ஒரு பொழுது சிந்திப்பேன். அறிவின் பயன் என்ன? நீர் கண்டதைச் சொல்லும். அறிவின் மிக்கோரென்று நீர் குறிப்பித்த ஐரோப்பியர் நம்மைக்காட்டிலும் சௌபாக்கியவந்தரா?

**இம்லாக்:**—இவ்வுலகில் இன்பமல்ல, துன்பம் அதிகம். யாவரும் அவரவர் துன்பத்தில் உழன்று அவதிப்படுகிறார். தன் சுகத்திற்கும் பிறர் சுகத்திற்கும் தாரதம்மியம் கண்டறிய ஒருவனுக்கும் அவகாசம் இல்லை. இன்பம் தரும் சாதனங்கள் பலவற்றுள் ஒன்று அறிவு. இது நிசம். இதற்குச் சாக்ஷி கருத்துப்பொருளை வரவரப் பெருக்க எவரெவர்க்கும் இயற்கையாயுள்ள வாஞ்சையே. அறியாமை என்பது ஒன்றும் இல்லை. அது சுத்த சூனியம். அதனால் ஒன்றும் பலிக்காது. அது ஆத்மா ஆகருஷணமின்றி நிர்ச்சலனமாய்த் திமிர்த்திருக்கும் அவாந்தரம். அறியாத ஒன்றை அறியும்பொழுதெல்லாம் நமக்கு ஆனந்தமும், அறிந்ததை மறக்கும்பொழுது வியாகுலமும் உண்டாம். உண்டாகும் நிமித்தம் எதென்று நமக்குத் தெரியாது. ஆனதுகொண்டு, கற்றதனால் ஆம் பயனுக்கு

விக்கினம் ஒன்றும் இல்லாவிடில், நமது அறிவு அகல அகல, ஆனந்தம் பெருகுமென்று அறுதியிட என் மனம் சாய்கின்றது.

இவ்வுலகில் மனுஷருக்கு வேண்டும் முக்கிய சுகானுபவங்களை எண்ணிடுமளவில், நம்மிலும் ஐரோப்பியருக்கே அவை பெரும்பாலும் ஸ்வாதீனமென்று காண்போம். நம்மை மெலிவித்துக் கொல்லும் காயங்களையும் பிணிகளையும் அவர்கள் பரிகரிக்க வகை அறிவார்கள். நம்மை வருத்தும் காலபேத நிஷ்டூரத்திற்கு அவர்கள் வகை அறிந்து விலகமாட்டுவார்கள். நாம் கஷ்டப்பட்டுக் கையால் செய்யும் பருவேலைகள் பலவற்றை அவர்கள் யந்திரப் பிரயோகத்தால் எளிதில் செய்து முடிக்கிறார்கள். அவர்களுக்கு இஷ்டர்கள்—இனம் ஜனம் ஒரே இடத்தில் கூடியிருப்பதும் சரி, தேசாந்தரம் போய்ப் பிரிந்திருப்பதும் சரியே. அவர்கள் எத்தூரதேசத்திற்கும் செய்தி அனுப்பி, க்ஷேமாதிசய முதலியவைகளை எளிதில் அறிந்து கொள்ளத்தக்க உபாயங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஊர்ச்சுகத்திற்குப் பிரதிகூலமாய் உண்டாகும் அனைத்தையும் அவர்கள் இராச்சிய நிர்வாக தந்திரம் தொலைவிக்கின்றது. அவர்கள் கன்மலைகளை ஊடறுத்துப் பாதை வைத்திருக்கிறார்கள்; ஆறு கடக்க வாரதி கட்டியிருக்கிறார்கள். ஜனசமுதாய க்ஷேமத்தை விட்டு, இனி அவர்கள் குடும்ப சுகசாதனங்களைச் சிந்திப்போமானால், நம்மிலும் அவர்களுக்கே சுகம் அதிகமென்று காண்போம். அவர்கள் வசிக்கும் வீடுகள் மிக வசதியானவைகள்; அவர்கள் அச்சமற்று அவரவர் சொத்தை வைத்து அனுபவிக்கிறார்கள்.

ராஸிலஸ்:—இந்தச் சுகம் அனைத்தும் பெற்று அனுபவிப்பவர்கள் சௌபாக்கியவான்கள்தானே. இவற்றுள், வேற்றிடத்தில் பிரிந்திருக்கும் சிநேகிதர்கள் தம் மனக்கருத்தை ஒருவர்க்கு ஒருவர் தடையற எளிதில் தெரிவித்துக் கொண்டுவருகிறார்கள் என்றீரே — இது ஒன்றிலேயே எனக்கு முக்கிய வாஞ்சை உண்டாயிருக்கின்றது.

இம்லாக்:—சம்மளவு துக்கம் ஐரோப்பியர்க்கு இல்லை. ஆனாலும் அவர்கள் சௌபாக்கிய சம்பன்னரல்ல. எந்தெந்தத் தேசத்திலும் மனுஷருக்குத் துன்பம் மிகுதி, இன்பம் மிதம்.



## 12—ம் அதிகாரம்.



### இம்லாக்கின் சரித்திரம் (தொடர்ச்சி).



ராஸிலஸ்: — இந்தப் பாழுடம்பு எடுத்த மானிடர்க்குத் தெய்வம் இன்பத்தை இவ்வாறு சிறுகக் கொடுத்திருப்பதாக நீர் சொல்வது எனக்குச் சமாதானமல்ல. அன்றியும், என இதயத்திற்கு இதமான நிலையில் இருக்க இடம் பெறுவேனானால், இடையறாது பிரதிதினமும் இன்பம் உண்டாம் வகை செய்ய மாட்டுவேனென்று நெஞ்சார நம்பாதிருக்க என்னால் இல்லை; நான் ஒருவனுக்கும் அபகாரம் செய்யேன்; மனக்கடுப்பு வருத்தேன்; உதவிபுரிந்து எவ்வகை ஆபத்தையும் தீர்ப்பேன்; பிறர்க்கு உபகாரம் செய்து நல்லவனென்று பெயர் எடுப்பேன்; அறிவுடையோரை அடுத்து உறவாடுவேன்; குணமணி எனத் தகும் பெண்ணைத் தேடிக் கட்டிக்கொள்வேன்.

ஆனதுபற்றி, எனக்குச் சதிசர்ப்பனை செய்வோர், நிர்த்தாக்ஷிண்யர் எவரும் இல்லையென்று அச்சமற்றிருப்பேன். எனது ஜாக்கிரதையால் என் புத்திரர் புத்திரிகள் வித்தை பக்தி சித்தியுடையோராகி, இளமையில் என்னால் பெற்ற உபகாரத்திற்கு முதிர்பருவத்தில் எனக்கு அவர்கள் பிரதியுபகாரம் செய்வார்கள். ஒருவனிடத்தில் திரவிய உபகாரம் பெற்றுச் செல்வரானவர்களும், பல உதவி பெற்றுப் பலக்ஷயம் தீர்ந்தவர்களும் ஆயிரவர் பதினாயிரவர் நாற்றிசையும் நெருங்கிச் சூழ்ந்திருக்க, அவனைப் பீடிக்க வல்ல தொல்லை என்னதான் வரப்போகிறது? வெகு ஜனோபகாரம் செய்து உபசரணை பெற்றுச் சுகித்திருக்கும் ஒருவன் வாழ்நாள் நிர்ப்பந்தமின்றிச் செல்லும்—நிர்ப்பந்தம் உண்டாக நிமித்தம் என்ன? ஐரோப்பியர்க்கு உரிய நாகரிகத்தின் உதவியின்றி மேற்சொல்லிய அனைத்தையும் சாதிக்கலாம். சித்தியை நோக்குமிடத்தில், அந்நாகரிகம் முக்கியமாய்ப் பயன் தருவதாக அல்ல, பகட்டானதாகத் தோன்றுகிறது. இனி இவைகளை நிறுத்தி, பிரயாண வரலாற்றைத் தொடர் அறுமல் சொல்லும்.

இம்லாக்:—பலஸ்தீனவிலின்று கிளம்பி, ஆசியாவைச் சேர்ந்த பிரதேசங்கள் அநேகத்தை ஊடறுத்துச் சென்றேன். நாகரிக அபிவிர்த்தியுள்ள ராச்சியங்களில் நான் வர்த்தகனாகவும், கொச்சைமக்கள் சஞ்சரிக்கும் மலைநாட்டில் யாத்திரிகனாகவும் கோலம் மாறித் திரிந்தேன். இப்படி நாட்பட நெடுந்தூரம் பிரயாணம் செய்து இளைத்து அலுப்புற்றபின், இளைப்பாறிச் சுகித்திருக்கவும், பிரயாணகாலத்தில் அங்கங்கே கண்டது கேட்டது பட்டது உற்றதை என் பழைய தோழருக்குச் சொல்லி

மகிழ்ச்சி உண்டாக்கவும் என் ஜன்ம தேசத்திற்குப் போகவேண்டுமென்று எனக்குப் பதைப்பு உண்டாயிற்று. பால்யகாலத்தில் என் அண்டையில் கூடும் இஷ்டருக்குக் கதைசொல்லி வியப்பு உண்டாக்கியும், செவி கூர்ந்து கேட்கப் புத்தி புகட்டியும் இனிதாகப் பொழுது போக்கியது இன்று நேற்று நடந்ததுபோலப் பலகால் என் ஞாபகத்தில் வந்தது.

இவ்வெண்ணம் என் சிந்தையில் குடிகொள்ளத் தொடங்கியபின், நான் அபிஸினியாவிற்கு வழிகொண்டு போகாமல் கழிக்கும் நொடிப்பொழுது அத்தனையும் வீண்பொழுதாய்ப் போகிறதென்று நினைத்தேன். பின்பு எகிப்து தேசத்திற்குத் விரைந்து போனேன். அங்கிருந்து பெயர்ந்து ஊருக்கு அதிகதியாய்ப் போய்ச் சேரவேண்டுமென்று என் மனம் பதைக்கப் பதைக்க, எகிப்தின் பூர்வ அலங்காரத்தைக் கண்டு சிந்திக்கவும், பூர்வத்தார் பயின்ற கல்வித்துறைகளில் மறந்து ஒழிந்தவைகள் போகத் தப்பி ஒட்டியிருந்தவைகளை நுட்பமாய் ஆய்ந்து தெளியவும் அங்கே பத்து வருஷகாலம் சென்றது. கயிரோ நகரத்தில் சர்வ தேசத்து மனுஷரையும் கண்டேன். சிலர் அங்கே வித்தியாபிலாசையால் போனவர்கள்; சிலர் திரவிய லாபத்தை நாடிக் கூடினவர்கள்; பலர் தம் இதயத்திற்கு இதமானபடி, பிறர் கவனிக்காவண்ணம் நாள் கழிக்கவும், ஜனத்திரள் என்னும் திமிரத்தில் மறைந்திருக்கவும் ஆவலித்து அங்கே அடைந்தவர்கள். குடித்தொகை பெருகிய கயிரோபுரியில் வெகு ஜனசகவாச போகமும் ஏகாந்த வாழ்விற்கு உரிய அந்தரங்கமும் ஏககாலத்தில் அமையினும் அமையும்.

கயிரோவை விட்டு நீங்கி ஸூவேசுக்குப் போய், செங்கடலில் கலம் ஏறி, கணை அடுத்துப் பாய்வலித் தோடி, இருபது வருஷத்திற்கு முன் நான் கப்பல் ஏறின துறையில் இறங்கினேன். இறங்கி, வழியில் கண்ட பிரயாணிகளுடன் துணைகூடி நான் பிறந்து வளர்ந்த தேசத்தில் போய்ச் சேர்ந்தேன்.

சேர்ந்தவுடன், உற்றார் உறவர் என்னைச் சீராட்ட, இஷ்டர்கள் மீளவும் நான் க்ஷேமமாய் வீடுபோய்ச் சேர்ந்தது தங்கள் பாக்கியமெனப் பரிவுடன் வாழ்த்துவார்களென்று எண்ணமிட்டிருந்தேன். அன்றியும், திரவியமே இவ்வுலகில் எல்லாவற்றிலும் உயர்ந்த பேறெனப் போற்றும் பிரகிர்தியுள்ள என் தந்தை இச்சமயத்தில் அதை மறந்து, தமது தேசத்தின் வைபவத்தையும் மானத்தையும் விர்த்திப்பிக்கும் திறமை பெற்று மைந்தன் சிந்தாயாத்திரையாக வந்து சேர்ந்தானென்று மனமகிழ முகமலர்ந்து பெரிது பாராட்டிக் கொண்டாடுவாரென்று எண்ணமிட்டிருந்தேன். இவ்வாறு எண்ணிய எண்ணம் எல்லாம் வியர்த்தமென நான் அறிய நாழிகை செல்லவில்லை. என் பிதா இறந்து பதினாலு வருஷமாயிற்று. இறக்குமுன் அவர் தமக்கு உள்ள சொத்தை என் சகோதரருக்கு விபாகித்துக்கொடுக்க, அவர்கள் அவரவர் பாகத்தைப் பத்திரமாய்க் கொண்டு இதர பிரதேசங்களுக்குப் போய்விட்டார்கள். என் தோழரில் பெரும்பாலார் இறந்துபோயினர். இறவாதிருந்தோர் சிலர் இவன் இன்னுனென்று என்னை எளிதில் அறியவில்லை; சிலர் இவன் அன்னிய தேசாசாரத்தை அனுசரித்து ஜன்ம தேச வழக்கத்தைத் தீர்ப்பாய் மறந்த சீர்கேடனென்று என்னைச் சிறக்கணித்தார்கள்.

ராஸிலஸ்:—அறுதியில் இங்கே சுகம் கண்டீரோ? ஒளிக்காமல் சொல்லும். இந்த நிலை ஏற்கும் நிலையென்று ரமித்திருக்கிறீரா, அல்லது மீளவும் தேசாந்தரம் போய்க் காணும் எதையும் தீர விசாரித்து அறிய ஆசித்திருக்கிறீரா? இப்பள்ளத்தாவாசிகள் சமஸ்தரும் தங்கள் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டமென்று கொண்டாடுவார்கள். அன்றியும், வருஷம் ஒரு முறை சக்கரவர்த்தி இங்கு எழுந்தருளும்பொழுது தங்களைப்போலச் சுகிக்கும்படி அவர்கள் பிறரை அழைத்துச் சம்பிரம விருந்து செய்வார்கள்.

இம்லாக்:—மகத்வம் மிக்க ராஜபிரபூ, ஒளிக்காமல் உள்ளது சொல்வேன். இவ்வொடுக்கிடத்தில் வந்திறங்கிய முகூர்த்தம் இப்படி அமங்கல முகூர்த்தமாய் முடிந்ததேயெனப் பிரலபிக்காதவர் ஒருவராவது தங்கள் பரிவாரத்தில் இல்லை. நானோ, மனம் கொண்டமட்டும் வகை வகையான கருத்துப்பொருள் அமைத்திருக்கிறேன். அவைகளை இஷ்டப்படி உருமாற்றவும், ஒன்றோடொன்று புணர்த்தவும் எனக்குச் சமர்த்து உண்டு. ஆதலால், இங்கிருக்கும் எவர் துக்கத்திலும் என் துக்கம் குறைவு. நான் தன்னந்தனியே இருக்கும் சமயத்தில் எளிதில் பொழுதுபோக்கும்படி, எனக்கு மறதியாய்ப் போகத் தொடங்கும் கல்விநுட்பங்களைப் பெயர்த்து நினைத்து ஞாபகத்தில் இருத்துவேன். முன்பு எனக்கு வந்துற்ற ஆபத்து விபத்துக்களை நினைவுகூர்வேன். இவ்வாறு நான் ஏதேது உபாயங்கள் செய்தும், அறுதியில் என் கல்விப்பொருட் சம்பாத்தியம் எல்லாம் நிஷ்பிரயோஜனமாயினவென்றும், அனுபவித்த இன்பம் ஒன்றும் மீண்டு அனுபவிக்கத் தக்கதல்லவென்றும் எண்ணி வியாகுலித்தேன். அப்போதப்போது புலப்படும் விஷயமன்றி

வேறு விஷயம் நெஞ்சில் அழுந்த அமைத்திராத இதர ஜனங்கள் அறக்கொடிய மனோவிகாரங்களால் நாளுக்கு நாள் தேய்ந்து சிதைவுறுவார்கள்; அது தப்பினால், நிரந்தர சூனிய திமிரத்தில் நட்ட கட்டைகள்போலத் திமிர்த்திருப்பார்கள்.

**ராஸிலஸ்**: — எதிரிகள் இல்லாதவர்களுக்கு மனதில் என்ன விகாரம் தலைப்படப்போகிறது? நாம் சஞ்சரிக்கும் இடத்தில் வீரமும் இல்லை, துரோகமும் இல்லை, போகபேதமும் இல்லை, பொறாமையும் இல்லை.

**இம்லாக்**:—பொருட்சம்பத்தில் போக ஐக்கியம் இருந்தாலும் இருக்கும். அன்பு, அபிமானம் என்னும் ரசங்களிலோ ஐக்கியம் ஒருக்காலும் இராது. இன்பம் பகட்டும் திறத்தில் ஒருவனுக்கு ஒருவன் கதித்திருப்பான். பிறர் தன்னைப் புறக்கணிப்பதை அறிபவனுக்கு அவர்கள்மீது பொறாமை உண்டாம். புறக்கணிப்பவர் சமூகத்தில் சஞ்சரிக்க வைத்து நிர்ப்பந்தப்படுத்தினால், அவனுக்குப் பின்னும் அதிக பொறாமையும் கெடுநினைவும் உண்டாம். கேடுகெட்டதென்று அவர்கள் தாமே பட்டறியும் நிலைக்கு வரும்படி ஆசைபதம் காட்டிப் பிறரை அழைப்பதற்கு மூலம் மீளாத்துயருடன் பிறந்த விஷமமே. அவர்கள் தமக்குத் தாமே அலுத்தும், ஒருவர்க்கு ஒருவர் அலுப்புற்றும் வருந்துவதனால், நூதன மனுஷர் தம் கூட்டத்திற் சேர்ந்தால், அவ்வலுப்பு ஒருவாறு தீருமென்று எண்ணமிட்டிருக்கிறார்கள். நீதிகெட்டுத் தாம் போக்கடித்த ஸ்வதந்திரத்தை அனுபவிக்கும் மற்ற மனுஷர்மீது பொறாமை அடைந்து, தம்மைப்போல் எல்லாரையும் சிறையிருத்திக்கொள்ளப் பதைக்கிறார்கள்.

ஆனாலும், இந்தப் பழி இறையளவும் என்னைச் சூழாது. உன் சொற் கேட்டுக் கெட்டேனென்று என் முகம் பார்த்துச் சொல்லத் தக்கவன் எவனும் இல்லை. இச்சிறைச் சாலைக்குட் சேர வருஷாந்தரம் வருந்திக்கேட்கும் ஜனத்திரளை நினைத்துப் பரிதபிக்கிறேன். இங்குள்ளோர்க்கு இன்னின்ன அபாயம் உண்டாமென்று வெளியிட்டு எச்சரிக்க எனக்கு மனம் கொள்ளா ஆசை உண்டு—அதற்கு ராஜசட்டம் இடம் தராதே.

**ராஸிலஸ்:**—கேளும் இம்லாக், நீர் எனக்குப் பிராண பதம். இனி உமக்கு என் உள்ளத்தைக் கள்ளமின்றித் திறந்து காட்டுவேன். ஆனந்தபூமி ஆகிய இப்பள்ளத் தாக்கினின்று ஓடித் தப்ப நெடுநாட்பிடித்து நினைத்திருக்கிறேன். வழி காணும்படி மலையரணை நாற்றிசையும் சோதித்துப் பார்த்தேன். வழி துறை தெரியாமல் நீங்கரிய இச்சிறையில் இருந்து வருந்துகிறேன். சிறை நீங்கும் வகை எனக்குத் தெரியச் சொல்லும். இங்கிருந்து ஓடிப்போகும்பொழுது எனக்கு வழித்துணைவர் நீர்; நான் செல்லும் இடந்தோறும் வழிகாட்டி நீர்; எனக்கு உண்டாம் சுகதுக்கங்களுக்குப் பங்காளி நீர்; உலகத்தில் இன்ன நிலை ஏற்கும் நிலையென்று எனக்கு உணர்த்தும் குருவும் நீரே.

**இம்லாக்:**—துரையே, இங்கிருந்து விலகுவது கஷ்டம். எவ்வாறேனு விலக இடம்பெறினும், இந்த ஆசை விபரீதமென்று ஒருவேளை அடிக்குள்ளே கண்டு தாம் அனுதபிக்க வரினும் வரும். உலகப்பரப்பு இங்குள்ள ஏரியைப் போல அலைக்கிளர்ச்சியும் இரைச்சலும் அற்றதென்று தாம் பாவித்திருப்பது விபரீதம். அது பிரசண்டமாருதச் சுழல் வந்து வந்து அடித்து அலைத்திரள் நுரைத்து நீர்

சுழித்துக் கொதித்துப் பொங்கும் ஆழ்கடலென்று காண்பீர்; சிலவேளை வல்லடி எனும் திரை புரண்டு தம்மை ஆழியில் அமிழ்த்தும்; சிலவேளை சதி எனும் பாரில் தாக்கி அதிர எற்றிவிடும். அதிக்கிரமமும் கிருத்திமமும் சடுத்தமும் சஞ்சலமும் சமைத்துக்கொள்ள, தாங்கும் தரமின்றி, கிலேசமுடன் நிலைபெறாத் தடுமாறுவரும் இந்த ஸ்தலத்தில் மீளவும் வந்தடையத் தக்கப் பேரவா உண்டாகும். தாம் இங்கு அச்சமற்று அசோகையாயிருக்க ஆசையைச் சிந்தாபூர்வமாய்க் கைவிடுவீர்.

**ராஸிலஸ்:**—கருதிய கருமம் கைக்கொள்ளாவண்ணம் என்னைத் தடுக்கப் பார்க்கவேண்டாம். நீர் கண்டு வந்ததைப் போய்க் காண என் மனம் பதைக்கின்றது. இந்நாள் வரையில் இப்பள்ளத்தாக்கில் இருந்து அடக்கே அலுப்புத் தட்டிவதனால், இந்நிலைக்கு உமது முன்னிலை நன்னிலை என்பது பிரத்தியக்ஷம். நான் செய்யும் சோதனை வாய்த்தாலும் சரி, வாய்க்காதிருந்தாலும் சரி, மனுஷருடைய நிலைவேறுபாடனைத்தையும் என் கண்ணால் கண்டு நிதானித்து, அப்புறம் இன்ன நிலை எனக்கு இதமாகுமென்று சிந்தித்துத் தெளியச் சங்கற்பித்திருக்கிறேன். "கண்டது காட்சி, பெற்றது பேறு" எனப் பழமொழியும் இருக்கிறதே.

**இம்லாக்:** — தமக்கு என் சொல்லிலும் பலமான தடைகள் உண்டென்று ஐயமுற்றிருக்கிறேன். ஆனாலும், சித்தசமுசயம் எத்துணையுமின்றிக் கருமம் கடைப்பிடிக்க நியதி செய்திருப்பீரானால், சாதிக்கமாட்டீரென்று சொல்லித் தமக்கு வியர்த்தமாய்த் துயர் வருத்துவானேன்—தாளாண்மையும் சாதுரியமுமுள்ளவனால் சாதிக்கலாகாதது ஒன்றும் இல்லையே.

# 13-ம் அதிகாரம்.

ராஸிலஸ் மலைப்பாணை ஊடறுத்துச் சிறைநீங்க
வழி கண்டது.

அப்பால் ராஜகுமாரன் தன் நண்பனை நித்திரை செய்து இளைப்பாற விடைகொடுத்து அனுப்பிவிட்டான். அதிசயங்களையும் புதுமைகளையும்பற்றிக் கேட்ட வரலாறுகளால் அவன் சித்தம் சலித்தது. கேட்ட எல்லாவற்றையும் அவன் பெயர்த்துப் பெயர்த்து நினைக்க, வெகு வெகு சந்தேகங்கள் பிறந்தன. மறுநாட்காலையில் அவைகளைச் சொல்லித் தெளிய மனதில் வைத்திருந்தான்.

முன் அவனுக்கு உள்ள சஞ்சலம் முக்காலே மூன்றுவீசம் தீர்ந்தது. தன் மனக்கருத்தைக் கூசாமல் சொல்லவும், தான் கருதிய கருமத்தில் வேண்டும் உதவி பெறவும் அநுபவம் முதிர்ந்த ஆப்தன் ஒருவன் அவனுக்கு இருந்தானே. முன்பு சஞ்சலம் பெருகிச் சொல்லி ஆற எவருமின்றி அவன் மனம் திண்டாட்டப்பட்டது. இப்பொழுதோ அந்த உபாதி அவனுக்கு இல்லை. "இவர் தோழமை விடாதிருப்பேனானால், இவ்வானந்த பூமியிலும் இருந்து உத்தரிக்கமாட்டேன். இவருடன் உலகப் பரப்பு எங்கும் உலாவித்திரிய இடம்பெறுவேனாகில், அப்புறம் எனக்கு ஒன்றிலும் ஆசை இல்லை" என்று அவன் நினைத்தான்.

சில நிமிஷத்திற்குள் பிரவாகம் ஓடிவடிந்து தரை உலர்ந்தது. பிறர் காணு இடத்தில் சம்பாஷிக்க ராஜகுமாரனும் இம்லாக்கும் வெளிப்பட்டு உலாவிக்கொண்டிருந்தார்கள். ராஜகுமாரனுடைய மனமானது பக்ஷிபோல் எப்பொழுதும் சிறகு விரித்துப் பறந்துகொண்டிருந்தது. மலைமதிற் கோட்டைவாசற் கதவின் கிட்டப் போகும்பொழுது, பூரணசந்திரன்போலும் ஒளியுள்ள முகத்தில் துக்கம் விளங்க, அவன் கதவைப் பார்த்து, "உனக்கு அற்புத பலமும், மனுஷருக்கு அதிக பலக்ஷயமும் உண்டானதேன்?" என்று கேட்டான்.

அதற்கு அவன் கூட்டாளி பகர்ந்த மறுமொழி இது:— "மனுஷன் பலவீனனல்ல. அளவிற்கு அளவாய்ப் பார்க்கில், யந்திரபலத்திற்கு அறிவின் பலம் அதிகம். யாந்திரிகனுக்குப் பலம் திரணப்பிராயம். அதைச் சாமானியர் பெரிதென வியக்க, யாந்திரிகனுக்கு நகைப்பு உண்டாம். நான் இந்தப் பிரமாண்ட கபாடத்தை க்ஷணநேரத்தில் சப்தமின்றிப் பெயர்க்கமாட்டுவேன். சப்திக்காமல் பெயர்க்க என்னால் மாளாது. ஆதலால், இதைவிட்டு, சித்திக்கும் உபாயம் மற்றெதையிலும் செய்யவேண்டும்."

அவர்கள் இருவரும் மலைச்சாரலில் நடக்கும்பொழுது, மழைக்கு வளையினின்று வெளிப்பட்ட குழிமுயல்கள் புதரில் அடைந்து, சரிவாக வர வர உயரும் நுழைவளை தோண்டியிருக்கக் கண்டார்கள். கண்டு இம்லாக் கவிராயன், "மனுஷர் அறிந்திருக்கும் வித்தைகள் அநேகம் ஆதியில் மிருக இயற்கையறிவின் சித்தியைக் கண்டு இயற்றப்பட்டவைகளென்பது பூர்வ ஜனமதம். ஆதலின், நாம் அறியாததை இக்குழிமுயலிடத்திலிருந்து கிரகித்துக் கொள்வது நமக்கு இழிவல்ல. இந்த நுழைவளையைப்

போலச் சரிந்து வா வர உயர மலையைத் தொளைத்துக் கொண்டுபோவோமானல், இங்கிருந்து சுகமே வெளிப் பட மார்க்கம் ஏற்படும்.' மையத்தில் மலைச்சிகரம் கவிந்திருக்கும் இடத்தினின்று உயரத் தொளைத்துக்கொண் டுபோவோம். இப்படிச் செய்தால், மலை புடைத்திருக் கும் இடத்திற்கு அப்பால் வெளிப்படலாம்" என்று உரைத்தான்.

இம்மொழி செவிப்படவும், ராஜகுமாரன் விழி இரண் டும் மிக்க களிப்பால் பளபளெனத் துலங்கின. கவிரா யன் சொல்லிய உபாயத்தை முயன்று செய்வது எளிது, எண்ணியவண்ணம் கருமம் முடிப்பது நிசம்.

அப்பால் அவர்கள் காலஹரணம் செய்யவில்லை. மறு நாள் அதிகாலையில் சுரங்கம் அறுக்க வளம்பெறும் இடம் பார்க்க விரைந்து போனார்கள். பாறைகளுக்குள்ளும் முட்செடிகளுக்குள்ளும் நெடுநேரவரையில் இளைக்க இளைக்க மலை ஏறிப் போய்ப் பார்த்து, தங்கள் கருமத் திற்கு வாய்க்கும் இடம் காணமல் திரும்பி இறங்கிப்போ னார்கள். அம்மட்டில் அவர்கள் முயற்சி குன்றவில்லை. மற்ற நாளும் அதற்கு அடுத்த தினமும் கால் கடுக்கக் கடு க்க மனம் சலிக்காமல் ஏறிப்போய் இடம் பார்த்தார்கள். வளமான இடம் அவர்கள் கண்ணுக்கு எதிர்ப்படவில்லை. நாலாம் நாள் சிறிய கற்புழை ஒன்று புதருக்குள் மறைந்தி ருக்கக் கண்டு, அதையே தொளைத்து நினைத்த பரிசோதனை செய்கிறதென்று நிர்ணயித்தார்கள்.

அடுத்த தினம் கல்லுளி—குந்தாலி—மண்வெட்டி முதலிய கருவிகளை இம்லாக் சேகரித்தான். சேகரித்துக்கொண்டு போய், ஆண்மையினும் மிக்க ஆவலுடன் இருவரும் சுரங்கம் அறுக்கத் தொடங்கினார்கள். தொடங்கி க்ஷண

நேரத்திற்குள் சோர்ந்து களைக்க நெடுமூச்செறிந்தது. அதனால், களை தெளியப் பக்கத்தில் அடர்ந்த தழையில் உட்கார்ந்திருந்தார்கள். சற்றுவேலை மனமழிவுற்றதாக ராஜகுமாரன் முகக்குறிப்பால் விளங்கியது. அது கண்டு, தோழன், “ராஜசிங்கமே, பழகப் பழகப் பின்னும் அதிக நேரம் இளைப்புறாமல் உழைக்கமாட்டுவோம். ஆனாலும், எறும்பு ஊரக் கல்லும் தேயும் எனும் முதுமொழி கேட்டதில்லையா? அறுக்கத் தொடங்கிய சுரங்கம் இதற்குள் எவ்வளவு தூரம் எட்டியது பாருங்கள், தினம் தினம் இப்படி வேலை நடந்தேறுமானால், எத்தனை நாட் செல்லினும் முடிவுபெறுமென்பது நிச்சயமென்று அறிவீர்கள். பாரதூரமான வேலைகள் சாதிக்கப்படுவது பராக்கிரமத்தாலல்ல, விடாப்பிடியால். அதோ தெரிகின்ற அரண்மனை கல்மேற் கல் ஒவ்வொன்றாக எடுத்துவைத்து அடுக்கியும், வர வர உயர்ந்து அதன் முடிந்த உரு அடைந்த சித்திரத்தைப் பார்த்தீர்களா? தினந்தினம் மூன்று மணிநேரம் சலிப்பற நடக்கும் தைரிய புருஷன் ஏழு வருஷத்திற்குள் பூகோளத்தின் சுற்றளவு தூரம் கடந்திடுவான்” என்று தேறுதல் சொன்னான்.

பிரதிதினமும் அவர்கள் எடுத்த கருமத்தைக் கைசலிக்காமல் செய்துவருகையில் சிறிது காலத்திற்குள் ஒருநாள் மலையில் ஒரு பிளவு கண்டு அதன் வழியாய்ச் செல்லச் செல்ல, அது நெடுந்தூரம் எட்டியது. அது தமக்குச் சுப சகுனமென்று ராஸிலஸ் சிந்தையிற் பட்டது. அவன் அதை இம்லாக்கிற்குச் சொல்லவும், இம்லாக் அவனை அதட்டி, “பிரபூ, புத்திபுத்திக்கு இசைந்துவராத ஆசைக்கும் அச்சத்திற்கும் இடங்கொடுத்து மனநிலை குலையத் தகாது. சுபசகுனம் கண்டு இன்புறும் நீங்கள் அபசகுனம் கண்டால் துன்புறுவீர்களே. இந்த இயற்கை

உங்களை உடலும் உயிரும் ஒன்றைவிட்டொன்று நீங்காதிருக்குமளவும் மூடபக்திக்குப் பக்ஷணமாக்குமே. நமது வேலையைச் சுளுவில் முடிக்க உதவும் சாதனம் எது அது தான் நமக்கு உத்தம சுபசகுனம்; சாதனமின்றி ஒன்றைச் சாதிப்பவர் உலகில் இல்லை. சங்கற்பத்தில் பிரவர்த்தியுள்ளவர்களுக்குப் பெரும்பாலும் பல அதிசயங்கள் தோன்றிச் சந்துஷ்டி உண்டாகும். சிந்தையில் சிரமமாகத் தோன்றும் பாரதூரமான கருமங்கள் பல செய்கையில் மிக எளிதென விளங்கும். இதுவும் அவ்வகை அதிசயங்களில் ஒன்றுதான்" என்று உரைத்தான்.



# 14-ம் அதிகாரம்.



## மல்லிகையும் இம்லாக்கையும் அகஸ்மாத்தாய் ஒருவர் போய்க் கண்டது.

அவர்கள் மத்தியஸ்தானமளவும் மலைவழி கல்லி முடித்தபின், இனித் தமக்குச் சிறைமீட்சி கிட்டியதென்று எண்ணமிட்டு, பட்ட சிரமத்தை மறந்து மனம் தேறினார்கள். ஒருநாள் ராஜகுமாரன் காற்று உலாவும் இடத்தில் நின்று சற்றுக் கீழே ஆறும்படி இறங்கிப் போகும்பொழுது, மலைக்குகையின் வாயில் அவன் சகோதரி நிகாயா நிற்பது கண்டு திடுக்கிட்டுத் தடுமாறி நின்றான். மனக்கருத்தைச் சகோதரிக்குச் சொல்லவும் அவனுக்குத் தைரியம் இல்லை, சொல்லாது ஒளிக்கவும் மனவுறுதி இல்லை. இந்த அவஸ்தையில் ஐந்து ஆறு நிமிஷம் நின்று அப்புறம் அவன் மன

ராஜ புதல்வனுக்கு இதர சகோதரிகளைக் காட்டிலும் நிகாயாவின்மீது நட்பு மிகுதி. ஆனதுகொண்டு, அவள் விண்ணப்பத்திற்குத் தடைசொல்ல அவன் மனம் ஒப்பவில்லை. அவள்மீது தனக்குள்ள பக்தியை ஐயமறக் காட்டத் தக்க சமயம் முந்திப்போனதைப்பற்றி அவன் வெருவாய்த் துக்கித்தான். அவள் கேட்குந்தனையும் அந்தரங்கம் சொல்லாதிருந்ததை நினைந்து நினைந்து அவன் மனம் துன்புற்றது. ஆதலின், தம் இருவருடன் அவளையும் பள்ளத்தாக்கின் புறத்தில் அழைத்துக்கொண்டுபோக உடன்பட்டான். போகிறவழியில், அங்கங்கு உலாவித்திரியும் மற்றெவராவது ஆகஸ்மீகமாயேனும், அதிசயம் பார்க்கக் கருதியேனும் மலைக்குத் தம்மைத் தொடராவண்ணம் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளும்படி அவன் சகோதரியினிடத்தினின்று வாக்குறுதி பெற்றுக்கொண்டான்.

நாளடைவில் மலைவழி அகழ்ந்து முடிந்தது. மலைப் புடைப்பின் அப்புறத்து வெளியில் பூலோக ஒளியை அவர்கள் கண்டார்கள். மலைச்சிகரத்தில் ஏறி நின்று, நீல்நதி அருவி ஒடுங்கிப் பாம்பு ஓடுவதுபோல வளைந்து நெளிந்து மலையினின்று விழுவதைக் கண்டார்கள்.

வேந்தன் மைந்தன் ராஸிலஸ் எட்டுத் திசையும் சுற்றிப் பார்த்துப் பரவசனானான். தேசாந்தரம் போகுமவர்க்கு அங்கங்கு உள்ள அதிசயங்களைக் கண்டு உண்டாம் எவ்வளவு இன்பமும் அவன் சிந்தையில் முந்தியே பிரதிபலித்தது. அப்பொழுது அவன் கண் கண்டது தந்தை செங்கோல் செல்லும் பிரதேசம் ஒன்றையே. அவன் மனமோ தீவிரகதியாய்ப் பறந்து அதற்கு அப்பால் உள்ள தேசங்களையும் கண்டது. சிறை நீங்கியது இம்

லாக்கிற்குச் சந்தோஷித்தான்; ஆயினும், அவன் முன்பு கண்டு கண்டு அலுப்புற்றுக் கழித்துவிட்ட உலகப் பரப்பில் இனித் தனக்கு அத்தனை உவப்பு உண்டாமென்று மற்ற இருவரைப்போல் எதிர்நோக்கி இருக்கவில்லை.

மலைச்சிகரத்தில் நின்று எட்டுத் திக்கும் இருவிழிக்கு எட்டும் தூரம் உலகப்பரப்பின் அதிசயத்தைப் பார்க்கப் பார்க்க, ராஸிலஸுக்கு மனம் பூரித்தது; சற்றும் தெவிட்டவில்லை. அவன் மீளவும் பள்ளத்தாக்கிற்கு இறங்கிப் போகக் கொஞ்சத்தில் உடன்படவில்லை. வழி திறந்து முடிந்ததனால், இனிப் பிரயாணத்திற்கு எத்தனிக்க அப்பியந்தரம் யாதும் இல்லையென்று அவன் சகோதரிக்கு அறிக்கை செய்தான்.



## 15-ம் அதிகாரம்.



### ராஜகுமாரன்-குமாரத்தி இருவரும் பள்ளத்தாக்கை விட்டு நீங்கிப் பல புதுமைகளைக் கண்டது.

ராஜகுமாரன்-குமாரத்தி இருவர் வசம் உள்ள ஆபரணாதிகள் அதிகம். வர்த்தக வளமுள்ள நாடு நகரம் கிட்டும்பொழுது, அவ்வுயர்ந்த ரத்னகசிதமான ஆபரணங்களை விக்கிரயம் செய்வார்களானால், அவர்களுக்கு மிகுந்த ரொக்கம் தேறும். இம்லாக் சொல்லிய யுக்திப்படி, அவ்வாபரணங்களை அவர்கள் தெரியாவண்ணம் ஆடைக்குள் பத்திரமாய் வைத்துக் கட்டி, அடுத்த பர்வத்தினன்று ராத்திரி பள்ளத்தாக்கினின்று பிரயாணப்பட்டார்கள்.

ராஜகுமாரத்தியுடன் போனவள் ஓரேயொரு பாங்கி. அந்தப் பாங்கிக்கு அவர்கள் கருதிப்போகும் இடம் எவ்விடமென்று விவரம் தெரியாது.

அந்த நால்வரும் மலையைக் குடைந்து திறந்த குகை வழியாய் ஏறி, அதன் புறச்சார்பில் இறங்கினார்கள். இறங்கும்பொழுது அவர்கள் கண்ணுக்கு மட்டுத்திட்டம் ஒன்றும் தெரியவில்லை. அந்த வெட்டவெளியில் திசை தெரியாமல் கெடிகலங்கி மடிந்துபோகும் காலம் அடுத்ததென்று நினைத்து நடுநடுங்கி நடை தளர்ந்து நின்றார்கள். நிற்கையில், "முடிவு தெரியாத பிரயாணத்தில் அடியிடவும், திகந்தமற்ற இப்பெருவெளியில் முன்பின் சிந்தனையின்றிச் செல்லவும் எனக்குத் திகில் எடுக்கின்றதே. நான் எப்பொழுதும் கண்டிராத மனுஷர் முன்—பின்—இப்பக்கம்—அப்பக்கம் நான்கு திக்கும் நெருங்கிவந்தாலும் வருவார்களே" என ராஜகுமாரத்தி வியாகுலித்துச் சொன்னாள். ராஜகுமாரன் சித்தமும் இவ்வாறே சலித்தது. அதை வெளியிடுவது ஆண்மைக்குப் பங்கமென்று அவன் அடக்கமாயிருந்தான்.

அவர்கள் இவ்வண்ணம் கெடியடிபட்டதைக் கண்டு முறுவலித்து, இம்லாக் தேறுதல் சொல்லி அவர்களை நடத்திக்கொண்டுபோனான். ராஜபுதல்விக்கோ, சித்தம் திடப்படவில்லை. இப்படி இருந்தும், தோன்றுவண்ணம் சிறிது சிறிதாகக் கன தூரம் போய்விட்டார்கள். எட்டாத்தூரம் போனபின் திரும்பிவர நினையார்களே.

காலையில் கழனியில் அவர்களுக்கு எதிர்ப்பட்ட ஆட்டிடையர் சிலர் பாலும் பழமும் சேகரித்துக் கொடுத்தார்கள். வழியில் இறங்க வளமான மாளிகையும், வழக்கமாய் உண்ணும் ருசிகரமான ராஜபோஜனமும் தமது

வரவைக் காத்து எத்தனமாயிராததுபற்றிச் சக்கரவர்த்தி குமாரத்திக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. நடந்து இளைத்துப் பசியுபத்திரவம் உண்டானதனால், அவள் பாலைப் பருகிக் கனிகளைப் புசித்தாள். பள்ளத்தாக்கில் உள்ள கனிவர்க்கத்திலும் பாலிலும் இந்தப் பாலும் பழமும் அவள் நாவிற்கு மிகு மதுரமாயிருந்தன. அவர்கள் ஒருவராயினும் பாடு தாங்கிக் கஷ்டப்பட்டுப் பயின்றவர்களல்ல. அன்றியும், பள்ளத்தாக்கில் உள்ளவர்கள் தங்களைக் காணவில்லையென்று தேடித் தொடர்ந்து பிடிப்பது அசாத்தியமென அவர்கள் அறிவார்களே. ஆனதுகொண்டு அவசரப்படாமல் அன்றன்று சிறுகப் பிரயாணம் செய்தார்கள். சிலநாள் கழிந்தபின், குடித்தொகை பெருகிய ஓரிடத்தில் சேர்ந்தார்கள். அங்கே சஞ்சரிப்பவர்கள் நடை—நிலை—தொழில் அனைத்திலும் ஜாதிக்கு ஜாதி வேறுபட்டிருந்தது கண்டு, ராஜபுத்திரனும் புத்திரியும் வியந்து கூறினார்கள். அது இம்லோக்கிற்கு விநோதமாயிருந்தது. அவர்கள் உடுத்த ஆடைக்குள் ஏதும் ஒளித்து வைத்திருக்கிறதென்ற அவர்களைக் காண்போர் மனதில் சமுசயம் பிறக்க நிமித்தம் இல்லை. ஆனாலும், சக்கரவர்த்தி மைந்தனையும் அவன் சகோதரியையும் கண்டவர்களுக்கு அவர்கள் குலத்தை விளக்கும் குணம் குறிகள் சில தோன்றின. போன போன இடந்தோறும் யாவரும் தன்னை இறைவனுக்கு ஒப்பாய் வணங்கித் தன் சொற்படி நடப்பாரென்று ராவிலஸ் எண்ணமிட்டிருந்தான். அவ்வெண்ணம் சித்திக்கவில்லை, சிதறிப்போயிற்று. சன்னிதி சேர்ந்தவர்கள் சாஷ்டாங்கமாய் விழுந்து பாதசேவை செய்யாததைப்பற்றி நிகாயாவிற்குத் திகில் எழுந்தது. இந்த அபூர்வகுணம் குறிகளால் அவர்

கள் குலம் வெளிவருமேயென்று ஐயமுற்று, இம்லாக் மிகு ஜாக்கிரதையோடு அவர்கள் சாடைகளைப் பார்த்து, சாமானிய மனுஷனைக்* கண்டு வழக்கப்படுந்தனையும் முதல்முதல் கண்ணுக்கு எதிரில் கிட்டிய கிராமத்தில் இறங்கி நாலைந்து வாரம் தங்கும்படி செய்தான்.

தங்கள் உயர்ந்த குடிப்பிறப்பிற்கு உரிய பிரபாவங்களைச் சிறிது காலம் தவிர்த்துவிட்டு, ஈகையினாலும் இன்சொல்லினாலும் தமக்கு மிதமாய் உண்டாகும் சம்மானமே போதுமென்று ரமித்திருக்கும்படி நேர்ந்ததைப் பரதேசம் போன அரசன் புதல்வன்—புதல்வி இருவரும் கண்டு கேட்ட இயற்கையால் வரவர அறிந்து மனம் தேறினார்கள். இம்லாக் அவர்களைப் பலவாறு எச்சரித்துத் துறைமுகம் அடுத்த இடங்களில் நடக்கும் அமர்க்களம், அமளி, வியாபாரிகளுக்கு இயற்கையாயுள்ள கன்னகடூரமான இரைச்சல் முதலிய பீடைகளைப் பட்டு உத்தரிக்கும் பக்குவதரம் வருவித்து, கடற்கரைக்கு அழைத்துக்கொண்டு போனான்.

ராஜகுமாரனுக்கும் சகோதரிக்கும் அங்கே கண்ட காட்சிகள் அனைத்தும் நூதனமாயிருந்தன. அதனால் அவர்களுக்குச் சென்ற இடந்தோறும் இன்பம் உண்டாயிற்று. ஆனதுபற்றி, அப்புறப்பட மனமின்றி அந்தத் துறைமுகத்திலேயே சில மாசவரையும் தங்கினார்கள். வெளிகிகம் அறியுமுன் அவர்களைத் தூரப் பிரதேசத்தில் கொண்டு போய் விட்டால் பலவித உலைச்சல் உண்டாமென்று எண்ணியதனால், இம்லாக்கிற்கு அங்கவர்கள் நிலையாய்த் தங்கியது சந்துஷ்டியே.

நாட்சென்றதன்மேல்," இனி அங்கிருக்கச் சம்பவித்தால் அவர்கள் இன்னாரென்று நால்வரும் அறியவரு

மென்று ஐயுற்று, அவன் பிரயாணத்திற்குத் தினம் குறிக்க வேண்டுமென்று சொல்ல, அவர்கள் தமக்கு ஒன்றும் தெரியாதென்று அவனையே புத்திபுத்திக்கு ஏற்க உபாயம் சூழ விட்டார்கள். ஆனதனுல், அவன் ஸூவேஸூக்குப் போக இருந்த மரக்கலம் ஒன்றில் கூலி பேசி, குறித்த தினத்தில் அவர்களைப் பிரயாணப்பட உடன்படுத்தினுன். ராஜகுமாரத்தியைக் கப்பல் ஏறச் சம்மதப்படுத்த அவன் பட்ட சிரமம் மிகுதி. கப்பல் தீவிரித்து ஓடி ஸூவேஸில் அவர்களை க்ஷேமமாய்க் கொண்டுபோய்ச் சேர்த்தது. அங்கிருந்து அவர்கள் கரைவழியாய்க் கயிரோ நகரத்திற்குச் சென்ருர்கள்.



## 16-ம் அதிகாரம்.



அவர்கள் கயிரோவில் சேர்ந்து அங்குள்ளோர் எவரும் ஆனந்தமாய் வாழ்ந்திருக்கக் கண்டது.

நகரம் கிட்டக்கிட்ட, அவ்வன்னியர்க்கு மனம் கொள்ளாப் பிரமை உண்டாயிற்று. "பூகோளத்தின் எந்தெந்தக் கோணத்திலினின்றும் பிரயாணிகர்—வர்த்தகர் திரள் திரளாய் வந்து கூடும் நகரம் இது. இங்கே நானுவித குணம் குறியுடையோரையும் நானுவகைத் தொழில் செய்வோரையும் காணலாம். இங்கே வர்த்தகருக்கு மானம் உண்டு: நான் வர்த்தகம் செய்துவர, நீங்கள் கேவலம் அதிசயம் பார்க்கவந்த தேசாந்தரிகள்போல நாள் கழித்துவாருங்கள். நாம் தனிகரென்று நாள் ஏறுமுன்

எவரும் கண்டறிவார்கள். நமக்கு உண்டாம் பிரக்கியாதி நாம் அறிய நாடும் பெரியோர் அனைவரிடத்திலும் நம்மைத் தடையறக் கொண்டுபோய்விடும்; மனுஷர் நிலைமை ஒன்றல்ல—வெவ்வேறு மனுஷர்க்கு வெவ்வேறு நிலைமை உண்டு. இந்நிலை வேறுபாடு அனைத்தையும் இந்த நகரத்தில் காண்பீர்கள். கண்டு ஓய்ந்து ஆய்ந்து பார்த்து, உங்கள் இதயத்திற்கு இதமான நிலை இன்னதென்று தேறமாட்டுவீர்கள்" என ராஜபுத்திரனுக்கு இம்லாக் மொழிந்தான்.

அப்பால் ஜன இரைச்சல் கேட்டுச் செவி அதிர, மரியாதைத் தாழ்வைக் கண்டு மனம் நோக, அவர்கள் நகரத்தில் பிரவேசித்தார்கள். பின்னிட்டு அறிந்த அறிவு இயற்கை வாசனையை எளிதில் மறக்கடிக்கவில்லை. வீதிகள் தெருக்களில் செல்லும்பொழுது தங்கள் மரபிற்கு உரிய மரியாதை ஒன்றும் நடவாததையும், கண்ணுக்கு எதிர்ப்படும் நீசர்முதலாய்த் திரும்பிப்பாராமல் வணக்கமற்றுப் போவது வருவதையும் எண்ணி, அவர்கள் இது என்ன விபரீதமென்று ஆச்சரியப்பட்டார்கள். முதலில் தமக்கும் இழிஜனருக்கும் தாரதம்மியமற்றிருப்பதை நினைக்க, ராஜகுமாரத்திக்கு மனம் சகிக்கவில்லை. சிறிது காலம் அவள் இறங்கியிருந்த மண்டபத்தினின்று வெளிப்படாதிருந்து, ஆனந்த பூமியின் அரண்மனையில் உள்ளபடி வேண்டும் பணிவிடைகளைத் தன் தோழி பெக்வாவைக்கொண்டு செய்வித்தாள்.

வர்த்தகம் செய்து பயின்றிருந்த இம்லாக் மற்றை நாள் ஆபரணங்களில் சிலவற்றை விற்றுச் சிறந்த மண்டபம் ஒன்று குடிக்கூலிக்கு அமர்த்தி மிக்க தனம் விரயம்செய்து சிங்காரிப்பித்தான். அதில் அவர்களுக்குப் பெரியோர்க்கு

உரிய உபசாரம் அனேகமாய் குறைவற நடந்தன. இந்தச் சம்பிரமத்தைக் கண்டு, நகரவாசிகள் இம்லாக்கை மட்டற்ற செல்வமுள்ள வர்த்தகனென்று மதித்தார்கள். நாளடைவில் பெரியோர் பெரு பெயர் அவன் விநயத்தைக் கண்டு அவனுடன் பரிச்சயம்பண்ணினார்கள். அவனுடைய உதாராதிசய குணத்தைக் கண்டு கேட்டு அறிந்தோர் அநேகர் அந்தக் கொடைக்குத் தன்னை அடுத்தால், தங்கள் குறை தீருமென்று அவனோடு கூடிக் காத்திருந்து இதம் சொல்லிவந்தார்கள். அவனும் அவர்களுக்கு நடந்த சம்பாஷணைகளில் ராஜகுமாரன் குமாரத்தி இருவரும் கலக்கும்படி சந்தர்ப்பிக்கவில்லை. இவர்களுக்கு அத்தேசபாஷை தெரியாதே. ஆனதனால், இவர்கள் அறியாமையும் இவர்களுக்கு உண்டான பிரமையும் ஊர் உலகத்திற்கு வெளிவரவில்லை. தேசபாஷையில் பயிலப் பயில, லௌகிகம் சிறிது சிறிதாய்த் தெரியவந்தது.

அந்த ராஜப்பிரபுவிற்கு இம்லாக் அடுத்தடுத்து உபந்யசித்து, பணத்தின் பிரயோஜனத்தையும் தன்மையையும் உணர்த்தினான். வர்த்தகர் சிறுச்சிறு தங்கநாணயம் வெள்ளிநாணயம் வைத்திருந்து செய்வது என்னவென்றும், மனுஷர் இவ்வுதவாத நாணயத்தைக் குடிவாழ்க்கைக்கு இன்றியமையாத அரும் பண்டம் பாடிகளுக்கு ஈடாக வாங்கிக்கொள்வது ஏனென்றும் நிகாயாவிற்குப் பாக்கிக்கும் நெடுநாள்வரையில் தெரியவில்லை.

அவர்கள் இரண்டுவருஷம் தேசபாஷை கற்றுக்கொண்டுவர, இம்லாக் அவர்களுக்கு மனுஷர் தாரதம்மியத்தையும் நிலை வேறுபாட்டையும் தெரியக்காட்டும் பக்குவதரம் அமையும்படி தீர்க்க விசாரணை செய்துவந்தான். விசேஷ குணம் குறிகளும் கிரியையுமுள்ள அசேஷ மனுஷரோ

டும் அவன் பரிச்சயம் பண்ணிக்கொண்டு வந்தான். அவன் செல்வர் — சிக்கெனவுள்ளோர், சோம்பித்திரிவோர் — பாடுபட்டு உழைப்போர், வர்த்தகர் — வித்தகர் முதலியவர்களை அடிக்கடி கண்டு பேசி ஊடாடுவான்.

இரண்டு வருஷத்திற்குள் ராவில்லஸுக்கு வாக்குத்தாட்டியாய்ப் பேசும் திறம் அமைந்தது. அன்றியும் அவன் அன்னியருடன் பேசும்பொழுது இன்னின்ன விஷயங்களில் சூதானமாயிருக்கவேண்டுமென்று தேற விசாரித்து அறிந்துகொண்டான். அதனால், அவன் இதயத்திற்கு இதமான விர்த்தி இன்னதென்று ஆய்ந்தறியும்படி கும்பு கூடும் இடங்களுக்கு இல்லாக்குடன் போகவரவும், எங்கெங்கே சபைகூடினாலும், அங்கெல்லாம் போகவும் தலைப்பட்டான்.

நானா ஸ்திதியில் இருப்பவர்களும் நல்வாழ்வுடையவர்களென்று அவனுக்குத் தோன்றியது. அதனால், எதாயினும் ஒரு ஸ்திதியைத் தனதாக நயந்துகொள்ள நிமித்தம் இல்லையென்று சிறிது காலவரையில் அவன் கருத்திற் பட்டது. அவன் சென்ற இடந்தோறும் உல்லாசமும் பூததயையும் விளங்கின. மனுஷர் மனம் களிகூர்ந்து பாடுவதையும், விராமமற்ற நகைப்பதையும் கேட்டான். ஆனது கொண்டு, உலகம் எங்கும் எவ்வகைச் செல்வமும் பொங்கி வழிகிறதென்றும், தரித்திரர்க்கும் பாத்திரர்க்கும் வேண்டுவது அறிந்து கொடாதிருப்பவர் இல்லையென்றும், கைகள் அனைத்தும் சலிக்காமல் பொருளை அள்ளி இறைக்க இதயம் எல்லாம் தண்ணளிகூர்ந்து உருகினவென்று நம்பி, "இப்படி ஆனால், எவன் ஒருவனை இங்கே மிடியில் அடிபட விடுவார்கள்" என்று அவன் மொழிந்தான்.

அது கேட்டு, இம்லாக் அவன் மனதிற்கு இனிதாயிருந்த அந்நிலைப் போக்கை நிலைக்காமல் விட்டுவிட்டான். எதைப் பெற்றும் தெளியாத ராஸிலஸுக்கு உண்டாகும் ஆசையை முளையிலே களைய அவன் மனம் ஒப்பவில்லை. பின் ஒரு தினம் சிறிது நேரம் ராஸிலஸ் மௌனமாயிருந்து அதன்மேல் "என் இஷ்டர்கள் எவரிலும் அதிக மனத்துயர் எனக்கு வருத்தும் காரணம் எதென்று அறியேன். அவர்கள் நித்தநித்தம் இடையறாது மனம் பூரித்து முகம் மலர்ந்திருக்க, என் மனமோ பதைத்துத் துன்புறுகின்றது. நான் ஆவலாய் நாடித்தேடும் போகங்களில் எனக்குத் திருப்தி உண்டாகவில்லை. களியாட்டுச் செய்வாருடன் சஞ்சரித்தும், எனக்கு அவர்கள் கூட்டத்தில் இன்பமே இல்லை. அவர்களை விட்டு நீங்கி ஏகாந்தமாயிருக்க நாடுகிறேன். நாலு பெயரைப்போல நானும் ஆரவாரித்துக் கொண்டாடுவது அந்தச் சிற்றின்பத்தில் சிந்தையை வைத்தல்ல, என் மனத்துயரை அவர்களுக்கு ஒளிக்க நினைத்து" என்று உரைத்தான்.

இம்லாக்:—எவனும் தன் உள்ளத்தைச் சோதித்துப் பார்த்துப் பிறர் உள்ளத்தில் நிகழ்வது எதென்று அறியலாம். பிரபு, தம் உல்லாசம் வேஷமென்று தமது நெஞ்சு அறியக்கொள்ள, சகவாசிகள் மகிழ்ச்சியும் பொய் மகிழ்ச்சியென்று தாமே தோன்றுமே. சாதாரணமாய் ஒருவர்க்கு ஒருவர் பொறுமை உண்டு. நம்மனதிற்குச் சுகபோகம் ஒருபொழுதும் அமையாது. இதை நாம் தேறத்தெளிய அறிய நாட்படும். அறியுமுன், சுகம் பெறும் ஆசை எனும் தீ யாவர் இதயத்திலும் மூளும். அதை அவிய ஒட்டாமல் வளர்க்கும்பொருட்டு, அவனவன் பிறரைச் சுகபோகிகளென்று எண்ணிக்கொள்வான். விசாரமும் விசனமு

முள்ளோர்க்கு எட்டாத சாந்தமான பதவிகளில் சஞ்சரிக்க இடம்பெற்ற உன்னத ஜன்மிகளுக்கு உரிய உல்லாசகுணத்தையும் மனோதீயிரத்தையும் ராத்திரி தாங்கள் போயிருந்த சபையில் கண்டீர்களல்லவா? நல்லது, சபை கலைந்துபோய் யாவரும் அவரவர் இடத்தில் தனித்திருக்கத் தொடங்கவும், சிந்தனையால் குரூரயாதனை உண்டாமென்று அஞ்சாதவன் ஒருவனும் அந்தச் சபையில் இல்லை. துரையே, இது திண்ணமென்று நம்புங்கள்.

**ராஸிலஸ்;**—தனக்கு ஒரு நியாயம் பிறர்க்கு ஒரு நியாயம் அல்ல — என்மட்டில் இது உள்ளதுதான். அதனால், பிறர்க்கும் இதே அனுபவமாயிருக்கலாம். ஆனாலும், சாதாரணமாய் மனுஷருக்கு ஏதேது துக்கம் துயரம் உண்டெனினும், மனுஷர் நிலையில் சுகதாரதம்மியம் இருக்கிறது. கூடியவரையில், துக்கம் குறைந்த நிலை இன்னதென்று நம் புத்தி நமக்குத் தெரியக்காட்டி அதை அனுசரிக்கத் தூண்டிவிடும்.

**இம்லாக்:**—நன்று தீது (இதாகிதம்)இவற்றின் காரணம் ஒன்றல்ல, பல; உறுதியல்ல, உறுதியற்றவைகள்; பெரும்பாலும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்து தெளியத் தோன்றாதிருப்பவைகள்; பற்பல சம்பந்தங்களால் பலரூபமாய்த் திரிபவைகள்; முந்தி உணர்வதற்கு அரிய ராஜீக தெய்வீகங்களின் வசப்பட்டவைகள்: ஆகவே, இன்ன நிலை தனக்கு ஏற்கும் நிலையென்று அவிவாத நியாயபலம் கண்டு நிர்ணயிக்க விரும்புமவன் இறக்குந்தனையும் விசாரித்துச் சீர்தூக்கிக்கொண்டு வருவதன்றி, அறுதி காணமாட்டான்.

**ராஸிலஸ்.**—ஆனாலும், அறிவுடையோர் வாய்மொழியை அதிவிநய பயபக்தியுடன் செவிசாய்த்துக் கேட்டு

அனுசரிக்கிறோமே. நல்லது, அவர்கள் தமக்கு அதிக சுகம் தரும் நிலை எதென்று ஆய்ந்து அறிந்துதானே அனுசரித்திருப்பார்கள்.

**இம்லாக்:**—நயம் தெரிந்து அவரவர்க்கு உரிய நிலையில் நிற்பவர் லக்ஷத்திற்கு ஒருவர். அவனவன் தன் பூர்வ திர்ஷ்டிக்குத் தோன்றாமலும், தான் எப்பொழுதும் மனப்பூர்வமாய் உடன்படாமலும் நிகழ்ந்த ஏதுக்களால் அந்தந்த நிலையில் நிற்கிறான். ஆனதுபற்றி, தன் நிலைக்கு அயல் மனுஷர் நிலை வாசியென்று எண்ணாதவனைக் காண்பது அரிது.

**ராஸிலஸ்:**—என் புத்தியைச் சார்ந்து நான் இவ்விஷயத்தை அறுதியிடமாட்டுவேன். இந்தப் பக்குவம் பிறர்க்கு இல்லை. இது என் பிறப்புவாசியென்று எண்ணி இன்புற்றேன். உலகப்பரப்பை இதோ என் கண்ணெதிரில் காண்கிறேன். பதைப்பற்று ஆர அமரப் பார்வையிடுவேன். எங்கேனும் ஓரிடத்தில் மனோசுகத்தைக் காணலாமே.



## 17-ம் அதிகாரம்.



### ராஜகுமாரன் ஊக்கமும் உல்லாசமுமுள்ள வாலிபருடன் தோழமை கூடியது.



**ம**ற்றை நாள் காலையில் எழுந்து, ராஸிலஸ் லௌகிக பரிசோதனை செய்யத்தொடங்க, நிர்ணயித்தான். "பாலியந்தான் மனம் மகிழ்ந்து இனிதிருக்கும் காலம். விரும்

பும் எதையும் அனுபவித்துக் களிகூர்வதும், ஒன்று தீர ஒன்ருகப் போகங்களில் ஓயாமல் நாள் கழிப்பதுமே மணியமாயிருக்கும் வாலிபருடன் தோழமை கூடு வேன்" என அவன் எக்களித்துச் சொன்னுன்.

தடையின்றி அவன் எங்கெந்த வாலிபர் கூட்டத்தி லும் சேர இடம்பெற்ருன். சேர்ந்து சில தினம் செல் லவும், அலுத்து வெறுப்புற்று அவர்களை விட்டு விலகி ஞன். அவர்கள் உல்லாசத்திற்கு விஷயம் இல்லை; அவர் கள் நகைப்புக்கு முகாந்தரம் இல்லை; அவர்கள் இன்பம் ஸ்தூல இன்பம், விஷய இன்பம், விவேகம் அதில் பிர வர்த்திக்கவில்லை; அவர்கள் நடை விபரீதம், எளிய நடை; கிரமமும் சட்டதிட்டங்களும் அவர்களுக்குப் பரிகாசம்; ஆனல், அதிகாரி முகம் கடுக்க, அவர்கள் மனம் குன்றிப்போம். அறிவுடையோரைக் கண்டால், அவர்கள் நாணி விறைத்துப்போவார்கள்.

வாலிபர் நடையை அனுசரிக்க ராஜகுமாரன் வெட் கப்பட்டான். அதனுல் அவர்கள் நிலையில் தனக்கு ஒரு பொழுதும் சுகம் இல்லையென்று அறுதியிட்டான். எதாயி னும் ஒரு நிபந்தனையின்றி நடப்பதும், நெறிகுறியின்றி நேர்ந்தபடி சலிப்பதும் களிப்பதும் பகுத்தறிவுள்ள மனு ஷருக்குத் தகுதியல்லவென்று எண்ணினுன். "மனேசுக மானது அச்சமும் ஐயமுமற்றுத் திடமும் ஸ்திரமுமுள்ள தாயிருக்கவேண்டும்" என்று அவன் மொழிந்தான்.

ஆனுலும், தன்னை உபசரித்து நிஷ்கபடிகளாய் நடந்த இளைஞராகிய தோழர்மீது அவனுக்கு வர வர அபிமானம் முதிர்ந்தது ஆதலின், பின்வருமாறு எச்சரித்து வாக்குக் கண்டனம் செய்யாமல் அவர்களை விட்டு விலக அவன் மனம் சரிப்படவில்லை. "இஷ்டர்களே, நமது ஒழுக்

கத்தையும் இனி நமக்கு உண்டாம் நயபயங்களையும் பய பக்தியாய்ச் சீர்தூக்கிப்பார்த்தேன். பின்னுக்கு நமக்கு க்ஷேமமல்லாததை க்ஷேமமென்று மாறுபாட்டமாய் நினைந் திருக்கிறோமென எனக்குத் தோன்றுகிறது. மனுஷர் பிற்பருவத்திற்கு வேண்டுவதை எய்ப்பில் வைப்பாக முற்பருவத்தில் சம்பாதித்து வைக்கவேண்டும். சிந்தனை யற்றவன் ஒருபொழுதும் தெள்ளறிவுடையோனுகான். கணம்—காத்திரம் எண்ணுமல் நித்தமும் உல்லாசமாயிருப் பவன் அறுதியில் நிர்மூடனுவான். மது உண்பவர்க்கு இரண்டொரு நாழிகைநேரம் மனதில் உற்சாகம் எனும் தீ மூளுமாயினும், வாழ்நாள் குறுகித் துயரம் பெருகும். பாலியகாலம் நீடித்திராது. வார்த்திகத்தில் சங்கற்ப ஜாலம் அற்றுப்போம். நம்மைச் சூழ்ந்து நடிக்கும் ஆசா பிசாசங்கள் ஆடி ஓய்ந்துவிடும். அறிவின் மிக்கோரால் உண்டாகும் மதிப்பும் பிறர்க்கு உபகாரம் செய்யும் சாத னமுமன்றி நமக்கு வேறு சுகம் இராது. இதை நினைந்து, தீயொழுக்கத்தை நிறுத்திவிட நமக்கு வசம் இருக்கும் பொழுது நிறுத்திவிடக்கடவோம். நாமும் வார்த்திகரா கும் காலம் வருமென்றும், மதிகெட்டு நாள் கழித்த தையும்—உண்டாட்டுக் களியாட்டால் கொழுமையான தேக சுகம் குன்ற, அதிரோகம் வந்தடுத்ததையும் வார்த்தி கத்தில் சிந்திப்பதே மிகுதியில் வருத்தும் யாதனையென் றும் முந்த நினைத்துப் புத்திபூர்வமாய்ச் செம்மார்க்கத்தில் செல்வோமாக" என மொழிந்தான்.

அவன் சொற் கேட்டுச் சிறிது நேரம் அவர்கள் மௌன மாய் ஒருவரை ஒருவர் உற்றுப்பார்த்து, அப்பால் யாவ ரும் ஏகமாய் அவன் சொல்லை அவமதித்துப் பெருநகை நகைக்க, அவன் அவர்களை விட்டு அகன்றான்.

தான் உரைத்த வாக்கியங்கள் முறைமையான நீதிவாக்கியங்களென்றும், தன் அபிப்பிராயம் பரோபகாரார்த்தமென்றும் அவன் நெஞ்சார அறிந்திருந்தும், அவர்கள் அவமதி செய்ததைத்தொட்டு அவனுக்கு உண்டான கனதிகில் கொஞ்சத்தில் தீரவில்லை. நாழிகை செல்லச் செல்ல, அச்சம் தெளிந்தது. அப்புறம் அவன் தன் கருமத்தில் கண்ணுயிருந்தான்.



## 18-ம் அதிகாரம்.



### ராஜகுமாரன் பாக்கியசாலி ஆகிய ஞாதா ஒருவனைக் கண்டது.



**வீ**திமார்க்கம் போகும்பொழுது ஒரு நாள் அவன் விஸ்தாரமான கட்டடம் ஒன்றைக் கண்டான். அனைவரும் உட்செல்லும்படி திறந்திருந்த வாசல்வழியாகத் திரளான ஜனம் சேனுவீரர் தொடர் அறுது செல்லும் வண்ணம் அதில் பிரவேசித்தன. ராஸிலஸும் ஆளோடு ஆளாகச் சென்றுன். அது ஒரு பிரசங்கசாலை. அங்கே சபை கூடுவோர்க்குப் பண்டிதர்கள் பிரசங்கம் எழுதி வாசிப்பார்கள். அறிஞர் ஒருவர் உயர்ந்த பீடத்தில் நின்று, இந்திரிய நிக்ரகம் செய்வதைப்பற்றி மிக்க உற்சாகத்தோடு பிரசங்கித்தார். ராஸிலஸ் சித்திரப்பாவைபோல் அடங்கி விழித்த கண் இமைக்காமல் அவர் முகத்தைப் பார்த்த வண்ணமாயிருந்தான்; அவ்வித்தகர் காணும் எவரும் பேணிப் பணியத் தகும் மகான், சிறந்த இங்கிதர், மொழி

வதை அறமொழிபவர், அலங்கார சாதுரியர். அவர் பின்வருமாறு மொழிந்தார்: — அந்தக்கரணங்கள் உத்தமம் அதமம் என்று இருவகை. அதமகரணங்கள் உத்தமகரணங்களை அடக்கத் தலைப்படும்பொழுது, மனுஷர் இயற்கை சீர் கெட்டு இழிவுறும். மனோவிகாரத்திற்கு மாதா சங்கற்பம். இந்தச் சங்கற்பம் அதிக்கிரமித்து விவேகத்தின் அதிகாரத்தைக் கவர்ந்துகொள்ளும்பொழுது, கொடுங்கோன்மையும், சித்தசலனமும், மயலுமொழிய மற்றொரு சித்தியும் உண்டாகாது. சங்கற்பம் விவேகத்தின் அரணைச் சூதாக ராஜதுரோகிகள் வசப்படுத்தி, செங்கோல் ஓச்சும் சுதந்தரமுள்ள அதிபதியாகிய விவேகத்தோடு எதிர்த்துக் கட்சிபேசும்படி தன் மக்களைத் தூண்டிவிடும் என்று அவர் வலியுறுத்தி மொழிந்து பலவாறு உதகரித்தார். விவேகத்திற்கு நித்தமும் — நிர்விகற்பமாய் — நீடித்து ஒளிகாலும் ஆதித்தனையும், சங்கற்பத்திற்கு அந்தியகாலம் பிரகாசித்து, கதிக்கிரமமற்று, திக்குமயக்குள்ள விண்வீழ்கொள்ளியையும் உவமித்தார்.

அப்பால், அவர் புலனை வெல்லும்படி காலத்திற்குக் காலம் ஏற்பட்ட பற்பல கற்பனைகளை வெளியிட்டு, இம் மேம்பாடான வெற்றி அடைந்த வீரருக்கு உண்டாகும் சுகத்தைப் பின்வருமாறு விளக்கினார்:—புலன் வென்றவன் அதன்பின் அச்சத்திற்கு அடிமை ஆகான்; ஆசை அவனைப் பேயாட்டம் ஆட்டி அலைக்காது; அழுக்காற்றால் அவன் துர்ப்பலன் ஆகான்; கோபாக்கினி அவன் இதயத்தில் பற்றாது; நெஞ்சு இளைத்து அவன் ஆண்மை குன்றாது; துக்கம் குடிகொண்டு அவன் மனத்திடன் அழியாது. கடும்புயல் அடிக்கிறதென்றும், காற்று அடித்து ஓய்ந்ததென்றும் காலபேதம் பாராமல் எத்தேசகால

மும் ஏககதியாய் ஆகாயமண்டலத்தில் செல்லும் ஆதித்த னைப்போல, அவன் சந்தடியுள்ள ஜனத்திரளிடையில் சஞ்சரிக்கும்பொழுதும், தன்னந்தனியே இருக்கும்பொ ழுதும் சாந்தசித்தனாக நடப்பான்.

இன்பம் வரினும் துன்பம் வரினும் சித்தம் சலிக்கா திருந்து, இழிந்தோர் நன்று தீது என நாமம் கற்பித்துச் சொல்லும் உற்பாதங்களைத் துரும்பெனவும் மதிக்காத சுத்தவீரர் வெகு பெயரைத் திர்ஷ்டாந்தமாய் எடுத்துக் கூறினார். துர்மதிகளைத் தவிர்த்துவிட்டு, க்ஷாத்திரமும் துரதிர்ஷ்டமும் இறைக்கும் சரமாரி உடம்பில் ஏறுவண் ணம் பொறை எனும் வச்சிரகவசத்தைத் தரித்துக்கொள் ளும்படி அவர் சபையாருக்குப் புத்தி புகட்டினார். இதே சுகபதவியென்றும், இந்தச் சுகம் பெறும் திறம் எவரெ வர்க்கும் அமையுமென்றும் அவர் சொல்லி முடித்தார்.

அவரை மானிட தேகியாகவல்ல, மேலான தெய்வப் பிறப்பாகப் பாவித்து, ராஸிலஸ் அவர் வாய்மொழியை வணக்கமாய்ச் செவிகூர்ந்து கேட்டான். பின்பு வாச லில் காத்துநின்று, சத்தியவிஞ்ஞான நிதிபதியாகிய அவ ரை இனி ஒருபொழுது தனிமையாய்க் கண்டு பேச இடம் தரும்படி தாழ்ந்து பணிந்து பிரார்த்தித்தான். அந்தப் பிரசங்கி க்ஷணப்பொழுது சித்தசமுசயம் கொண்டுநிற்க, ராஸிலஸ் ஒரு பை பொன் அவருக்குச் சமர்ப்பித்தான். ஆனந்தங்கொண்டு அதிசய சித்தராகி அவர் அதை ஏற்றுக் கொண்டார்.

ராஸிலஸ் இம்லாக்கினிடத்திற்குத் திரும்பிப் போய்ச் சேர்ந்தபொழுது, "கற்கவேண்டும் எதையும் கற்பிக்க வல்ல பண்டிதர் ஒருவரைக் கண்டுவந்தேன். பகுத்தறி வுடையோர்க்கு உரிய மனோபலம் எனும் அசையா நிலை

பெற்ற சிங்காதனத்தில் வீற்றிருக்கும் அவர் தம் அடிக்கீழ் சுற்றிவரும் காலசக்கரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறார். அவர் பேசத்தொடங்க, எல்லாரும் அவதானமாய் அவர் வாயைப் பார்த்தவண்ணமாயிருக்கிறார்கள். அவர் எடுத்துக்காட்டும் நியாயத்தொடர் முடிய, அது வாஸ்தவமென்று யாவர் மனமும் தேறுகின்றது. இனி எனக்கு இவர்தாம் குரு: இவர் மதசித்தாந்தங்களைக் கற்றறிந்து இவர் ஒழுக்கத்தைத் தழுவி நடப்பேன்" என்று உரைத்தான்.

இதுகேட்டு, இம்லாக் "சொல்லக் கேளும் துரைசிங்கமே, நீதிநெறி போதிக்கும் ஆசிரியர்களை ஆய்ந்து ஓய்ந்து பாராமல் அடிக்குள்ளே நம்பி வெகுமானித்தல் ஆகாது. அவர்கள் பேசுவது விண்ணுலகத்தாரைப்போல, நடப்பதோ மண்ணுலகத்தாரைப்போல" என்று எச்சரித்தான்.

இத்தனை சாதுரியமாக நியாயபலம் எடுத்துக் காட்ட வல்லவன் ஒருவன் மனம் அந்த நியாயத்தின் காத்திரத்தை மதிக்காதிருப்பது எப்படியென்று ஐயமுற்று, ராஸிலஸ் பின் ஒரு தினம் மேற்படி தேசிகனைக் காணப் போனான். போயும், உட்செல்ல இடம்பெறவில்லை. பின்பு, ஒரு பொன் கொடுத்து, அந்தக் கிரகத்தில் எளிதில் செல்ல இடம்பெற்றான். பெறவே பணத்திற்கு உள்ள பராக்கிரமம் இவ்வளவென்று அவனுக்குத் தெரியவந்தது. வீட்டின் அகத்தில் இருள் அடைந்த ஓரறைக்குள் கண் பஞ்சாடி முகம் வெளுவெளுத்திருந்த மேற்படி தத்துவ ஞானி ராஜகுமாரனைப் பார்த்து, "கேளும், மனுஷர் உறவு இருந்தும் உதவாமற்போகும் சமயம் பார்த்து வந்தீர்; நான் படும் பாட்டுக்கு மீட்சி இல்லை; கைகடந்து போன

பொருள் திரும்பி வராது. விருத்ததசையில் வேண்டும் ஆதரவு அனைத்தும் விரும்பிச் செய்வாளென்று நான் இத்தனை காலம் எண்ணி எண்ணி உள்ளம் தேறியிருக்க, கசியும் மனமுள்ள என் செல்வப்புதல்வி, என் ஏகபுத்திரி ஜுரத்தில் விழுந்து அழுந்தி இராத்திரி இறந்துபோனாள். அவள் இறக்க, என் நோக்கம்—என் அபிப்பிராயம்—எனது ஆசை அனைத்தும் ஒழிந்துபோயின. மனுஷர் மக்கள் உறவு அழிந்து யாருமற்ற அகதி ஆனேன்" என மொழிந்தார்.

**ராஸிலஸ்:**—சாவைக்குறித்து அறிவுடையோர் தட்டுக்கெட்டுத் தடுமாறுவது இயற்கையல்லவே. ஆறிலும் சா நூறிலும் சா. அது எப்பொழுதும் நம்மைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. இன்று நமக்கு இறப்பு வரினும் வருமென அன்றன்று மனுஷர் எல்லோரும் மறவாது நினைந்துகொள்வதல்லவோ கடன்.

**தத்துவஞானி:** — அப்பா, உற்றாரைப் பிரிவோர்க்கு உறும் துயர் அறியாதவன்போலப் பேசுகிறாயே.

**ராஸிலஸ்:**—பின்னை நீங்கள் மிக வலியுறுத்தி உணர்த்திய கற்பனைகளை மறந்திட்டீர்களா. உபத்திரவம் எனும் மாற்றான் பிடித்துக்கொள்ளாவண்ணம் மனக்கோட்டையை அரண்செய்ய விவேக மன்னனுக்குத் திராணி இல்லையா—புறப்பொருள் எல்லாம் மாறுவது இயற்கை. சத்தியமும் விவேகமுமோ அனவரதகாலமும் அணுவளவெனினும் மாறாதிருக்கும். இதை அறியக்கடவீர்கள்.

**துக்:**—சத்தியத்தாலும் விவேகத்தாலும் எனக்கு என்ன ஆதரவு உண்டாம்? இறந்துபோன மகள் இனித் திரும்பிவராள் என்று எனக்கு அவைகள் சொல்லும். இதன்றி, இப்பொழுது அவைகளால் எனக்கு என்ன சுகம்?

கடிந்துரைத்து, துயரப்படும் அவனைப் பின்னும் துய ரப்படுத்தத் தன்னிடமுள்ள ராஜகுமாரன் மனம் சரிப் படவில்லை. சாதுரிய வாக்கு வியர்த்தமான வெற்றொலி யென்றும், நாகரிக ந்யாயத்தொடரும், விற்பன்ன வாக் கியங்களும் சித்திபற்றவைகளென்றும் அறிந்து மனம் தேறி அவன் வீட்டுக்குத் திரும்பினான்.



## 19-ம் அதிகாரம்.



### இடையர் குடிவாழ்க்கையைத் தூரதிர்ஷ்டி யாய்க் கண்டது.

விசாரிக்கத் தொடங்கின விஷயத்தில் அவனுக்கு உள்ள மிகு வாஞ்சை இன்னும் தணியவில்லை. நீல்நதி அருவி மலையிறக்கத்தில் கிட்டநின்று விழும் இடத் திற்கு அயலில் துறவி ஒருவன் வசிக்கிறதாகவும், அவன் பரிசுத்தனென்று நாடெங்கும் பிரசித்தப்பட்டி ருப்பதாகவும் சத்தம் பிறந்தது. அச்சத்தம் கேட்டு ராஸி லஸ் அந்தத் துறவியின் ஆச்சிரமம் தேடிப்போய் அவனைக் காணவும், கண்டு, இல்வாழ்வார்க்கு அமையாத சுகம் துறவறம் பூண்டவர்க்கு அமையுமா, பருவம் முதிர்ந்து ஒழுக்கத்தில் சிறந்து எவரும் தலைவணங்கப் பெற்ற ஒருவன் வரும் துயர் தவிர்க்கவும், வந்த துயர் உத்தரிக் கவும் கைகண்ட உபாயம் ஏதும் போதிக்கமாட்டுவானோ என்று கேட்டறியவும் சங்கற்பித்தான்.

இம்லாக்கும் ராஜகுமாரத்தியும் அவனுடன் போகச் சம்மதித்தார்கள். வேண்டும் எத்தனம் அனைத்தும் செய்த

பின் அவர்கள் பிரயாணப்பட்டார்கள். அவர்கள் சென்றது வயல்வெளி வழி. அவ்வெளியில் இடையர் ஆடு மேய்த்துக்கொண்டிருந்தார்கள். பசும்புன்னிலத்தில் ஆட்டுக்குட்டிகள் துள்ளி விளையாடின. "இடையர் குலவிர்த்தியே கபடம்—கலகம் அற்ற விர்த்தியெனப் பாடல்களில் வியந்து கூறப்படும். நண்பகல் வெப்பம் தணிகிறவரையில் இவ்விடையர் கூடார நிழலொதுக்கில் தங்குவோம். இடையர்க்கு உரிய எளிய வாழ்வே சுகவாழ்வென்று கண்டறிந்து நாம் நாடிய பொருள் கைகூடிற்றென்று திர்ப்தி அடைந்தாலும் அடைவோமே" என இம்லாக் கவிராயன் யுத்திசொன்னான்.

அந்த யுத்தி அரசன் புதல்வன்-புதல்வி இருவருக்கும் பிரீதியாயிருந்தது. ஆகவே, அவர்கள் இடைச்சேரியில் இறங்கினார்கள். அங்கிருக்கும்பொழுது அதிசயம் பார்க்க நெருங்கிய இடையருக்குச் சிறுக வெகுமதி கொடுத்து நயம் காட்டி வார்த்தையாடினார்கள். பேசிப்பேசித் தொந்தம் உண்டாக்கியபின் "உங்கள் குடியியற்கையின் சுகதுக்கங்களைப்பற்றி உங்கள் தாற்பரியம் என்ன, சொல்லுங்கள்" என்று கேட்டார்கள். 'இடையன் புத்தி பிடரியிலே' எனப் பழமொழியும் இருக்கின்றது. அவர்கள முரட்டிடையர், ஒன்றும் அறியாதவர்கள். தங்கள் தொழிலில் உண்டாம் சுகதுக்க தாரதம்மியம் கண்டறிய நிர்வாகிகளல்ல. கேட்ட கேள்விக்கு ஏதோ வாயில் வந்தபடி உளறினார்கள். அவர்கள் வாய்ப் பிறப்பிற்கு வரையறை இல்லை. அதனால் அவர்களைக் கேட்டு எதும் அறிவது அசாத்தியம் எனக் கண்டது. ஆனாலும் பிரத்தியக்ஷமாய்த் தோன்றியது இது:—பழத்தினுள் புழுப்போல நிரம்மியம் என்பது அவர்கள் இதயத்தை அரித்துப்

பழுதுபடுத்திற்று. தாங்கள் மெய்வருந்தி உழைக்க, அவ்வுழைப்பால் விளையும் ஊதியத்தை நிறை செல்வமுள்ள சீமான்கள் அனுபவித்துச் சுகித்திருக்கிறார்களென்று நினைத்து, அவர்களுக்குத் தம்மில் உயர்ந்தோர்மீது நிர்நிமித்தமாய் க்ஷாத்திரம் உண்டாயிற்று.

இடையர் பிரகிர்தியைக் கண்டு கடுஞ்சினம் மூள, ராஜகுமாரத்தி பின் வருமாறு மொழிந்தாள்:—என்னுடன் தோழமைகூட இவ்வழுக்காறுள்ள மிலேச்சருக்கு எந்நாளும் இடங்கொடேன். நாட்டகத்தார் சுகம் இத்தன்மையதென்று இன்னம் அங்கங்கே போய்க் கண்டறியும் ஆசை எனக்கு உண்டாக இனி நாட்படும். ஆனாலும், பூர்வகாலத்தில் ஆடு மேய்த்து நாடுதோறும் சஞ்சரித்த இடையர் சுகம் பெற்றிருந்தனரென்று சரித்திரம் சொல்வதெல்லாம் கட்டுகதையென்று நான் நினைக்கவில்லை. வயல்—வனம் இவற்றில் உள்ள அதிசயங்களைக் கண்டு உண்டாம் சாந்தமான இன்பத்திலும் உசிதம் எனத்தகும் இன்பம் இப்பூவுலகில் உண்டோ அறியேன். சுகிர்தமும் நாகரிகமுமுள்ள சிலருடன் உலாவி, என் கையால் நாட்டிய செடிகொடி பூண்டுகளில் பூப்பறிக்கவும், நான் வளர்த்த ஆடு ஈன்ற குட்டியுடன் கொண்டாடவும், என் பணிப்பெண் நிழல் ஒதுக்கில் இருந்து எதாயினும் வாசிக்க, மடுக்கரையிலும் இளங்காற்று உலாவும் இடங்களிலும் நின்று விசாரமற்றுக் கேட்கவும் எனக்கு ஒரு காலம் வருமென்று விரும்பி எதிர்பார்த்திருக்கிறேன்.



# 20-ம் அதிகாரம்.

## செல்வத்தால் உண்டாம் அபாயம்.

அவர்கள் மற்றைநாள் அங்கிருந்து கிளம்பி வழி நடந்து உருமவெயிலில் களைத்து, நிழலொதுக்குப் பார்த்து, சிறிது தூரத்தில் அடர்ந்த வனம் ஒன்றைக் கண்டு, அவ்வனத்தில் புகுந்தார்கள். வனத்தின் அகத்தில் செல்லச்செல்ல, மனுஷர் சஞ்சரிக்கும் இடம் கிட்டியதென்று எண்ணத்தக்க சாக்ஷிகள் அநேகம் இருந்தன. விருக்ஷ அடர்த்தியால் இருள்மயமாயிருந்த இடங்களில் செடி பூண்டுகள் வெட்டிச் செவ்விய பாதை திறந்திருந்தது. பாதையின் இருமருங்கும் உள்ள விருக்ஷக்கிளைகள் கவித்து விதானம்போல் இணைக்கப்பட்டிருந்தன. விருக்ஷம் இல்லாத வெற்றிடங்களில் கழுப்பற்றைகளால் ஆசனங்கள் அமைத்திருந்தன. வளைந்து நெளிந்து சென்ற வழியின் ஒரு மருங்கில் உபநதி ஒன்று ஓடியது. அந்நதிக்கரையில் சில இடங்களில் சிறிய நீர்நிலைகள் உண்டாக்கப்பட்டிருந்தன. நதியின் இடையில் சில இடங்களில் காட்டுக் கற்களைக் குவித்து அணைகட்டியிருந்தார்கள். ஆற்றலை வேகமாய் மோதி இரைச்சல் உண்டாம்படி இந்த உபாயம் செய்திருந்ததுபோலும். இத்தனை வசதி அவ்வனத்தில் உண்டென்று அவர்கள் எண்ணிப் போனவர்களல்ல. கண்டவைகள் எல்லாம் அவர்களுக்கு ஆனந்தமாயிருந்தன. அவர்கள் அவசரப்படாமல் ஆறி அமர்ந்து அவ்வனத்தினூடே செல்லச்செல்ல, ஜனசஞ்சாரமற்ற அந்தக் காட்டில் நிர்த்தோஷமான இவ்வகைச் சுகசெல்வம்

உண்டாக்கிக் கொள்ளத்தக்க அவகாசமும் உபாயமு முள்ள சீமான் யாவனென்றும், அவன் விர்த்தி யாதென் றும் அவரவர் உத்தேசித்ததை ஒருவர்க்கு ஒருவர் சொல் லிக்கொண்டார்கள்.

சற்று எட்டப் போனதன்மேல் குழலொலி—யாழொலி முதலிய கீதவாத்திய சப்தம் கேட்டது. சோலையில் வாலிபரும் கன்னிகைகளும் கூடி நடனஞ்செய்வது கண்டார்கள். பின்னும் சற்று அப்பால் செல்ல, ஆரணிய அரண் சூழ்ந்த குன்று ஒன்றில் ஒரு சிங்கார மண்டபம் அவர்கள் கண்ணுக்கு எதிர்ப்பட்டது. அதிதிகளை வருந்தி அழைத்துத் தராதரம் அறிந்து உபசரிப்பது அத்தேசவாசி கள் இயற்கை. அந்த மாளிகையில் சோவம், உதாரமும் நிறை செல்வமுமுள்ள வள்ளலென்று சொல்லும்படி அதற்கு உடையவர் அவர்களை அதிப்ரியமாய் விசாரித்து உபசரித்தார்.

ஆளைக் கண்டமாத்திரத்தில் குலநயப்—குணநயம் முத லிய அந்தரங்கம் அறியத்தக்க நிபுணராதலால், அவர் தம் அகத்தில் சேர்ந்த அதிதிகள் அசாதாரணரென்று எளி தில் கிரகித்து, அரசற்கு உரிய வைபவங்கள் அனைத்துட னும் அவர்களுக்குப் பந்திபோஜனம் செய்வித்தார். இம் லாக்கின் வாக்குசாதுரியம் அவர் கருத்தைக் கவர்ந்தது. ராஜகுமாரத்தியின் உசித வினயத்தைக் கண்டு அவருக்கு அந்தக் கன்னிகைமீது விசேஷ மதிப்பு உண்டாயிற்று. பந்திபோஜனம் செய்து வார்த்தையாடியபின் அவர்கள் விடைபெற்றுப்போக எத்தனிக்க, அந்தச் சீமான் அவர் களைப் பின்னும் ஒரு தினம் தங்கிப்போம்படி வேண்டிக் கொண்டார். மறு தினமும் அவ்வாறே அவர்களை வருந்தி நிறுத்தினார். அவர் கேள்விக்கு அவர்கள் எளிதில் உடன்

பட்டார்கள். பழகப் பழகக் கூச்சம் தெளிந்து நட்புப் பொருந்தி அளவளாவினார்கள்.

அம்மாளிகைவாசிகள் அனைவர் முகத்திலும் ஆனந்தக் களை இருந்ததையும், அவ்விடத்தைச் சூழ்ந்த சராசரவஸ்து சமஸ்தமும் மனதிற்கு இன்பம் தரும் இயற்கையுடையனவாயிருந்ததையும் கண்டு, ராஜகுமாரன் தான் தேடிப்போன சுகம் அங்கே அகப்படுமானால், தன் பாக்கியவசந்தானென்று எண்ணினான். பின்பு சமயம் கண்டு ராஜகுமாரன் அந்த நிதிபதியை வாழ்த்தியபொழுது, அவர் "எனது ஸ்திதி சுகஸ்திதியெனத் தோன்றுகிறது மெய் தான். ஆனால், தோற்றம் உள்ளதல்ல, கண்மாயம். என் செல்வத்தால் ஜீவனுக்கு அபாயம் நேரிடுகின்றது. என் பொருட் செல்வத்தையும் புகழ்ச் செல்வத்தையும் பற்றி எகிப்திய பாத்ஷா எனக்குப் பிராணசத்துரு ஆனார். நான் அவருக்கு வெறுப்பு வர எதும் அக்கிரமம் செய்தவனல்ல. இதுவரையில் அவரால் எதும் தீங்கு உண்டாகாவண்ணம் எனக்குத் துணைநின்றவர்கள் இத்தேசத்து அரசர்கள். ஆனாலும், அரசர் முதலிய பெரியோர் தயை அநிச்சயம். அரசரும் பாம்பும் சரி. எனக்கு இன்று துணைநின்று உதவிபுரியும் அவர்கள் நாளை எதிரியுடன் கூடி என் சொத்தைச் சூறையிடுவித்துத் தாமும் ஒரு பங்கு வாங்கி அனுபவித்தாலும் அனுபவிப்பார்கள். அதனால் எனது ரொக்கம் முழுதையும் தூரதேசத்திற்கு அனுப்பிவிட்டேன். சத்துரு பயம் உண்டாகும் அந்த க்ஷணமே அத்தேசத்திற்கு ஓடித் தப்பிவிடுவேன். அப்புறம் சத்துருக்கள் இச்சிங்காரமாளிகையைக் கைக்கொண்டு உண்டாட்டுக் களியாட்டுச் செய்து, நான் நாட்டுவித்த உத்தியானங்களின் பிரயோஜனத்தை அனுபவிப்பார்கள்" எனப் பெருமூச்சு எறிந்து சொன்னார்.

அது கேட்டு, அந்தச் செல்வருக்கு அபாயம் நேரிட்டிருப்பதையும் அவர் தேசாந்தரம் போகவரினும் வருமென்பதையும் பற்றி அவர்கள் எல்லாரும் துக்கித்தார்கள். அவரைத்தொட்டுத் துக்கமும் எதிரியின்பெயரில் கடுஞ்சினமும் உள்ளத்தில் உண்டாகி வருத்த, ராஜகுமாரத்தி சகிக்க ஆற்றாமல் பள்ளியறைக்கு எழுந்துபோனாள். பின்னும் சில தினம் அங்கிருந்து அவர்கள் சன்னியாசியைத் தேடிப் போகப் புறப்பட்டார்கள்.



## 21-ம் அதிகாரம்.



ஏகாந்தவாழ்வின் சுகம்—துறவி சரித்திரம்.



புறப்பட்டுப் பயிரிடு குடிகளை வழி கேட்டுப் போய், மூன்றாம் நாள் துறவி ஆச்சிரமத்தில் சேர்ந்தார்கள். அது ஒரு மலைச்சாரிபில் உள்ள கற்புழை. அது ஈச்சமர நிழல் ஒதுக்கில் இருந்தது. மலையருவி விழும் இடத்திற்கும் அதற்கும் சற்றுத் தூரம். அருவிநீர் ஓயாமல் சலசலென்று ஓடும் ஒலி வர வர இளைத்து அவ்விடத்தில் மிருதுவான சிற்றொலியாய்க் கேட்கும். அதை 'மரக்கிளைகளின் இடையே உலாவும் இளங்காற்றொலியுடன் கேட்குமவர் மனதிற்கு யோகநிஷ்டைக்கு அனுகூலமான சாந்தி உண்டாகும். ஆதியில் இயற்கையாய் உற்பத்தியான பணிக்கற்ற அந்தப் புழையில் பின்னிட்டு மனுஷர் கைத்தொழிலால் வெவ்வேறு பிரயோஜனங்களுக்கு உதவும் சிறந்த அறைகள் பல வகுக்கப்பட்டிருந்

தன. அதில் பிரயாணிகள் அடிக்கடி இராத்தங்கிப் போவதும், காற்றுமழைக்கு ஒதுங்கியிருந்து போவதும் உண்டு.

சாயரட்சைக்கு உஷ்ணம் அடங்கியபின் சன்னியாசி வாசலில் ஒரு பீடப்பலகையில் குளிர்காற்று ஆட உட்காந்திருந்தான். ஒரு பக்கத்தில் புஸ்தகம் ஒன்றும் இறகும் காகிதமும், ஒரு பக்கத்தில் பலவகை யாந்திரிகக் கருவிகளும் இருந்தன. அவர்கள் கிட்டியபொழுது அவன் தன் பராக்கில் இருந்தான். இவர் சுகம் கண்டவரென்றும், சுகம் பெறுமுறை உணர்த்த வல்லவரென்றும் முகக்குறியால் தோன்றவில்லை என்று ராஜகுமாரத்தி மொழிந்தாள்.

அவர்கள் அவனுக்கு மிகு வணக்கமாய் வந்தனம் சொல்ல, அவன் அரசர் சபையில் வழங்கும் வக்கணை வழிபாடு அறிந்தவன்போலப் பிரதிமரியாதை செய்து, "பிள்ளைகாள், வழி தப்பி வந்தீர்களானால், சுகமே இங்கு இராத்தங்கிப் போகலாம். எலிவளை ஆனாலும் தனிவளை வேண்டுமென்று இந்தக் கல்வளையில் இருக்கும் என்னால் என்ன உபசாரம் செய்வதற்கு இயலும்—இங்கெனக்குள்ள சுகம் உங்களுக்கும் நடக்கும். இருக்க இடம், படுக்கப் பாய், பசிக்கு ஏதாயினும் ஆகாரம்—இம்மாத்திரந் தானே நமக்கு வேண்டுவது — விரக்தர் ஆச்சிரமத்தில் வேந்தர்க்கு உரிய சுகபோகங்கள் கிட்டுமோ" என்றான்.

அவர்கள் நன்றி சொல்லி உட்சென்றார்கள். அவ்விடத்தின் பணிக்கையும் ஒழுங்கையும் கண்டு அவர்களுக்குச் சந்துஷ்டி உண்டாயிற்று. துறவி அவ்வதிதிகளுக்கு வட்டித்த உண்டிவகை மது மாம்சம்; தான் புசித்தது கனி, பருகியது தெண்ணீர். அவன் பேச்சில் பகிடி பரிகாசம் இல்லை, அது குளிர்ந்த வாக்கு, பக்தி பூர்வமானது, மதாபிமானம் அற்றது. இது கண்டு அவ்விருந்தர்க்கு

அவன் பெயரில் மதிப்பு உண்டாக நாழிகை செல்லவில்லை. ராஜகுமாரத்தி அவசரத்தில் அவனைக்குறித்துச் சொன்ன அபவாதத்தை நினைந்து பச்சாத்தாபப்பட்டாள்.

அப்பால் நடந்த சம்பாஷணை இது:—

**இம்லாக்:**—தங்கள் கீர்த்தி வெகுதூரம் எட்டியிருப்பதைப்பற்றி எனக்கு இப்பொழுது ஆச்சரியம் இல்லை. தாங்கள் விவேகபூரணரென்று கயிரோநகரில் வதந்தி கேட்டு, இந்தக் குமாரனுக்கும் கன்னிக்கும் ஏற்கும் நிலை எதென்று அறிந்து அனுசரிக்க உபாயம் சொல்லும்படி தங்களை வேண்டிக்கொள்ளக் கருதி இங்கு வந்தோம்.

**துறவி:**—சீராய் நடப்பவனுக்கு எந்த நிலையும் சிறந்த நிலைதான். பொல்லாங்கென்ப தெல்லாம் தவிர். இதனினும் சிறந்த நீதி எதும் அறியேன்.

**ராஸிலஸ்:**—தம்மைப்போலத் துறவறம் பூண்டவன் பொல்லாங்கென்ப தெல்லாம் தவிர்ப்பான். இதற்கு ஐயமே இல்லை.

**துறவி:**—நான் சமுசாரத் துறவி ஆகிப் பதினைந்து வருஷம் ஆகிறது மெய்யே. என்னைப் பார்த்து எவரும் துறவறம் பூணுவது எனக்குச் சம்மதமல்ல. பாலிய காலத்தில் நான் ராணுவசேவை செய்து வரவரத் தரம் உயர்ந்து தளபதி ஆனேன். விஸ்தாரமான தேசங்களுக்குப் படையெடுத்துப் போனேன். பல சண்டைகளைக் கண்டேன். பல கோட்டை முற்றுகையைப் பார்த்தேன். கடைசியில், பருவத்தில் குறைந்த ராணுவ உத்தியோகஸ்தர் ஒருவர்க்கு விசேஷ ப்ரதிஷ்டை நடந்ததுபற்றி வெறுப்புற்றதனாலும், எனது ஆண்மை குன்றியதனாலும், சமாதான

மாய் இளைப்பாறி இருந்து நாள்கழித்து இறக்க நிர்ணயித்தேன். இல்வாழ்க்கையில் விக்கினம் செய்யும் உபாயமும், பிணக்கும், இன்னலும் மிகுதியென்று கண்டு துறவி ஆனேன். முன் ஒரு முறை மாற்றான் என்னைத் தொடர, அவன் கண்ணுக்குத் தப்பிப் பிழைக்கும்படி நான் அடைந்த அடைக்கலாலயம் இந்தக் கல்வளை. அதனால், தள்ளாத காலத்திற்கும் தகும் புகல் இதென்று இங்கு அடைந்தேன். சிற்பனை அழைத்து, அறைகள் வகுப்பித்து, பின்னுக்கு வேண்டுவன யாவையும் சேகரித்து வைத்தேன்.

இங்கு அடைக்கலம் புகுந்து சிறிது காலவளையில், அமர்க்களத்தின் இரைச்சலும் பதைப்புமற்று ஆசோதையாய் அடங்கியிருந்ததுபற்றி, நடுக்கடலில் புயல் அடித்து அலை மோதி அவதிப்பட்ட மரக்கலம் துறை சேரும்பொழுது, அதில் உள்ள கடலோடிக்கு உண்டாகும் ஆனந்தம் எனக்கு உண்டாயிற்று. பழகப் பழகப் பாலும் புளிக்கும். நூதனமாய் உண்டான ஆனந்தம் நாளடைவில் ஒழிந்தது. ஒழியவும், பள்ளத்தாக்கில் முளைத்து வளரும் பயிர் பூண்டு செடி கொடி வர்க்கத்தையும், பர்வதத்தில் கண்டு எடுத்துக் கொண்டுவந்து வைக்கும் தாது வர்க்கத்தையும் பரீக்ஷித்துப் பொழுதுபோக்கினேன். வர வா ஆரசம் அற்று எனக்கு அலுப்புத் தட்டுகின்றது. சிறிது காலவளையில் என் மனம் நிலையற்று முனை குலைந்திருக்கின்றது. சந்தேகங்கள் பெருகி ஆயிரக் கணக்காகி ஒன்றும் தெளியாமல் என் மனம் கலங்குகின்றது. விபர்த்தமான மனோபாவ மாயை நாழிகைதோறும் மேற்கொள்ளுகின்றது. இளைப்பாற்றியாவது காலக்ஷேபமாவது எனக்கு ஒன்றும் இல்லையே. நல்வினையை விட்டாலன்றித் தீவினைக்கு விலகுவது அசாத்தியமென்று என்

நெஞ்சில் சில வேளை சிந்தனை பிறப்பதை நினைந்து நாணுகிறேன். அன்றியும், நான் துறவியானதற்கு நிமித்தம் பக்தியல்ல, குரோதமென்று சந்தேகம் உண்டாகத் தொடங்குகின்றது. பைத்தியமான காட்சிகளைக் கண்டு என் மனம் களியாடுகின்றது. நான் போக்கடித்தது மிகுதி, வரப்பெற்றது சொற்பமென்று எண்ணித் துயரப்படுகிறேன். தீயோர் செல்லும் வழியைக் கண்டு அதில் செல்லும் நிமித்தப் ஏகாந்தி ஆகிய எனக்கு இல்லை; நல்லோர் சொற்றுணை—சகவாசம் உண்டா—அதுவும் இல்லையே. சமுசார மார்க்கத்தில் நிற்பவர்களுக்கு உண்டாம் சுகதுக்கம் இரண்டையும் நெடுகோள்வளையில் தரம்போட்டுப் பார்த்து, துக்கத்திலும் சுகம் அதிகமென்று கண்டு, நாளை ஊருக்குப் பிரயாணப்பட இருக்கிறேன். ஏகாந்தமாய் நாள்கழிப்பவனுக்குத் துன்பம் பெருகுவது நிசம், பக்தி முதிர்வது சந்தேகம்.

அவர் நிர்ணயத்தைக் கேட்டு அவர்களுக்குப் பிரமை உண்டாயிற்று. சிறிது ஓய்ந்திருந்து அப்புறம் தம்முடன் வந்தால் கயிரோ நகரத்தில் கொண்டுபோய் விடுவதாகச் சொன்னார்கள். மலையில் குழி கல்லிப் புதைத்து வைத்திருந்த திரண்ட திரவியத்தை அவர் கிளப்பி எடுத்துக்கொண்டு, அவர்களுடன் பிரயாணப்பட்டார். நகரம் கிட்டவும், அவர் அதைக் கண்டு ஆனந்த பரவசமடைந்தார்.



# 22-ம் அதிகாரம்.

இயற்கை நெறி விலகாது ஒழுகுவோர்க்கு
உண்டாம் சுகம்.

அவரவர் மனதின் குணக்கை எடுக்கவும், அபிப்பிரா யங்களை இணையிட்டுத் தரம் பார்க்கவும் அந்நகரத்தில் குறித்த காலங்களில் கூடும் கற்றோர் சபைக்கு ராவிலஸ் அடிக்கடி போவான். அவர்களிடத்தில் அபசாரம் சிறிது உண்டு. அவர்கள் சம்பாஷணையோ அறிவு புகட்டுவது, அவர்கள் சம்வாதம் அதிசூக்ஷ்மமானது; சிலவேளை பிர சண்ட விவாதம் உண்டாய் வாதிக்கத் தொடங்கிய விஷ யம் அவர்களுக்கு மறதியாய்ப் போவதும் உண்டு. சில தோஷங்கள் அவர்கள் எல்லோருக்கும் பொதுவாயிருந் தன: பிறருடைய விவேகத்தையும் கல்வியறிவையும் சிறக்கணித்துப் பேசக் கேட்பது அவர்கள் அத்தனை பெயருக்கும் பிரீதி.

தனக்கும் சன்னியாசிக்கும் நடந்த சம்பாஷணையை யும், எண்ணிப்பார்த்து இதமெனக் கண்டு பல்லோர் மெ ச்ச அனுசரித்த துறவறத்தைச் சன்னியாசி பழுது சொல் லியது கேட்டுத் தனக்கு உண்டான பிரமையையும் அச் சபையில் ராவிலஸ் எடுத்துச் சொன்னான். அது கேட்டுச் சபையார் அவரவர்க்குத் தோன்றியபடி ஒவ்வொரு அபிப்பிராயம் சொன்னார். துறவறத்தை அபுத்திபூர்வ மாய்த் தழுவிய அவன் சித்தமும் தொடபிடியாய் அதை விடாதிருக்கும் தண்டனை பெற்றது நியாயந்தான் என்

பது சிலர் அபிப்பிராயம். அவர்கள் எல்லாரிலும் இளை
ஞன் ஒருவன் அந்தச் சன்னியாசி வேஷதாரியென்று
வலியுறுத்தி மொழிந்தான். பிரதி மனுஷனைக்கொண்
டும் உழைப்பிக்க உலகத்திற்குச் சுதந்தரம் உண்டாயிரு
க்க, அந்தச் செய்கடனை விட்டுச் சன்னியாச மார்க்கத்
தில் பிரவேசிப்பவன் வேத ஜனத்துரோகியென்று வா
தித்தவர் சிலர். அது கேட்டு வேறு சிலர் ஒன்றைச் சிந்தி
க்கவேண்டும்—உலகத்திற்குத் தொண்டு செய்யுங் காலத்
திற்கு எல்லை உண்டு. அவ்வெல்லை தாண்டியபின் ஒரு
வன் தான் முன் செய்தது பட்டதைச் சிந்தித்துப் பார்க்
கவும், இதயசுத்தி செய்யவும் சர்வசங்கப் பரித்தியாகி
ஆக விரும்பினால், அப்படிச் செய்வதற்குத் தடையும்
இல்லை, அது தகாத செய்கையுமல்லவென்று தீவிரமாய்ச்
சமாதானம் சொன்னார்.

சன்னியாசி சரித்திரத்தைக் கேட்டு விசேஷமாய் மன
தில் அழுந்த நினைத்த ஒருவன் மேற்படி சன்னியாசி இன்
னும் சில வருஷத்திற்குள் ஏகாந்தமாயிருக்க மலைக்குகை
க்குத் திரும்பிப்போவான்; அப்புறம் வெட்கத்திற்கு
அஞ்சி அங்கிருந்துவிட்டால் இருப்பான். இறந்துபோ
னால், பேசவேண்டியதென்ன—அவன்மாத்திரம் வெட்கத்
திற்கு அஞ்சாத கட்டையாய்ப் பிழைத்திருப்பானானால்,
மீண்டும் ஒரு முறை இல்லாச்சிரமத்தை நாடி வருவான்
போலும். சுகம் பெறும் ஆசை மனுஷர் இதயத்தில் அடி
யுற அழுந்தியிருப்பதனால், சுகம் தமக்கு அமையாதெ
ன்று நாட்பட அனுபவசித்தமாய் அறிந்திருப்பினும், அவ்
வாசைக்கு ஓர் அழிவு இல்லை. இம்மையில் எவ்வித நிலை
யில் இருப்பவர்க்கும் துக்கமேயன்றிச் சுகம் இல்லை.
இதை உள்ளத்தில் அடக்கிக்கொள்ள வசமற்று வலிய

வெளியிடுகிறோம். இத்துக்கநிலேயே நமக்குச் சற்றுத் தொலேக்கும்பொழுது, மனே சங்கற்பமானது அதை மீளவும் விரும்பத் தருமாறு சித்திரித்துக் காட்டுகின்றது. ஆனுலும் இதுவும் ஒழிந்துபோம். நூதனகால இயற்கை உண்டாம். அப்பொழுது ஆசை நம்மை வருத்தாது, தான் தான் செய்த தீவினையாலன்றி எவனுக்கும் துன்பம் விளையாது என மொழிந்தான்.

அவன் வாய்மொழியை மிகு ஆத்திரத்துடன் கேட்டுக்கொண்டிருந்த பண்டிதர் ஒருவர் "அறிவுடையோர் தற்கால நிலே இது. தான் தான் செய்த பிழையாலன்றி மற்றப்படி எவனும் துன்புறுதிருக்கும் காலம் வந்திட்டது. கருணைநிதியாகிய பகவான் நமக்கு எட்டும்படி கிட்ட வைத்திருக்கும் சுகத்தைப் பெறும் வகை யாதென்று கண் கெட்டவர்கள்போல விசாரிப்பதைவிட மிக்க பைத்தியம் மற்றென்று இல்லே. சர்வ மனுஷர் இதயத்திலும் ஆதியில் எழுதியிருக்கும் நிர்விகாரப் பிரமாணத்திற்கு அமைந்து, சுபாவத்திற்குப் பொருந்த நடப்பதே சுகம் பெறும் மார்க்கம். இந்தப் பிரமாணம் இதயம் எனும் சிலேயில் வரையப்பட்டது மதியினுலல்ல, விதியினுல்; இது கற்பித்துப் புகட்டியதல்ல, கருவுள் அமைந்தது. ஸ்வாபாவிகம் தப்பாமல் நடப்பவனுக்கு ஆசை மருளாலாயினும், அவா நிர்ப்பந்தத்தாலாயினும் ஒரு துன்பமும் இல்லே. ஒன்றைக் கைக்கொள்ளினும், கொள்ளாமல் தள்ளினும், அவன் சித்தசமம் (மனநிறை) ஒருபொழுதும் அழியாது; அவன் அதததற்கு நியாயம் கண்டு செய்தற்கு உரியதைச் செய்வான், படுதற்கு உரியதைப் படுவான். சூக்ஷ்மலக்ஷண விசாரணேயிலும் தலே தடுமாற்றமான நியாயீகரணத்திலும் பிறர் பொழுது கழிந்தாலும்

கழியும். அவர்கள் இவ்வாறு சிரமப்படாமல் லகுசாதனங்களால் அறிஞராகும்படி பயில்வது கடன். வனத்தில் சஞ்சரிக்கும் மானின் இயற்கையையும், சோலையில் கூவிக் களிப்புறும் குயிலின் இயற்கையையும் கண்டறியக்கடவர்கள். இயற்கையறிவு வழி காட்ட, அவ்வழியே நடந்து வாழும் விலங்கு ஜாதிகளின் முறைமையைச் சிந்திக்கக் கடவர்கள். அவை தம் வழிகாட்டி சொற் கேட்டு நடந்து சுகித்திருக்கின்றன. ஆனதுபற்றி, இனி நாம் விவகரிப்பதை விட்டு, குடிவாழ்க்கை முறை பயில்வோமாக. ஆணவம் கொண்டு ஆடம்பரமாய் உரைக்கும் ஆசிரியருக்கும் உட்பொருள் விள்ளாத நூற்புதரில் நுழைந்து திகைக்காமல், 'இயற்கை நெறிவிலகல் இன்ப நெறிவிலகல்' எனும் இளைஞரும் எளிதில் உணரத்தக்க தெள்ளிய நீதிமொழியை நமக்கு வேதமொழியாய்ச் சிரமேற்கொண்டு ஒழுகக்கடவோம்" எனப் பகர்ந்தார்.

இது சொல்லி முடியவும், அப்பண்டிதர் முகத்தில் தெளிவு பிறந்தது. அவர் அங்குள்ளவர்களைப் பார்த்துத் தமது சத்காரத்தை நினைந்து மகிழ்ந்தார். ராஜகுமாரன் அதிவிநயமாய் அவரை முகம் பார்த்து, "குருவே, இதர மனுஷரைப்போல் எனக்கும் சுகம் பெறும் ஆசை பெருகுவதனால், தங்கள் பிரசங்கத்தை ஐம்புலன் அடக்கி அவதானமாய்க் கேட்டேன். நூல் பல கற்றுத் தெளிந்த தாங்கள் இத்தனை உறுதியாய்க் கூறிய பக்ஷம் யதார்த்தமென்று நம்புகிறேன். இயற்கைநெறி தவறாது ஒழுகுவது என்றால் என்ன? இந்த ஒரு வினாவிற்குமாத்திரம் விடை தரவேண்டும்" எனக் கேட்டான்.

**பண்டிதர் கொடுத்த விடை இது:**—வாலிபர் இவ்வாறு பணிந்து வணங்கிக் கேட்கும்பொழுது, நான் கற்ற

றிந்த நுட்பம் எதையும் எதிர்மறுத்துரைக்காமல் கற்பிப்பேன். இயற்கை நெறி தவருது ஒழுகுவது என்ருல், செய்வது எதையும் காரண—காரிய-சம்பந்தம்—பண்பு இவற்ருல் உண்டாம் பக்குவத்தை ஏற்குமாறு எண்ணிச் செய்வது; சர்வஜன சுகத்தைக்குறித்து என்றைக்கும் மாறுபடாதிருக்கும் மஹா சூத்திரத்தை மனம் பொருந்தி அனுசரிப்பது; இப்பிரபஞ்ச இயற்கையின் சீர்மை—நேர்மையைக் கண்டு இசைந்து ஒழுகுவது.

சொல்லச் சொல்லப் பொருளை விள்ளாமல் மயங்கவைக்கும் ஞாதாக்களில் இவர் ஒருவரென்று விரைவில் அறிந்து, ராஜகுமாரன் தலைவணங்கி மௌனமாயிருந்தான். அதனுல், அவன் சந்தேகம் தெளிந்து திர்ப்தியடைந்தானென்றும், அங்கே வார்த்தை சொன்ன இதர நிபுணர் தமக்குத் தோற்றனரென்றும் நினைந்து எழுந்து பண்டிதர் தற்காலம் நடந்தேறும் இயற்கையோடு இசைந்து ஒழுகுமவர்போலச் சளுக்காய்ச் சென்ருர்.

## 23–ம் அதிகாரம்.

**ராஜகுமாரனும் குமாரத்தியும் உலக இயற்கையைக் கண்டு கேட்டறியும் முயற்சியை வரையறுத்துத் தமக்குள் விபாகித்துக்கொண்டது.**

நினைவு நிறைந்த நெஞ்சுடையோனுகி ராஸிலஸ் விடுதிக்குத் திரும்பினுன். இனி நடக்கத் தகும் வகை ஏதென்று அவன் சிந்தையில் தெளியவில்லை. சுகம்

பெறும் மார்க்கத்தின் சூக்ஷமம் பேதமின்றிக் கற்ருேர் மற்ருேர் இருதிறத்தார்க்கும் தெரியாதென்று அவன் கருத்தில் பட்டது; ஆனுலும் தான் இன்னம் வாலிபனுதலால், மேலுமேலும் விஷய பரிசோதனை செய்யவும் விசாரித்தறியவும் அவகாசம் இருக்கிறதென்று நினைந்து மனம் தேறினுன்.—தான் கண்டு கேட்டவைகளையும் தன் உள்ளத்தில் பிறந்த சந்தேகங்களையும் அவன் இம்லாக்கிற்குச் சொல்ல, இம்லாக் பின்னும் நூதன சந்தேகங்களையும் புறனடைகளையும் சொல்லி அவன் சிந்தையைச் சிதறுவித்தான். ஆனதுபற்றி, ராஸிலஸ் இம்லாக்கை விட்டு, தன் சகோதரியுடன் முன்னிலும் அதிக தாராளமாய் அடிக்கடி சம்பாஷித்துக்கொண்டுவந்தான். சுகம் பெறும் ஆசையின் வேகம் அவனைப்போல் அவளுக்கும் தணியாதிருந்தது. எண்ணிய கருமம் இதுவரையில் சிதறியும், இனி ஒருபொழுது சித்தித்தாலும் சித்திக்குமென, சம்பாஷிக்கும் சமயந்தோறும் அவள் அவனுக்கு ஏதாயினும் ஒரு நிமித்தம் காட்டித் துணைநின்ருள்.

**அவள் சொல்லியது:**—"உலக இயற்கையைப்பற்றி நாம் இதுவரையில் அறிந்தது அற்பம். நாம் ஒரு நாளும் பெரியோராகிப் பிரதபித்தும் அறியோம்—சிறியோராகிச் சிரமப்பட்டும் அறியோம். நந்தேசத்தில் நமக்கு ராஜமகத்துவம் இருந்தும், அதிகாரமோ இல்லை. இத்தேசத்தில் குடித்தனச் சுகத்தின் அந்தரங்க ஒடுக்கங்களை நாம் இன்னம் கண்டறியவில்லை. தான் ஏமாறியதைக் காலக்கிரமத்தில் நாம் அறிந்துகொள்வோமென்று ஐயுற்று, இம்லாக் நாம் தேடும் பொருளைக் குழிந்தெடுக்க நமக்குச் சகாயராகவில்லை. இனி அவரை விட்டு, இம்முயற்சியைப் பங்கிட்டுத் தலைக்கொரு பங்கு செய்துவருவோ

மாக. மாட்சிமை விளங்கும் அரசர் வாழ்க்கைச் சுகம்—சுகவீனத்தை நீர் கண்டறியப்பாரும். காந்தியற்று இருள் மயமாயிருக்கும் சாமானியர் வாழ்வு தாழ்வின் மர்மத்தை நான் அங்கங்கு உலாவி அறிந்துவருவேன். ஆக்கினையும் அதிகாரமுமுள்ள அரசர்க்கு நன்றி செய்தற்குப் பெரும்பாலும் நற்சமயம் கிட்டும். ஆதலால் ஒரு வேளை அவ்விரண்டுமே பரம சுகமாம்; அல்லது ஒரு வேளை மத்தியமர் சிறுகக் கட்டி அடக்கமாய் வாழ்ந்திருக்கும் மனைகளில் இச்சுகம் இருக்கவுங்கூடும்: ராஜ நடை நடக்கும் இறுமாப்பு அவர்களுக்கு எட்டாது, இடர் தரும் மிடி அவர்களைத் தொடாது."



# 24-ம் அதிகாரம்.



## உயர்பதவிக்கு உரிய சுகத்தை அரசன் மைந்தன் பரிசோதித்தது.



சகோதரி சொன்ன யுத்தியை உத்தமமென மெச்சிட்டு, அடுத்த தினம் ராஸிலஸ் ராஜமகத்துவத்தை விளக்கும் சின்னங்களாகிய ஆனை சேனை முதலிய பரிவாரத்துடன் பாத்ஷாவின் அரண்மனைக்குப் பவனிபோனான். அவனுடைய பிரபாவத்தை அரண்மனையார் விரைவில் அறிந்து அவனை மதித்துத் தூரதேசத்தினின்று அதிசயம் பார்க்கத் தேசாந்தரம் போன வேந்தர் குலக்கொழுந்தென்று மரியாதையோடு உபசரித்தார்கள். அவன் அங்குள்ள மந்திரி முதலிய ராஜாதிகாரிகளோடு நட்புப்

பொருந்தி அளவளாவினான். பாத்ஷாவையும் அடிக்கடி கண்டு சம்பாஷித்துக் கொண்டாடினான்.

சமஸ்த ஜனமும் வணங்கிப் பணிந்து சொற் கேட்க, ராச்சியம் எங்கும் சட்டதிட்டம் விதித்து ஆணைசெலுத்தும் அதிகாரம் அமைந்திருப்பதனால், தன் நிலை சுகநிலையென்று பாத்ஷா ரமித்திருப்பானென முதலில் ராஸிலஸ் கருத்திற் பட்டது. அவன் பின்வருமாறு மொழிந்தான்:—"புத்தி பூர்வமாய் அரசாள்வதனால் கோடாகோடி ஜனங்களுக்குச் சுகானந்தபதம் அமைந்திருப்பதைக் கருத்துறக் கண்டறியும் இன்பத்திற்கு நிகரான இன்பம் அரசர்க்கு மற்றொன்று இல்லை. ஆனாலும் ஒரு ராச்சியத்தில் வாழும் அனந்தம் பிரஜைகள் அரசன் ஆணை கடவாது நடப்பதுபற்றி அரசன் ஒருவனுக்குமாத்திரம் உண்டாகும் பரம இன்பத்திற்கு ஒரு குறை இருக்கின்றது. அது நால்வர்க்கும் பொது இன்பமல்ல, ஒருவனுக்கே சிறந்த இன்பம்—பிறர்க்குக் கிட்டா இன்பம். இப்படிப் புடைபெயர்ச்சி — போக்கு நீக்கற்று, அரசன் ஒருவன் இதயத்தில் அடங்கி அவனோடு அழிந்துபோகும் இன்பத்தைத் தோற்றுவிக்கும்பொருட்டு அனந்தம் பெயர் அவன் சித்தத்திற்கு அடங்கி நடப்பது தர்மமல்லவே. ஆனதுபற்றி, இதனிலும் உத்தம இன்பம் மற்றொன்று இருக்கவேண்டுமென்று யுத்தி புத்தியுள்ளோர் எவர்க்கும் தோன்றும்.

இந்தச் சிந்தனை ராஸிலஸுக்கு அடிக்கடி உண்டாய், அவன் மனம் மலைவுற்றது. அம்மலைவு தீரும் வகையை அவன் காணவேயில்லை. ஆனாலும், விநயத்தாலும் வெகுமானத்தாலும் அவன் காலக்கிரமத்தில் ராஜாதிகாரிகள் பலருடன் மேலுமேலும் அளவளாவிக் கண்டறிந்த மர்

மம் இது:—உத்தியோக உயர்பதவி பெற்ற பிரதி மனுஷ னுக்கும் பிறரிடத்திலும், பிறர்க்கு அவனிடத்திலும் துவேஷம் உண்டு. அன்றியும், அவர்கள் உள்ள நாள் உள்ளமட்டும் புனைசுருட்டுச் செய்வதும், செய்த புனைசுரு ட்டைக் கண்டறிவதும், சதி சூழ்வதும், சூழ்ந்த சதிக்குத் தப்ப வகைபார்ப்பதும், கலகம் செய்து கட்சி பிரிவதும், விசுவாசகாதகம் பண்ணுவதுமே மணியமாயிருந்தார்கள். பாத்ஷாவின் சன்னிதியில் சுற்றிக்கொண்டிருந்தவர்கள் பலர் அவன் தயை பெற நாடியவர்களேயல்ல; அவன் செய்கை படுகையை மடுக்கரையில் கொக்குப்போல் அடக்கமாயிருந்து கண்டு மாற்றானுக்கு வெளியிட அனுப்பப் பட்ட ஒற்றர்கள். நா அனைத்தும் பழிதூற்றின, விழி அனைத்தும் குற்றம் காண நுழைந்து நோக்கின.

இப்படிச் சிறிது காலம் கழிந்தபின் உத்தியோகம் விட்டு நீங்கவேண்டுமென்று ஸுல்த்தான் முத்திரையிட்ட பத்திரம் ஒன்று வந்து சேரவும், பாத்ஷா காலில் தளை பூண்டு கன்ஸ்தாந்திநோபில் சமஸ்தானத்திற்குக் கைதி யாய்க் கொண்டுபோகப்பட்டான். அதற்குப்பின் அவன் பெயரை எடுத்துச் சொல்வார் இல்லை.

பின்பு ராஸிலஸ் சகோதரியை நோக்கி, "இப்படி ஆனால், அதிகார சுதந்தரத்தைக்குறித்து நாம் என்ன நினைக்கவேண்டும்? அது எதும் நன்மைக்குச் சாதனமாய் முடியாதா? அல்லது, பிரதி அதிபதிக்குமாத்திரம் அபாயம் உண்டாக, சர்வாதிபதிக்கு க்ஷேமமும் பிரதாபமும் உண்டென்று சொல்வோமா? அல்லாவிடில், ஸுல்த்தானுக்குச் சமுசயவேதனை—சத்துருபயம் உண்டா?" என்று கேட்டான்.

மேற்படி பாத்ஷாவிற்குப்பின் அப்பதவி பெற்றவனுக்கும் அதே கதியாய் முடிந்தது. அவனை உயர்ந்த உத்

தியோகத்தில் அமர்த்திய ஸுல்த்தான்————கொலையுண்டிறந்தான். அப்பால் பட்டத்தில் வீற்றிருந்த ஸுல்த்தானுடைய கண்ணும் கருத்தும் வேறு திசையில் பெயர்ந்தன.—அவனுக்குப் பிடிமானம் முன் உள்ள உத்தியோகஸ்தர்மீதல்ல, பிறர்மீது.



## 25-ம் அதிகாரம்.



ராஜகுமாரத்தி நாடிய கருமத்தை முயற்சியாய்த் தேடி விசாரித்தும் சித்தி குன்றியது.

மத்தியில் ராஜபுதல்வி அநேக குடும்பங்களில் உபாயமாய் உட்சென்று பழகியிருந்தாள். கைநட்பு—சொல் நட்புக் கண்டால், கதவிற்கு இரட்டைப்பூட்டு இட்டு வைத்திருப்பவர்களும் வலியத் திறந்துவிட்டு வருந்தி அழைப்பார்கள். அநேக குடும்பங்களில் இளம் பெண்கள் பிலுக்கும் களிப்புமுள்ளவர்களாயிருந்தார்கள். இம்லாக்குடனும் தன் சகோதரனுடனும் நாட்படச் சம்பாஷித்துப் பயின்றிருந்த நிகாயாவிற்கு அர்த்தசாரமின்றி அந்தச் சிறுமியர் மொழியும் அற்பவார்த்தைகளும் மழலைச் சொற்களும் ரசிக்குமா? அவர்கள் அறிவு ஒடுங்கி ஆசை இழிந்து, மகிழ்வார்போல நடிக்கும் மாயக்கள்ளிகளென்று அவள் கண்டாள். அவர்கள் மனதிற்கு இதமாகிய இன்பம் எளிய இன்பமேயாயினும், அதை அவர்கள் துன்பத்துடன் கலவாது அனுபவிக்க இடம்பெறவில்லை. அற்ப சடுத்தங்களாலும், வியர்த்தமாய் ஒருவர்க்கு ஒருவர் முந்தப் பார்த்து முடியாததனாலும் அவர்கள் மனம் துன்

புற்றது. தம்மிலும் பிறர் மிகு சௌந்தரியவதிகளாயிருப்பது கண்டால், அவர்கள் நெஞ்சில் மாற்சரியம் எனும் தீ பற்றி எரியும். விசாரப்படுவதனால் விரூபிகள் சுரூபிகளாவதும் இல்லை, பிறர் திரணமாய்ப் பேசுவதனால் சுரூபிகள் விரூபிகளாவதும் இல்லை. அநேகர் தம்மைப்போலும் வீணருடன் நட்புப் பொருந்தினார்கள். நெஞ்சில் கடுகத்தனை நட்பும் இல்லாதிருக்க, அநேகர் தமக்கு இன்னார் இன்னார் நண்பரென்று மனப்பால் குடித்தார்கள். ஆதியில் அறிவையெனினும் நற்குண நற்செய்கைகளையெனினும் இலக்காய்க் குறித்து நட்புப் பொருந்தாததனால், அறுதியில் அந்த நட்பு அவர்களுக்கே சஞ்சலமாய் முடிந்தது. ஆனாலும் ஒன்று வாஸ்தவம். அவர்களுடைய இன்பமன்றித் துன்பமும் நீர்க்குமிழிபோல நிலையற்றதுதான்; பிரதிவிஷயமும் முற்கால பிற்கால சம்பந்தமின்றி அவர்கள் மனதில் தெண்ணீர் முகத்தில் தெப்பம்போல மிதந்தது. ஆகவே, தூரவுநீர் முகத்தில் ஒரு கல் எறிந்துண்டாம் சுழி மறுகல் எறியக் கலைந்து மயங்கும் தன்மைபோல, உள்ளத்தில் பிறக்கும் ஒரு ஆசை மறு ஆசை பிறக்கவும் நிலையற்றுப்போகும்.

அவள் அந்தப் பெண்களுடன் கூடி விளையாடியது விக்கினமற்ற விலங்குஜாதியுடன் ஆடுவதுபோல் இருந்தது. அவள் முகத்தின் அழகை அவர்கள் மனம் பூரித்துப் பாராட்டினார்கள்—அவள் சகவாசம் அவர்களுக்கு அலுப்பாயிருந்தது.

பின்னும் உள்ளாழ்ந்து அறிவது அவள் தாற்பரியமாதலால் இன்சொற் பேசி அவர்களுக்கு இதம் காட்டினாள். காட்டவே, மனம் கொள்ளாத் துக்கத்தால் வருந்திய அவர்கள் அவள் வசப்பட்டுத் தங்கள் தங்கள் அந்தரங்கத்தை

அவள் காதில் ஓதினார்கள். ஆசையால் மடங்கியும், செல்வப் பெருக்கால் ஆனந்தித்தும் இருந்தவர்கள் தம்மொடு இன்பம் அனுபவிக்க அடிக்கடி அவளை அழைத்தார்கள்.

ராஜபுத்திரி—புத்திரன் இருவரும் வழக்கமாய்ச் சாயரக்ஷை சந்தித்து அன்றன்று நடந்தவைகளை ஒருவர்க்கு ஒருவர் சொல்வது வெளிநகர வெப்பத்திற்கு ஒதுங்க நீல் நதிக்கரையில் கட்டிய சாமானிய வீடு ஒன்றில். ஒரு நாள் சந்தித்து உட்கார்ந்திருக்கையில், எதிரில் ஓடிய நதியிற் றிருஷ்டிவைத்து, சோயா, "நதிராஜனே, எண்பது ஜாதிகள் சஞ்சரிக்கும் பிரதேசம் எங்கும் அலை புரளப் பிரவாகித்தும் பேராறே, உனது ஜன்ம தேசாதிபதி புத்திரி உன்னைப் பிரார்த்தித்துக் கேட்கும் கேள்விக்கு உத்தரம் சொல்லு. நீ பிரவாகித்துவரும் வழியில் குறைகூறுந் தொனிகேளாத குடும்பம் ஒன்றாவது உண்டா" என வினவிஞள்.

அதுகேட்டு, ராஸிலஸ், "அரசர் வாழும் அரண்மனைகளுக்குச் சென்று காமிய பொருளைத் தேடிப்பார்த்த என் சித்திக்குக் குடிகள் வசிக்கும் வீடுதோறுஞ் சென்ற உன் சித்தி அதிகமல்ல, அப்படியா" என மொழிய, சகோதரி, "நாம் இருவரும் விஷய விசாரணை செய்யத்தொடங்கத் தேசத்தை விபாகித்துக்கொண்ட தினமுதலாக, காலோசித உபாயம் சூழ்ந்து, பல குடும்பங்களில் பரிச்சயமானவள்போலப் பிரவேசித்துப் பார்வையிட்டு வருகிறேன். அவை செல்வமும் சாந்தமுமுள்ள குடும்பங்கள்போலத் தூரதிர்ஷ்டியாய்க் காண்பவர்க்குத் தோன்றும். நுழைந்து பார்த்த அளவில், மனவமைதியைக் கெடுக்கும் ஏதாயினும் ஒரு பிசாசு குடிகொள்ளாத குடும்பம் ஒன்றையும் காணேன்" என்றாள்.

அவள் பின்னும் சொல்லியது:—"எளியோர் குடும்பங்களில் சுகவாழ்வு உண்டென்று நான் எண்ணவில்லை. எண்ணுததனுல் தேடிப் பார்க்கவில்லை. ஆனுலும் நான் கண்ட தரித்திரர் வெகு பெயர் சீமான்களாய் வாழ்ந்திருக்கிறுர்களென்று எண்ணமிட்டேன். பெருநகரப்பதிகளில் தரித்திரத்தின் கோலம் வேறு. அது சம்பிரமத்திற்குள் மறைந்திருப்பதும், அதிக்கிரமச் செலவின்கீழ் ஒளித்துக்கொள்வதும் பெரு வழக்கு. மனுஷர் பெரும்பாலார் தமது வறுமையைப் பிறர் அறியாவண்ணம் மறைத்துக்கொள்ளப் பார்ப்பது இயற்கை. அவர்கள் நின்று உதவும் உபாயங்களை விட்டு அன்று உதவும் உபாயங்களால் காலம் தள்ளுவார்கள். நாளைப் பிழைப்பிற்கு வேண்டும் உபாயம் சூழ்வதில் அன்றன்று வியர்த்தமாய்க் கழியும்.

"ஆனுலும், பெரும்பாலும் உளதாயினும், இக்குறையை எளிதில் நிவிர்த்திக்கலாகுமே. அதனுல் இதைக் கண்டு எனக்கு அத்தனை மனத்துயர் உண்டாகவில்லை. அவர்களிடத்தில் மற்றொரு அவகுணம் கண்டேன். உதவி செய்ய மனதிரங்கி நான் கொடுக்கப்போன திரவியத்தை வறிஞர் சிலர் வேண்டாமென்று மறுத்தார்கள். தமக்கு உதவி புரிய நான் சித்தமாயிருந்ததைத்தொட்டு அவர்களுக்குச் சந்துஷ்டி உண்டாகவில்லை. தமது தரித்திரத்தை நான் கூர்மையாய்க் கண்டறிந்தது தமக்குத் தீராவசையென்று அவர்கள் என்னை நொந்தார்கள். அப்போது உள்ள முட்டுப்பாட்டால் கொடுத்ததை மறுக்காமல் கை நீட்டி வாங்கினவர்கள் சிலர் என்னல் தமக்கு வந்த அபசாரத்தை ஒருநாளும் மறக்கவில்லை. ஆனுலும் வெகு பெயர் நன்றி செய்த என்னை எப்பொழுதும் தம் உள்ளத்

தில் வைத்திருந்தார்கள். அந்த நன்றியை அவர்கள் வாய் திறந்து சொல்லவுமில்லை—மேலுதவிபெற ஆசைப்படவுமில்லை."



## 26-ம் அதிகாரம்.



### சக்கரவர்த்தி குமாரத்தி சாமானியர் குடித்தன இயற்கையைப்பற்றிப் பின்னும் சொல்லியது.

சொன்னதைச் சகோதரன் அவதானமாய்க் கேட்டது கண்டு, நிகாயா தரிக்காமல் சொல்லிக்கொண்டு போனாள்.

"தரித்திரம் உள்ள குடும்பங்களிலும் இல்லாத குடும்பங்களிலும் சாதாரணமாய்ப் பிணக்கு உண்டு. ஒரு ராச்சியமாவது பெருங்குடும்பம் என இம்லாக் சொல்வது மெய்யானால், ஒரு குடும்பம் கலககட்சிகளால் பின்னப்பட்டுக் காலசக்கரச் சுழற்சிக்கு இலக்காயுள்ள சிறு ராச்சியம் என்பதும் மெய்யே. லௌகிகம் தெரியாதவன் பெற்றார்க்கும் பிறந்தார்க்கும் உள்ள அந்நோந்ய அன்பு நிலைபெற்றுச் சமமாயிருக்குமென்று எண்ணுவான்: ஆனால் இவ்வன்பு பிள்ளைப்பருவம் கழிந்தபின் நிலைபெறுவது அரிது. பிறந்து சிறிதுகாலத்திற்குள் பிள்ளைகள் வளர்ந்து பெற்றார்க்கு எதிரிகளாகிறார்கள். செய்த நன்றி தோன்றாது அடிப்படையில் மறைய, பழிமொழி தலைக்கொள்ளும்; அந்நன்றியுணர்வை அழுக்காறு இழிவுறச் செய்யும்.

"பெற்றோரும் பிள்ளைகளும் மனம் ஒத்து ஒழுகுவது அரிது. பிள்ளைகள் அத்தனைபெயரும் தாய் தந்தையர் அபிமானத்தையோ, அன்பையோ தான்தான் கவர்ந்து கொள்ள வகைதேடுவார்கள். பெற்றோருக்கு இத்தனை சோதனை—மருள் இல்லையே. இல்லாதிருந்தும், அவர்களும் பிள்ளைகள் காண அறியத்தக்கதாக ஒருவர்க்கு ஒருவர் துரோகிகளாய் நடப்பார்கள். ஆகவே, சில பிள்ளைகளுக்குத் தந்தைபெயரிலும், சிலருக்குத் தாய்பெயரிலும் விசுவாசம் உண்டாம். இப்படிச் சிறிது சிறிதாகக் குடும்பத்தில் சூதும் தீராப்பகையும் பெருகும்.

"பெற்றோர் முதியோர், பிறந்தார் இளையோர்; பெற்றோர்க்கு ஆசாபங்கத்தால் மனம் குன்றியிருக்கும். பிள்ளைகளுக்கு வரவர ஆசை பெருகத் துள்ளுமனம் உண்டாம். பெற்றோர்க்கு அனுபவக்காட்சி முதிர்ந்திருக்கும்; பிள்ளைகளுக்கு நம்பிக்கை நாளொருவண்ணம் வளரும். இந்த விகற்பம் அவர்கள் தோஷமல்ல, பருவலக்ஷண விசேஷம். இவ்வாறு ஒருவர்க்கு ஒருவர் ஒவ்வாத குணம் குறியுள்ள இருதிறத்தார்க்கும் ஏதொரு விஷயத்தைக் குறித்தெனினும் உண்டாகும் அபிப்பிராயம் ஒன்றுக்கு ஒன்று இசைந்திருக்குமா — அல்லவே. தரைமுகத்தின் தோற்றம் வசந்தகாலத்தில் ஒரு வகை, குளிர்காலத்தில் ஒரு வகை; அத்தன்மைபோல, லௌகிக வர்ணமும் இளையோர்க்கு ஒன்று, முதியோர்க்கு ஒன்றாகத் தோன்றும். காரிய இயற்கை இவ்வாறு இருக்க, தமக்குப் பிரத்தியக்ஷமாய் அபத்தமெனத் தோன்றும் பெற்றோர் வாக்குறுதியைப் பிள்ளைகள் நம்புவது எப்படி?

"சொற்படி செய்து சொல்லுக்கு உறுதி உண்டாக்கும் பெற்றோரைக் காணேம். பொறுத்து உபாயம் சூழ்ந்து

ளைகள் இந்த உறவிற்கு ஜன்ம ஆயத்தையால் இடையூறு சேர்வதாக நீர் சொல்வது என் மனதிற்கு ஒப்பவில்லை.”

அதற்கு ஞானம்பா சொல்லிய உத்தரம்:—“குடும்பத்தில் பிணக்கு இல்லாமல் தீராது என்றும், இல்லாதிருக்க விதி இல்லை என்றும் நான் சொல்லவில்லை. ஆனாலும் குடும்பப் பிணக்கைத் தவிர்ப்பது எளிதல்ல. எல்லாரும் நல்லோராயிருக்கும் குடும்பத்தை எங்கும் காணோம். சுட்ட மண்ணொடு பச்சைமண் ஒட்டாது. அதுபோல, நல்லோரும் தீயோரும் இணங்கார். தீயோர்க்கும் தீயோர்க்கும் இணக்கம் சிறிதும் இல்லை. அவரவர் குணவிசேஷமும், அதனதன் பயனும் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருக்கும் பொழுது நல்லோருக்கும் நல்லோருக்குமே வெறுப்பு உண்டாவதும் உண்டு. சாதாரணமாய், தாய் தந்தையர் அவரவர் யோக்கியதைக்குத் தக்க மதிப்புப் பெறுகிறார்கள். நெறி தப்பாதிருப்பவனை நிந்திப்பவர் இல்லையே

மற்றநேக கெடுதிகள் சாமானியரைச் சுற்றிக்கொண்டிருக்கின்றன. யஜமானர்கள் சிலர் வேலை செய்வோரை நம்பித் தம் கருமத்தை ஒப்பித்துவிட்டு அவர்களுக்கு அடிமைகளாகிறார்கள். அடிக்கொரு குணம் கொள்ளும் ஐசுவரியவான்களாகிய உற்றார் உறவர்களால் ஏதேது கெடுதி சேருமோவென்று சிலர் இடைவிடாது ஏங்கித் திகைத்திருக்கிறார்கள். அவர்களுக்கு இதமாய் நடப்பதும் அசாத்தியம், பிழைசெய்யவும் துணிவு இல்லை. கணவர் சிலர் துடுக்கர், மனைவியர் சிலர் வக்கிரகுணமுள்ளோர். நல்வினை தீவினை இரண்டில் தீவினை செய்வது மிக எளிது. ஆகலால் தீவினையும் கெடுமதியும் உடையவனையன்றிப் பின்னும் பலரைப் பீடிக்கும். ஆனால், பெரும்

பாலும் ஒருவனுடைய ஞானத்தாலும் சுகிர்தத்தாலும் அவனுக்கன்றி பலருக்குச் சுகம் இல்லை."

ராஸிலஸ்:—விவாகத்தால் விளையும் பயன் இதே ஆமானால், இனி விவாகம் செய்வது அபாயமென்று எண்ணுகிறேன். சிந்தனையின்றி ஒருத்தியை வாழ்க்கைத் துணைவியாய்க் கொண்டு, அவள் செய்த பாவகர்மத்தால் விளையும் துன்பத்திற்குத் துணைவன் பங்காளி ஆக நிமித்தம் என்ன—அவளைத் தொடுவானேன் கவலைப்படுவானேன்.

நிகாயா:—இக்காரணத்தால் விரக்தராயிருக்கும் வெகு பெயரைக் கண்டிருக்கிறேன். கண்டிருந்தும், அவர்களைப் புத்திசாலிகளென்று வியக்கத் தகுமென என் சிற்றறிவிற்குத் தோன்றவில்லை. அவர்களுக்கு உறவு இல்லை, பரிவு இல்லை—அவர்கள் காலம் சொப்பனாவஸ்தையில் கழிவதுபோல வியர்த்தமாய்ப் போகின்றது. அவர்களுக்கு நாள் என ஒன்று இருந்தும் பயன் இல்லை. சிறுவர்க்கு உரிய விநோதங்களிலும் தீய போகங்களிலும் அவர்கள் நாள் கடத்தும்படி நேரிடுகின்றது. தமக்கு இன்ன இழிவு இருக்கிறதென்று அவர்கள் மனம் எப்பொழுதும் நினைக்க நினைக்க, குரோதம் பெருகுகின்றது; பழிமொழி சொல்வதே அவர்கள் நாவிற்கு மணியம். வீட்டில் இருக்கும்பொழுது அவர்கள் குணம் வெடுவெடுப்பு; வெளியே போகும்பொழுது அவர்களுக்குக் கெடுநினைவு. அந்த மானுஷிய தர்மப்பிரஷ்டரை உலகம் தள்ளிவிட, ஊரைக் கலக்கிச் சீர்குலைப்பதே அவர்களுக்கு வேலையும் விநோதமுமாம். பிறருக்கு உள்ள சுகதுக்கம் தனக்கு என்று எண்ணாமலும், பிறரும் அவ்வாறு எண்ணப்பெறாமலும், தான் சுகித்துப் பிறர் சுகிக்க உதவாமலும், தன் உபத்திரவத்தைக் கண்டு மனதிரங்கி உவித

புரிவார் இல்லாமலும் இருப்பவனுடைய நிலைமை தன்னந்தனியே இருப்பவனுடைய நிலைமையை விட அதிக் துயரமானது. அத்தனையும் தனித்திருப்பதல்ல, ஜனசங்கம் தவிர்ந்திருப்பதே துன்பத்திற்கு மூலம். விவாக நிலையில் வெகு துக்கம் உண்டு, விரக்த நிலையிலோ தினைத்துணையும் சுகம் இல்லை.

**ராஸிலஸ்:**—பின்னை என்னதான் செய்வோம்? தேரத் தேரத் தீரா மயக்கம் உண்டாகின்றதே. எதையும் எவரையும் சிந்திக்காமல் தன் மனோசுகம் ஒன்றிலேயே கண்ணுயிருப்பவன் சுகம் பெறுவது நிசம்.



# 27-ம் அதிகாரம்.



## மகத்துவ லக்ஷண விமர்சை.

அவர்கள் சம்பாஷணை சிறிது நேரம் நிறுத்தப்பட்டது. சகோதரி வாய்ப்பிறப்பைச் சீர்தூக்கிப்பார்த்து, ராஜகுமாரன் பின்வருமாறு மொழிந்தான்:—

**ராஸிலஸ்:**—சகோதரீ, நீர் குடிவாழ்க்கை நிலையைத் துரபிமானத்துடன் பார்வையிட்டீர்; துக்கம் இல்லாத இடத்தில் உண்டென்று உத்தேசிக்கிறீர். நீர் சொல்லிய வரலாறுகளால் இனிமேலாவது சுகம் கிட்டுமென்று சற்றும் தோன்றவில்லை. இம்லாக் தூரதிர்ஷ்டியாய்க் கண்டு லேசாக வரைந்து காட்டிய பிறவிப் பெருந்துயர் எனும் படத்தை நீர் வர்ணித்து மயக்கமற விளக்கினீர். சாந்தம் என்பது மகத்துவத்தின் புத்திரி அல்ல, பராக்கிரமத்தின்

புத்திரியுமல்ல; அதைப் பொன்னுக்கு வாங்குவதும் போர்செய்து வசப்படுத்துவதும் அசாத்தியம் எனப் பின்னிட்டு உள்ளம் தேற அறிந்துகொண்டேன். அகல அதிகாரம் செலுத்தும் எவனுக்கும் சத்துருபயம் உண்டாம். அல்லது தெய்வகதியாய்ப் பிரமாதம் நேரிடும். ஒருவன் பலருக்கு இதம் உண்டாக்கவும், பலரை அடக்கி ஆளவும் நேரிடும்பொழுது, பல காரியகர்த்தரை வைத்து அப்படிச் செய்விக்கப் பாத்தியப்படுவான். அக்காரியகர்த்தர்கள் சிலர் பாதகராயிருப்பார்கள்; சிலர் பாமரராயிருப்பார்கள்; சிலர் அவனை உறங்காத்துறையில் உறக்குவார்கள்; சிலர் படுகுழியில் விழுத்துவார்கள்; அவன் செய்வது ஒருவனுக்கு இதமாயிருக்கும், ஒருவனுக்கு இதமாயிராது; அரசன் செய்கை எவரெவர்க்கு அகிதமாயிருக்கின்றதோ, அவர்கள் அரசனைத் தமக்கு அபகாரியென்று எண்ணிக்கொள்வார்கள்; ராஜப்பிரசாதம் சிலருக்குமாத்திரம் அமையும்; அதனால், பெரும்பாலார்க்குத் தீரா மனக்குறை உண்டாம்.

**நீகாயா:** — இவ்வாறு நிர்நிமித்தமாய் உண்டாகும் மனக்குறைக்கு நான் பயப்படேன், அதைத் துரும்பெனவும் மதியேன். அதைத் தலைக்கொள்ள விடாது அடக்கும் திராணி உமக்கு எப்பொழுதும் உண்டாம்.

**ராஸிலஸ்:**—அரசன் தர்மம் தவறாமல் ஜாக்கிரதையாய் ராச்சியபரிபாலனம் செய்தால், பிரஜைகளுக்கு உண்டாகும் மனக்குறை எப்பொழுதும் நிர்நிமித்தமாயிராதே. தரித்திரத்தினுள்ளாயினும் பிணக்கினுள்ளாயினும் மறைந்திருக்கும் குணநிதிகளைத் தவறாமல் எப்பொழுதும் கண்டறியத்தக்க அதிசய அவதானமும், தகுதியான வெகுமானம் செய்யத்தக்க திராணியுமுள்ள அரசர் இல்லை.

ஆனாலும், தன்னிலும் திறமை குன்றிய ஒருவன் உயர் பதவி பெற்றிருப்பதைக் காண்பவனுக்கு அது பக்ஷபாதத்தாலோ புத்திசாபல்யத்தாலோ அமைந்ததென்று இயற்கையாய் எண்ணம் உண்டாம். பிறப்பு விசேஷத்தால் பெருந்தன்மையுடையோரானாலும் சரி, பதவி விசேஷத்தால் உயர்நிலை அடைந்தோரானாலும் சரி தாரதம்மியம் பார்த்துப் பிரதிஷ்டைசெய்யும் தர்ம வரம்பை எந்நாளும் கடவாது நின்ற நிலையில் நிற்பது அசாத்தியம். அரசன் சிலவேளை தனக்கு விகிதமானவர்களை உயர்த்துவான். சிலவேளை தன் விகிதருக்கு இஷ்டமானவர்களைக் கைதூக்கிவிடுவான். தனக்குச் சேவகம் செய்யும் திறமை ஒருபொழுதும் இல்லாத சிலரிடத்தில் பிரியம் வைத்திருப்பான். இவர்கள் இன்னின்ன குணாதிசயமுள்ளவர்களென்று அபத்தமாய் நினைத்துச் சிலரில் அன்புகூர்வான். தனக்குப் பிரீதி உண்டாக்கும் பெயருக்குத் தானும் பிரீதி உண்டாக்கப் பார்ப்பான். இப்படியே, சிறுபான்மை பரிதானம் கொடுத்துப் பெரும் வாக்கு சகாயமும், சிறுபான்மை முகஸ்துதியும் தொழுகள்ளமும் திறமையை மேற்கொள்ளும் — திரவிய பரிதானத்தைக் காட்டிலும் முகஸ்துதி, கள்ளத்தொழும்பு எனும் பரிதானங்களால் விளையும் நாசம் மிகுதி.

அதிக வேலை செய்பவன் அதில் சிறிதைத் தவறாகச் செய்வான். அந்தத் தவறால் விளையும் துன்பத்தை அவனே படவேண்டும். அவன் செய்வதை எப்பொழுதும் சீராகச் செய்ய இயலாது. இயலினும், திறம் தெரிந்து சீர்தூக்கி அபிப்பிராயம் சொல்லப் பலர் ஏற்படும்பொழுது, தீயோர் கெடுநினைவால் அவன் செயலைப் பழித்து

அபிவிர்த்தியைத் தடுப்பார்; நல்லோர் சிறுபான்மை வகை மோசமாய் அவ்வாறே செய்வார்.

ஆனதுகொண்டு, உயர்பதவிகள் சுகத்திற்கு உறைவிடமாமென நாடுவதற்கு இடம் இல்லை. சுகமானது அரசர் கொலுவிருக்கும் ஆசனத்தையும் குடிகொள்ளும் அரண்மனையையும் விட்டு அகன்று, தாழ்வுற்ற சாமானியரும் சாந்தமுள்ள நீசரும் தங்கும் சிறு குடிசைகளில் போய் உறைந்தது. இதை மனப்பூர்வமாய் நம்புகிறேன். செய்யும் தொழிலுக்குத் தக்க திறமையும், தன் சாய்கால் செல்லும் இடமெங்கும் தானே கண் திறந்து காணும் சாதனையும், நம்பத்தக்கவர் இன்னாரென்று நாளடைவில் ஆய்ந்து அறிந்து நம்பும் இயற்கையும், ஆசை அச்சம் காட்டி ஏமாற்றுவார் இல்லாதிருக்கும் அபூர்வ சாமர்த்தியமுமுள்ளவனுக்கு உண்டாகும் மனோகிர்ப்தியைத் தடுக்கவும், அவன் நாடிய பொருளைக் கைகூட ஒட்டாமல் கெடுக்கவும் வல்லது என்ன? பிறரில் அன்புகூர்வதும் பிறரால் அன்புகூரப்படுவதும், சுகுண சுகிர்தனாவதும் சுகித்திருப்பதுமன்றி, வேறுமணியம் அவனுக்கு ஒன்றும் இல்லையே.

**நீகோயா**:—குன்றாத சுகவாழ்வு குன்றாத குணநலத்தால் மனுஷருக்கு அமையுமா அமையாதா? இவ்வழக்குத் தீரா வழக்கு. இதைத் தீர்க்க இப்பிறப்பில் எந்நாளும் சமயம் கிட்டாது. ஆனால், மனுஷர் எப்பொழுதும் அவரவர் சுகுண சுகிர்தங்களுக்குத் தக்க சுகம் பெறுவது காணோம். இம்மாத்திரம் மெய்யென்று சாதிக்கலாம். தெய்வீகமாய் உண்டாம் ஆபத்து விபத்து அனைத்தும் தீயோருக்குமாத்திரமல்ல, நல்லோர் தீயோர் இருதிறத்தார்க்கும் பொது. ராஜீகமாய் வருவனவும் முக்காலே மூன்றுவீசம் அவ்

வாறே. பஞ்சோபத்திரவம் நல்லோருக்கும் சரி தீயோருக்கும் சரி. கட்சிபிரிந்து உக்கிரத்தோடு பக்ஷம்சாதிக்கும் காலத்தில் நல்லோர் இவர் தீயோர் இவரென்று பெரும்பாலும் பகுத்தறிந்து நடக்கிறதில்லை. கடும்புயல் அடித்துப் பிரவாகிக்கும்பொழுது, இருபாலாரும் வெள்ளத்தில் மூழ்கி இறப்பார்கள். ஒரு தேசத்தினுள்ளே தாவடிபோகும் பகைவர் அங்குள்ள இருதிறத்தாரையும் ஒருங்கு துரத்திவிடுவார்கள். ஆகக்கூடிச் சுகுண சுகிர்தங்களால் விளையும் பயன் சித்தசாந்தியும், மிக்க சுகமுள்ள பதவி இனி அமையுமெனும் நிலைபெறுன காட்சியுமே. இந்த மனோதிர்ஷ்டியானது உபத்திரவத்தைப் பதைக்காமல் பொறுத்துத் தாங்க நமக்குத் தீரம் உண்டாக்கும்; ஆனாலும் பொறை என்பது லேசல்ல, அதில் பீடை மிகுதி. இதை நினைத்துக்கொள்ளும்.



## 28-ம் அதிகாரம்.



### ராஸிலஸும் நிகாயாவும் பின்னும் சம்பாஷித்தது.

ராஸிலஸ்:—எனது அரிய ராஜகுமாரீ, நாம் இருவரும் ஒரு விஷயத்தை வாலாயமாய் விசாரித்துப் பேசித் தெளியத் தொடங்கினதொழிய மற்றப்படி அல்லவே. நீரோ பெருகப் பிரசங்கம் செய்யும் விபரீதத் துறையில் இறங்கி, தேசோபத்திரவங்களையும், பலரைப் பீடிக்கும் கொடிய ஆபத்துகளையும் உமது பக்ஷத்திற்கு உதாரணமாய் எடுத்

துக்காட்டத் தலைப்பட்டனர். இவைகளை நாம் பெரும்பாலும் காவியங்களில் வாசித்தறிவோமேயொழிய உலகத்தில் கண்டறியோம். இவைகள் காதினால் கேட்கக் கெடிகலங்குவிக்கும் தன்மையுள்ளவைகள் — கார்த்திகைப் பிறைபோலக் காணும் அபூர்வ உற்பாதங்கள். நமக்கு இல்லாத விக்கினங்களைச் சங்கற்பித்துக்கொள்ளாமலும், பூலோக வாழ்வின் தன்மையை வழுவாய்க் கூறி அபசாரிகளாகாமலும் இருக்கக்கடவோம். சமஸ்த நகரங்களும் ஜெருசலேமைப்போல முற்றுகை செய்யப்படுமென்றும், வெட்டுக்கிளித்திரள் பறக்கும் இடந்தோறும் பஞ்ச உபத்திரவம் தலைக்கொள்ளுமென்றும், தென்காற்று அடிக்கும்பொழுதெல்லாம் பெருவாரி ரோகம் உண்டாமென்றும் அச்சம் காட்டிச் சொற்சாதுரியமாய் முறையிடுவதைக் கேட்க என் மனம் சகிக்கவில்லை.

தவிர்க்கும் உபாயமின்றித் தெய்வீகமாய்ச் சம்பவித்து, விஸ்தாரமான ராச்சியங்களை க்ஷணப்பொழுதில் நாசப்படுத்தும் உற்பாதங்களைக்குறித்துத் தர்க்கிப்பது வியர்த்தம்: சம்பவிக்கும்பொழுது அவ்வுற்பாதங்களை அனுபவிக்காமல் தீராது. ஆனாலும், சர்வ ஜனத்திற்கும் ஏககாலத்தில் இடிவிழுந்தாற்போல் உண்டாம் ஆபத்தை அத்தனையும் உத்தரிப்பதல்ல, சொல்லக்கேட்டுக் குலை குலைவதே மிக்க உபத்திரவமெனத் தெட்டத்தெளியத் தோன்றுகிறது. தம் தேசத்து அரசர் குணம் சாந்தமானாலும் சரி குரூரமானாலும் சரி, யுத்தம் செய்யும் சேனாவீரர் சத்துருவைப் புறங்காட்ட வெருட்டித் துரத்தினாலும் சரி சத்துருவிற்கு ஈடாகாமல் தாமே புறங்காட்டினாலும் சரி, பிரஜைகள் ஆயிரவர் பதினாயிரவர் அவரவர் பாட்டில் இருந்து பருவ இயற்கைப்படி உரத்து உயர்ந்து வணங்கி இளைத்

துக் கூனிக் குறுகுறுத்துக் காலங்கடந்து போவார்கள். அவர்களுக்கு அவரவர் குடும்ப விசாரமன்றி வேறு விசாரம் இல்லை. ராமன் ஆண்டாலும் சரி ராவணன் ஆண்டாலும் சரி — அதைப்பற்றி அவர்களுக்குச் சிந்தனை இல்லை. ராஜசபைகளில் உள்ளுக்குள்ளான சடுத்தங்களால் கலக்கம் உண்டாக, ஸ்தானாதிபதிகள் அன்னிய தேசத்து மன்னர் சமஸ்தானம் சேர்ந்து சாமோபாயம் பேச, கருமான் விசாரமற்றிருந்து உலையிற் காய்ந்த இரும்பைப் பட்டடையில் வைத்து அடித்துத் தொழிற் கருவி செய்வான்; ஏராளன் பிடித்த ஏர் கைவிடாமல் உழுதுவருவான்; ஜீவனத்திற்கு இன்றி அமையாத பொருள் அனைத்தும் அதனதன் வருவழியில் தேட வந்தடையும்; காலகருமம் எல்லாம் என்றும் உள்ளபடி முறைபிறழாது நடந்துவரும்.

இனி ஒருவேளை எந்நாளும் உண்டாகாத உபத்திரவங்களையும், உண்டாம்பொழுது மனுஷர் உபாயம் சூழ்ந்து தவிர்ப்பதற்கு அரிய உபத்திரவங்களையும் வியர்த்தமாய் நினைந்து வருந்துவதை நிறுத்திவிடக்கடவோம். நிலம்— நீர் — காற்று முதலிய பூத பௌதிகங்களின் கதியைக் கூட்டக் குறைக்கவும், ராச்சியங்களை ஆக்க அழிக்கவும், கவிழ்க்க நிமிர்த்தவும் நாம் முயலோம். மானிடராகிய நம்மால் ஏதேது சாதிக்கலாகுமென்று சிந்திப்பதே நமது கருமம். எவனெவனும் மிதமாயிருப்பினும் தன் தன் இயல்பின் அளவிற்குப் பிறர் சுகத்தைப் பெருக்கித் தானும் சுகம் பெற வருந்தி உழைப்பது தர்மம் "இயல்வது கரவேல்."

விவாகம் தேவ கற்பனை. இது பிரத்தியக்ஷம். ஸ்திரி புருஷ பிரஜைகள் சிர்ஷ்டிக்கப்பட்டது ஒருவர்க்கு ஒரு

வர் துணையாக; ஆனது கொண்டு விவாகம் சுகம் பெறும் சாதனங்களில் ஒன்று. அல்லவென்று சொல்வது எனக்குச் சம்மதம் அல்ல.

**நிகாயா:**— மனுஷருக்கு உண்டாகும் எண்ணிறந்த துக்க பேதங்களில் மணமும் பலவகைத் துன்பங்களுக்கு வருவழியாயிருக்குமோவென்று என் மனம் ஐயப்படுகின்றது. விவாக நிலைக்கு உரிய வெவ்வேறு துக்கம் துயரையும் கணவனுக்கும் மனைவிக்கும் சடிதியில் தீராப் பிணக்கு உண்டாகும் ஏதுக்களையும், இருவர் குணபேதங்களையும், அபிப்பிராய விரோதத்தையும், ஒருவர் விருப்பத்திற்கு ஒருவர் விருப்பம் பேதிக்கும்பொழுது உண்டாகும் கடு உக்கிர விவாதங்களையும், நெஞ்சறிய நன்றென அவரவர் தழுவிய இருவித சுதணம் ஒன்றுக்கு ஒன்று பொருந்தாப்பக்ஷப் தொடரும் ஆகாத்தியமான விவாதத்தையும் மதித்துப் பார்க்குமிடத்தில், பற்பல தேசங்களில் ஜீவசாக்ஷி வழக்குக் கேட்டுத் தீர்க்கும் மனம் திறம்பா நீதி நூலோர் மொழிவது தகுதியென்று சிலவேளை என் சிற்றறிவிற் படுகின்றது. அவர்கள் மொழி இது:—“விவாகம் செய்ய இஷ்டமுள்ளவர்களுக்கு இடம் உண்டு. விவாகம் உத்தமமென்று வியந்து கொள்ளப்படவில்லை. என்றும் அழியாத விவாக உடன்படிக்கை ஒரு வலைக்குச் சமானம். மோக விகாரத்திற்கு மிதமிஞ்சி இடங் கொடுப்பவரன்றி, மற்றெவரும் அவ்வலையில் சிக்கார்.”

**ராஸிலஸ்:**—விவாக நிலையிலும் விரக்தநிலை சுகம் குன்றியதென நீர் மொழிந்ததை அடிக்குள்ளே மறந்திட்டீர் போலும். இரு நிலைகளும் உதவாதவைகளாயிருந்தாலும் இருக்கும். அவை இரண்டும் தீர உதவாதவைகளாயிருப்பது அசாத்தியம். இப்படி ஒன்றுக்கு ஒன்று

பொருந்தாத தப்பபிப்பிராயம் இரண்டை அனுசரிக்கும் பொழுது அவை ஒன்றை ஒன்று நசிவிக்க, மனதில் தத்துவம் குடிபுகுதற்கு இடமும் உண்டாம்.

நிதாயா:—கேவலம் சவலைப்புத்தியின் பயனாய் விளைந்த ஒன்றை அசத்தியத்தால் விளைந்ததென்று சொல்வீரென நான் எண்ணியிருக்கவில்லை. பற்பல உறுப்புள்ள பருப்பொருள் இரண்டை ஊனக்கண்ணால் கண்டு வழுவற ஒப்பு உயர்வு சொல்வது கஷ்டம்; ஞானக்கண்ணாலும் அவ்வாறே. கண்ணினாலாயினும் கருத்தினாலாயினும் ஒரே நோக்கில் நாம் ஒன்றை அகண்டாகாரமாய்க் காணும்பொழுது, வெளிப்படையில் தோன்றும் விகற்பங்களைத் தடையறக் குறித்து இதற்கு இது நயமெனத் தீர்மானிப்போம். இப்படிச் செய்வது சகஜம். ஆனால், பூர்த்தியாய் அளவிடுதற்கு அரிய பருமமும் பல வுறுப்பமைதியுமுள்ள இருவகை மதங்களைச் சிறிது கண்டு, ஸ்தாளிபுலா பாக நியாயப்படி, ஒருங்கு நிதானிக்கத் தலைப்படும் எனக்கு, அவற்றில் எது எந்த வேளையில் நினைவிலாவது சங்கற்பத்திலாவது அழுந்துமோ அது அந்த வேளையில் நயமுறத் தோன்றும். இதில் அதிசயத்திற்கு இடம் எங்கே? ராஜதர்ம சம்பந்தங்களும் நீதிநூற் சம்பந்தங்களும் பலவாய் விரிந்திருக்கின்றன. அவற்றைக்குறித்து உண்டாகும் விவகாரத்தைச் சாங்கோபாங்கமாய்க் காணமல் அரைக்கூறு காற்கூறாய்க் காணும் இருவர் அபிப்பிராயம் ஒன்றுக்கு ஒன்று பேதிக்கும். அவ்வண்ணம், ஒருவன் அபிப்பிராயமே வேளைக்கு ஒருவிதமாய்த் திரியும். ஆனால், கணித வரையறை முதலிய விவகாரங்களை ஒரே நோக்காக முழுக்கூறாய்க் கிரகிப்பவர்கள் செய்யும் நிர்ணயமோ ஒன்றுக்கு ஒன்று

ஒத்திருக்கும்—வேறுபடாது. அவனவன் செய்யும் நிர்ணயமும் அன்றொன்று இன்றொன்றாய் மாறுபடாது.

ராஸிலஸ்:—நமக்கு உள்ள துன்பமே போதும். விவாகஞ் செய்து வேறு துன்பமும் வருவித்துக்கொள்ளாதிருக்கக்கடவோம்; நியாய சூக்ஷ்மம் எடுத்துக்காட்டி இகலாட எத்தனிப்பதையும் நிறுத்திவிடுவோம். நாம் தேடுவது கிட்டுமாகில் விளையும் இன்பத்திற்கும், நமது கருமம் சிதறிப்போகுமாகில் விளையும் துன்பத்திற்கும் இருவரும் சம பங்காளிகளாவோமே. ஆகவே, நாம் ‘உடுக்கை இழந்தவன் கைபோல்’ ஒருவர்க்கு ஒருவர் உதவுவது தர்மம். விவாகத்தால் விளையும் துன்பத்தை நினைந்து, விவாக ஏற்பாடு அயுக்தமென்று பதறி அறுதியிடப் பார்க்கிறீரே. இந்த நியாயத்தைச்சார்ந்து சொல்லில், இகத்தில் ஜீவன் இடர் அடைவதனால் அது ஈஸ்வரசத்தமல்லவென்று அறுதியிட நேரிடாதா? விவாகமூலமாகவோ அல்லவோ எவ்விதமும் இவ்வுலகத்தில் மனுஷர் பெருகவேண்டும்.

நேகா:—உலகத்தில் மனுஷர் பெருகுவது எவ்வாறெனத் தீர்ப்பது என் காரியமுமல்ல, உமது காரியமுமல்ல. இப்பொழுது உள்ள தலைமுறையார்க்குச் சந்ததி இல்லாதொழிந்துபோகுமென்று ஐயுற ஏது ஒன்றும் காணேன். நாம் இப்பொழுது விஷய விசாரணைசெய்வது உலகத்திற்கல்ல, நமக்கு.



# 29-ம் அதிகாரம்.

## விவாக விவாதம் (தொடர்ச்சி).

ராஸிலஸ்:—பல கூறு சேர்ந்து ஒரு மொத்தம் ஆகிறது. மொத்தத்தால் விளையும் நற்பயனும் அதன் கூறு அனைத்தால் விளையும் நற்பயனும் ஒன்றே. விவாகம் உலகத்திற்கெல்லாம் உத்தமமானால், ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொருத்திக்கும் உத்தமமென்பது வெளிப்படை. அல்லவென்று மறுத்துரைக்கில், நிரந்தரமும் ஆவசியமுமான தர்மம் துன்பத்திற்கு மூலமாயிருக்கவேண்டும். அன்றியும், பலர் சுகித்து வாழும்படி சிலரைப் பலிகொடுப்பது இன்றியமையாதென்று ஏற்படுமே. நீர் செய்த இருநிலைமதிப்பில், விரக்தநிலைக்குப் பெரும்பாலும் இன்னல் உண்டாவது நிசம், இல்லாமல் தீராது. விவாகநிலைக்கோ அது இயற்கை அல்ல, வந்தேறியாய் வருவது; அதைத் தவிர்க்க உபாயம் உண்டு எனத் தோன்றுகிறது. விவசார விவேகமும் பரோபகார குணமும் இருந்தால், விவாகநிலை சுகசாதனமாகுமென்று தடையற நம்புகிறேன். பெரும்பாலும் இந்நிலை துக்கத்திற்கு வருவழியென்று மனுஷர் முறையிடுவதற்கு நிமித்தம் மௌட்டியம். அனுபவம் முதிரா இளவயசில், ஆசை எனும் நெருப்புப் பற்றி எரியும்பொழுது, பகுத்தறிவின்றி, பூர்வதிஷ்டியின்றி, மனப்பொருத்தம், குணசாரூபம், நேர்கோல்போல நிற்கும் நிதானம், சித்தசுத்தி இவைகளை ஆய்ந்து அறியாமல் ஒருத்தியை வாழ்க்கைத் துணைவியாகத் தெரிந்துகொள்வோர்க்கு விசுவாசபங்கமும் பச்சாத்தாபமுமன்றி மற்றென்ன பயன் உண்டு?

சாதாரண விவாகமுறை ஏது: ஆகஸ்மீகமாயேனும் சூதாயேனும் ஓரிடத்தில் சந்திக்கும் வாலிபராகிய ஸ்திரி புருஷர்கள் ஒருவர்க்கு ஒருவர் கண்ணம்பு எய்து, பரஸ்பரம் உபசாரம் செய்து, அவரவர் வீட்டில் போய்ச்சேர்ந்து ஏகாந்தமாயிருக்கும்பொழுது, ஒருவரை ஒருவர் கனவிற் காண்பார்கள். வேறு பராக்கு நினைவு அற்று இராப்பகல் இருபோதும் அதே சிந்தையாயிருப்பதனால், பிரிந்திருக்கும்பொழுது அவர்கள் மனம் துன்பப்படும்; ஆனது பற்றி, இருவரும் கூடிவாழ்ந்தால் சுகம் உண்டென்று அறுதியிட்டு மணமுடிப்பார்கள். இம்மங்கல மணத்திற்குமுந்தி அவர்கள் கண் திறந்து பாராதுவிட்ட குணவஷ்டைகள் எல்லாம் பின்னிட்டுத் தெளியத் தோன்றும்; தோன்றத் தோன்ற நாயும் பூனையும்போல் அவர்களுக்குத் தீரா வாக்குவாதம் உண்டாகி வாழ்நாள் குன்றும். கண்கெட்ட தெய்வம் இப்படித் தம்மைச் சேர்த்துவைத்து வருத்துகின்றதேயென்று அவர்கள் தெய்வத்தை நோவார்கள்.

அன்றியும், பருவத்திற்கு முந்தி மணம் முடிவதனால், பெற்றோர்க்கும் பிள்ளைகளுக்கும் எதிரிடை உண்டாகின்றது. தந்தை மனம் கசந்து உலகப்பற்றைக் கைவிடுமுன் மைந்தன் அதைக் கைக்கொள்ளப் பதைப்பான். ஏககாலத்தில் சஞ்சரிக்க இருதலைமுறைகளுக்கு இங்கு இடம் இல்லையே. தாய்க்குப் பருவம் தளருமுன் மகள் ருதுவாகுவாள். பின்பு மகளைவிட்டுத் தாயும் தாயை விட்டு மகளும் பிரிந்துபோக இருவருக்கும் தீரா வாஞ்சை உண்டாம்.

இறக்குந்தனையும் கைவிடாதிருக்கும் வாழ்க்கைத்துணைவியைப் பதைப்பற நாட்செல்லச் சீர்தூக்கிப்பார்த்

துக் கைக்கொள்வோர்க்கு இந்தத் துன்பம் ஒன்றும் வர வேவராது. வாலிபர்க்கு ஒன்று மாறி ஒன்ருகப் பல வகை இன்பமும் உல்லாசமும் உண்டு. அதனுல் அந்தப் பருவத்தில் வாழ்க்கைத்துணையின்றி ஆயாசம் தவிர்த்துச் சுகிக்கும் உபாயங்களுக்குக் குறை இல்லை காலம் ஏற ஏற அனுபவம் முதிரும்; காட்சி அகல அகல, மனதிற்கு இனிய பத்தினியைத் தேடி விசாரித்துத் தெரிவிடத்தகும் உசித சமயம் அடிக்கடி கிட்டும். மற்றெவ்வகைப் பயன் இல்லாதொழியினும் ஒரு பயன் விளைவது நிசம்: புத்திரர் புத்திரிகளை விடத் தாய் தந்தையர் பருவம் முதிர்ந்தவர்களாய்த் தோன்றுவார்கள்.

**நீகோயா:**—அறிவிற்கு அகோசரமாகவும் அனுபவித்து அறியாமலுமிருக்கும் அந்தரங்கத்தைக் கேள்விமூலமாய் மாத்திரம் அறியலாம். பருவம் ஏறியபின் மணமுடித்தவர்களுக்கு விசேஷ சுகம் இல்லையென்று அறிந்தோர் சொல்லக் கேள்வி. இவ்விவகாரம் பரமார்த்தம். இதைத் தீர்க்க வகை தேடாது நிர்விசாரமாயிருக்கலாகாது. மொழிவதற மொழிந்து பலகலை கற்றுத் தெளிந்த நிபுணரென்று உலகம் மதித்துக் கொண்டாடும் பெரியோர் சிலருக்கு இவ்விவகாரத்தைப் பலகால் சொல்லி அபிப்பிராயம் கேட்டேன். ஸ்திரி புருஷருக்குத் திடமதியும் ஸ்திரசாதகமும் அவரவர் உறவும் தொழில் வரையறையும் மனதிற்கு ஏற்ற தியாஞனுபோகமும் ஏற்பட்டபின் அவர்கள் கூடி வாழ்வது துன்பத்திற்கு ஏது என்று மேற்படி பெரியோரில் பெரும்பாலார் வழக்கறுத்தார்கள்.

அவரவர்க்கு நேர்ந்தபடி பூலோகப் பிரயாணம் செய்யும் இருவர் ஒரே வழி பிடித்துச் செல்வது சாத்தியமல்ல. மேலும் நாளடைவில் நடந்து வழக்கப்பட்டு உவப்புற்றி

ருக்கும் மார்க்கத்தை விட்டு விலகப் பெரும்பாலும் அவனும் உடன்படான், இவளும் உடன்படாள். சஞ்சல புத்தியும் அடித்த காற்றில் பதரெனப் பறக்கும் இயற்கையுமுள்ள வாலிபப்பருவம் கடந்து ஆசாரக்கிரமம் ஏற்பட்டதன்மேல், அவரவர் நின்ற நிலையிற் பிரிவது தீங்கையென்று சிலருக்கு அபிமானம் உண்டாம்; சிலர் தமது நிலையே தகுதியென்று ஒட்டாரம் கட்டி உவப்போடு வாதாடுவார்கள். ஒருவரை ஒருவர் மதித்து நடக்கும் இருவருக்கு ஒருவர்க்கு ஒருவர் இகம்பண்ணும் ஆசை உண்டாம். உண்டாமாயினும், காலக்கிரமத்தில் மனுஷருக்குத் தலைக்கொரு விதச்சாயல் அமையுமாபோல, குணமும் குறிகளும் வெவ்வேறு வழிப்பட்டு வரையா வண்ணம் உருக்கொள்ளும். நாட்சென்ற வழக்கத்தை விட்டுவிடுவது எளிதல்ல. காகம் அன்ன நடை நடக்கப் போய்த் தன் நடையும் கெட்டது. ஒருவன் தன் நடையை விட்டு நூதன நடை நடப்பது பெரும்பாலும் அசாத்தியம்; ஆகக்கொள்ள, ஒருவன் பிறர் நடையை எவ்வாறு மாற்றமாட்டுவான்?

**ராஸிலஸ்:**—மனுஷர் தம் மனைவியரை என்ன காரணத்தைச்சார்ந்து தெரிந்துகொள்ள வேண்டும் என்பதைச் சிந்திக்கிறதில்லை, அல்லது மறந்துவிடுகிறார்களென்று நீர் எண்ணமிட்டிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. நான் பெண் கொள்ள நாடும்பொழுது அறிவு காட்டும் வழியில் செல்ல விரும்புகிறாயா என்று அவளை முதல் முதல் கேட்பேன்.

**நிகாயா:**—பண்டிதர்கள் ஏமாறுவது இப்படித்தான். விவேகத்தால் தீர்க்க முடியாத சாமானிய வழக்குகள் நாலல்ல, பத்தல்ல, ஆயிரம் பதினாயிரம் உண்டு. அவை

களை ஆய்ந்து அறிவது அரிது. அவைகளைக்குறித்துக் கல்வி பேசத் தொடங்கில், கேட்பவர் நகைப்பார் 'அறப்படித்தவர் அங்காடி போனல், கொள்ளவுமாட்டார் விற்கவுமாட்டார் எனப் பழமொழி வழங்குகின்றதே. சில விவகாரங்கள் தீர்வது சொல்லும் சொல்லாலல்ல, செய்யும் செய்கையால். மனுஷருடைய ஸ்திதியை நினைவில் இருத்திக்கொண்டு, பெரியோரானலும் சரி, சிறியோரானலும் சரி, எச்சமயத்திலேனும் தாம் செய்யும் செயலுக்கு நிமித்தம் இன்னின்னதென்று வரையறை கண்டு செய்வாரும் உண்டோ எனத் தேர்ந்துபாரும். நித்தமும் காலையில் எழுந்தவுடன் அன்று தங்குடும்பத்தில் செய்யும் செயல் சிறிது பெரிது அனைத்திற்கும் காரணகாரியத்தொடர் அறுது அமைக்கப் பாத்தியப்படும் ஸ்திரி புருஷருக்கு இதைக்காட்டிலும் கேடு கெட்ட தொல்லை வேறு இல்லை.

பருவம் பின்னிட்டு மணம்செய்வோர் தம் சொத்தைச் சுதந்தரத்தைப் பிள்ளைகள் அபகரிக்கக் கண்டு வருந்தும் உபாதிக்குத் தப்பிக்கொள்வார்போலும். இது பெறத்தகும் பயன்தான். ஆனலும், அவர்கள் விரைவில் இறந்துபோக, அகதிகளும் அறிவிலிகளுமாகிய அவர்கள் பிள்ளைகளைச் சம்ரக்ஷகர்த்தாக்களாய் ஏற்படுவோர் வாழவைத்தாலும் வைப்பார்கள், தாழவைத்தாலும் வைப்பார்கள். பெற்றூர் பருவம் அறமுதிருமளவும் இருக்கவரினும், தாம் உயிர்க்கு உயிராக நேசிக்கும் பிள்ளைகள் கல்வியில் தெளிந்தும் பெருமையில் சிறந்தும் பிரதபித்திருப்பதைக் கண்டு களிகூர இடம்பெறுமுன் இறந்துபோவார்கள். அதனல், மேற்சொல்லிய பேறு பெற்றும் பிரதிஷ்டை ஒன்றும் இல்லை.

பிள்ளைகளால் தமக்குத் துன்பம் உண்டாமென்று அவர்கள் அஞ்ச நிமித்தமும் இல்லை, இன்பம் உண்டாமென்று ஆசையோடு எதிர்பார்த்திருக்க இடமும் இல்லை. பால்ய நேசத்தால் விளையும் ஆனந்தத்தையும், திருப்பத் திரும்பும் குணம் குறிகளும் நூதன அபிப்பிராயம் எளிதில் பதியும் இளமனமுமுடையோராயிருக்கும் பருவத்தில் இருவர் கூடிவாழும் சுகத்தையும் அவர்கள் இழந்துபோவார்கள். இந்த நஷ்டத்திற்கு ஈடு அவர்களுக்குச் சுத்தமாயில்லை. மென்பொருள் இரண்டின் புறம் அடுத்து உரிஞ உரிஞ ஒப்புறவதுபோல, பாலியமக்கள் இருவர் கூடி வாழ வாழ, அவர்க்குள்ள குணம் வேற்றுமை ஒழிந்து ஒப்புறும்.

பருவத்திற்குப் பிந்தி விவாகம் செய்வோர்க்கு மக்கட்பிரீதியும், பாலியத்தில் மணம் செய்வோர்க்கு மனையாள் அன்பும் தலைப்படுமென்று எண்ணுகிறேன்.

**ராஸிலஸ்:**—இவ்விரு நட்பும் ஒருமிக்கத் திரண்டால், இச்சிக்கத்தகும் பேறு அனைத்தும் உண்டாம். பருவம் அறிந்து மணமுடித்தால் இந்த நட்பு இரண்டும் விர்த்தியாகும்போலும். மணப்பருவம் தந்தைக்கு நிந்தை உண்டாக்கும் பாலியத்திற்குப் பிந்தியும், ஆண்மை குன்றும் முதிர்பருவத்திற்கு முந்தியும் வருவதே.

**நிகாயா:**—'வலதுகை இடதுகை இரண்டிலும் தெய்வம் வரம் தரும்' என இம்லாக் மொழிந்த பக்ஷத்தில் எனக்குள்ள அபிமானம் வர வர உறுதிப்படுகின்றது. ஆசைக்கு இதம் காட்டி அகப்பற்றைக் கருஷிக்கும் பதவிகள் விந்தையாய் அமைந்திருக்கின்றன. நமக்கு ஒன்று கிட்ட, ஒன்று எட்டுவது அவைகளின் இயற்கை. ஒன்றுக்கு

ஒன்று ஒவ்வா நல்வரம் இரண்டு ஒருவர்க்கும் அமைவதில்லை. அறிவு வரம்பைத் தாண்டி இரண்டையும் தொடர்வோமாஞல், இரண்டுக்கும் மத்தியில் சேர்ந்தாலும் சேரலாம்: ஆனல் நமது கைக்கு அதுவும் எட்டாது, இதுவும் எட்டாது. இது பெரும்பாலும் நீள நினைந்து பார்ப்பவர்க்கு உண்டாம் அவகதி. மனுஷர் சக்திக்கு அமையும் அளவிற்கு அதிகம் சாதிக்க எத்தனிப்பவன் ஒன்றையும் சாதிக்கமாட்டான். ஒன்றுக்கு ஒன்று ஒவ்வாத இருவித இன்பத்தைப் பெற நினைந்து ஏமாருதிரும். கண்ணெதிரில் காட்டிய வரப்பிரசாதங்களில் ஒன்றைத் தெரிந்துகொண்டு அவ்வளவில் ரமித்திரும். வசந்தகாலத்தில் மலரும் புஷ்பத்தின் வாசனையை நுகருமவன் அப்பொழுதே கனிகாலத்தில் பழுக்கும் பழத்தின் மதுரத்தை ருசிபார்த்து அறியமாட்டானே. ஆற்றின் ஊற்றிலும் முகத்திலும் ஏககாலத்தில் கிண்ணம் நிறையத் தெண்ணீர் மொள்ளத்தக்க அற்புத புருஷர் இல்லையே.



## 30-ம் அதிகாரம்.



### இம்லாக் அவர்கள் சமுகம் சேரவும், வேறு சம்பாஷணை தொடங்கியது.

அப்பால் இம்லாக் அவர்கள் சமுகத்தில் சேர, அவ்வளவில் சம்பாஷணை நிறுத்தப்பட்டது.

ராஸிலஸ்:—சொல்லக் கேளும் இம்லாக், சாமாணியர் குடிவாழ்க்கை நிர்ப்பந்த வரலாறுகளைத் தொட்டு ராஜ

கண்டு கெட்டழிந்துபோனவைகளின் தன்மையை நாம் ஒருவாறு உத்தேசிக்கலாமே.

**ராஸிலஸ்:**— கற்கட்டடங்களையும் மட்கொத்தளங்களையும் பார்த்து மதிக்க எனக்கு விசேஷ நாட்டம் இல்லை. மனுஷர் இயற்கையைத் தேர்வதே எனது கருமம். நான் இங்கு வந்தது இடிந்து தகர்ந்துபோன தேவாலயங்களைப் பூராயமாய்ப் பார்க்கவும், தூர்ந்துபோன சாலகத்தைத் தூர்வாரித் தொடர்ச்சியாய்க் காணவுமல்ல, இப்பொழுது உலகத்தில் நடக்கிற பல வகை வியாபாரங்களைப் பார்க்கவே.

**நிகாயா:**—இப்பொழுது நமது கண்ணெதிரில் உள்ளவைகளை அவதானமாய்ப் பார்க்கத் தகும். பூர்வகாலத்து வீரசூரர், கட்டட முதலிய ஞாபக சின்னங்கள் இவைகளால் நமக்கு என்ன பயன் உண்டு? போன காலம் இனித் திரும்பிவாராது; அவ்வீரசூரர் குடிவாழ்க்கை முறை தற்காலத்து மனுஷர் இயற்கைக்கு ஏற்காது.

**இம்லாக்:**—ஒரு பொருள் இத்தன்மையதென்று அறியவேண்டில் அதனால் விளைவது எதென்று அறியவேண்டும். மனுஷர் இயற்கையைக் காணவேண்டில், அவர்கள் கிரியைகளைக் காணவேண்டும்; கண்டால், மனுஷருக்கு விவேகம் கற்பிப்பது எதென்றும், வீரமுதலிய நவரசம் மனுஷனைத் தூண்டிவிடுவது எதற்கென்றும் அறிந்து, செய்யும் தொழிலுக்கு மிகு பலமான நிமித்தங்கள் எவையென்று காண்போம். தற்கால இயற்கையைத் தவறாது நிதானிக்கவேண்டில், அதற்கும் முற்காலத்திற்கும் தரம் பார்க்கவேண்டும். பகுத்தறிவது என்றால் இருபொருளை இணையிட்டு ஒப்பு உயர்வு காண்பதுதானே. பிற

தித்திருப்பது அரசர்க்கு முக்கியமானதேல், நயத்திற்கும் நாகரிகத்திற்கும் இன்றியமையாத கலைகளில் அவர்கள் பயிலாது விடலாகாது. பின் ஆளும் அரசர் பருவத்தில் அறிவைப் பண்படுத்தி விர்த்திசெய்வது கடன்.

சொல்லிக் காட்டுவதினும் செய்து காட்டுவதனுல் எப்பொழுதும் அதிக சித்தி உண்டாம். யுத்தம் செய்து செய்து தெளிந்தவன் ரணவீரனுவான். சித்திரகனுவோன் பிரதிமைகளைப் பார்த்து எழுதி எழுதிக் கை பழகவேண்டும். இதில் நியாயவிலக்கை சாதிப்பதே மேல். மகத்தான செய்கைகளைக் காண்பது அரிது. ஆனலும், கலைக்கியானத்தால் சாதிக்கப்பட்டவைகள் எதேதென்று அறிய ஆசைப்படுவோர்க்குக் கலைவல்லோர் செய்தவைகள் எப்பொழுதும் கிட்ட இருக்கின்றன.

அருந்தொழிலால் அமைந்த பொருள் யாதாயினும் ஒன்று கண்ணிலாவது கருத்திலாவது தட்டுப்பட்டால், அப்புறம் பிரவர்த்தியுள்ள மனமானது அப்பொருள் உரு அமைந்த சாதனம் எது என்று விசாரிக்கத் தொடங்கும். இந்த விசாரணைதான் போதகசாதனையின் மெய்ப்பயனுக்கு ஆரம்பம். நோக்கே, நூதன கருத்துப்பொருள் பெருகி அறிவு அகலும். மனுஷர் கைகடந்துபோன எதாயினும் ஒரு கலை மீளவும் நமது வசப்படவுங்கூடும். நம் தேசத்தார் அரைகுறையாய் அறிந்த விஷயம் எதாயினும் ஒன்றை நாட் சீரத் தெளிய விசாரித்து அறிந்தாலும் அறிவோம். எவ்விதத்திலும் இம்முயற்சி முழுதும் வியர்த்தமாய்ப்போகாது. நமது காலத்திற்கும் முன்னோர் காலத்திற்கும் தாரம்பார்த்து, இப்பொழுதே திருத்தம் அதிகமென்று கண்டால், நமக்கு உல்லாசம் உண்டாம். குறைபாடு மிகுதியென்று காணில், பின்னும் உத்தமந்

யின் அடிக்கும்படி ஒட்டகங்களில் கூடாரம் ஏற்றி அனுப்பினார்கள். அவர்கள் விரைந்து போகவில்லை—தாமதிகதியாய்ப் பிரயாணம் செய்தார்கள். வழிக்கு அயலில் எண்ணத்தக்க பொருள் எதையும் காணும்பொழுது எட்டிப்போய்ப் பார்ப்பார்கள்; அங்கங்கே தங்கி எதிரிடும் குடிகளோடு சம்பாஷிப்பார்கள். குடி இல்லாதொழிந்த பாழ்ங்கிராமங்கள், மனுஷர் குடியேறி வாழும் செழுங்கிராமங்கள், பயிர் விளை நிலம், பாட்டு நிலம், காடு கரம்பு அனைத்தையும் கண்டு கவனித்துப் போனார்கள்.

செய்குன்றங்களிற் பெரிது கிட்டியபொழுது, அதன் அடிப்பரப்பையும் சிகரத்தின் உயரத்தையும் பார்க்கப் பார்க்க அவர்களுக்குப் பிரமை உண்டாயிற்று. உலகம் உள்ளளவும் நிலைநிற்கும்படி எகிப்தியர் அந்தக் கட்டடத்தை அடி அகன்று உயர உயர அகலம் குறுகி மூலை கூராயிருக்கத்தக்கதாகச் சமைத்தது இன்னின்ன சிற்ப வித்தியா தத்துவங்களைக்கொண்டு என்று இம்லாக் அவர்களுக்குத் தெளிய மொழிந்தான். ஜலப்பிரளயம்—தீப்பிரளயம்—சண்டமாருதம் முதலிய பூதாதிக்கத்தால் உண்டாகும் ஆபத்திற்கும், பூகம்பம் எனும் கொடிய உற்பாதத்திற்கும் தப்பி இக்கட்டடம் உரங்கொண்டு உறுதியாய் நிற்பது மேற்சொல்லியவாறு அதன் உரு அமைந்ததனாலேதான் என்று அவர்களுக்குத் தெரிவித்தான். எதாயினும் பிரசண்டவேகமாய்த் தாக்கி அச்செய்குன்றத்தைத் தகர அடிக்கச் சம்பவித்தால், அவ்வதிர்ச்சியால் தேசமுழுதும் அழிந்தேபோய்விடும்.

அவர்கள் அதன் நீளம்—அகலம்—கனம்—உயரம் யாவும் அளவிட்டார்கள். அன்று குன்றடியிற் கூடாரம் அடித்து

இருந்து, மற்றை நாள் அக்குன்றினுள்ளே வகுத்திருந்த மாடகூடங்களைப் புகுந்து பார்க்க எத்தனித்து, வழிகாட்டிகளைக் கூலிக்கு அமர்த்திக்கொண்டு முதற் படிக்கட்டு ஏறினார்கள். ஏறும்பொழுது, ராஜகுமாரிக்குப் பிராண பதமாயிருந்த பாங்கி குகை வழியை எட்டிப்பார்த்து உள்ளம் கலங்கி முன் வைத்த அடியைப் பின் வைத்து நடுநடுங்கி நின்றாள். அதுகண்டு ராஜகுமாரத்தி திரும்பி, "பெக்வா, என்னத்தைக் கண்டு உனக்கு ஏக்கம் பிடித்தது?" எனக் கேட்க, அவள், "ஒடுங்கிய வாசலையும் கோர அந்தகாரத்தையும் கண்டு பயப்படுகிறேன். அடக்கமில்லாத அசரீரிகள் இதில் வசித்திருக்கவேண்டும். இது சத்தியம். இவ்விடத்தில் பிரவேசிக்க என் மனம் துணியவில்லை. இந்தக் கோரமான குகைகளில் ஆதியில் குடிகொண்டவர்கள் நமக்கு எதிர்ப்பட்டுச் சதாகாலமும் நம்மை இங்கு அடைத்துவைத்தாலும் வைப்பார்களே" எனக் கேட்ட கேள்விக்கு உத்தரம் சொன்னாள். சொல்லிச் சோர்ந்து தலைவி கழுத்தைக் கட்டிக்கொண்டு அவள் ஆதரவில் நின்றாள்.

**ராஸிலஸ்:**—நீர் ஏதாயினும் காற்றுக்கறுப்பிற்கு அஞ்சுவதுண்டானால், உமக்கு ஒருபொழுதும் விக்கினம் இல்லையென்று உறுதிமொழி சொல்லுகிறேன். இறந்தோரால் எந்நாளும் அபாயம் இல்லை. பிரேதமாய் க்ஷேமிக்கப்பட்டவன் அப்புறம் உயிர்த்தெழுந்து நமது கண்ணுக்குத் தோன்றுவதில்லை.

**இம்லாக்:** — எந்தெந்தத் தேசத்தாரும் எந்தெந்தக் காலத்தாரும் பேதமற மனம் வாக்கு ஒத்துப்பகரும் சாக்ஷியம் அங்கையில் நெல்லிக்கனிபோலத் தெள்ளத் தெளியத் தோன்ற, இறந்த மனுஷரை எப்பொழுதும் காண்ப

தில்லையென்று தாங்கள் சொல்வது எனக்குச் சமாதான மல்ல. கல்லாத புல்லரானாலும் சரி, கற்றுயர்ந்தோரா னாலும் சரி, இறந்தோர் ஆவியைக் காண்பது உண் டென்று எல்லாரும் பேசுவார்கள் — எல்லாரும் நம்பு வார்கள். இதைப் பேசாதவர்கள் நம்பாதவர்கள் எங்கும் இல்லை. மனுஷர் சஞ்சரிக்கும் தேசந்தோறும் இந்த நம் பிக்கை உண்டு. சுத்தமாய் இல்லாத ஒன்று எங்கும் சகஜமாயிராது. இது உள்ளதென்பதற்குச் சாக்ஷிப்பிரமா ணம் இதே. ஒருபொழுதும் ஒருவர்க்கு ஒருவர் சொல் லக் கேளாதவர்கள், பிரத்தியக்ஷமாய்க் கண்டொழிய நம்பொணாத இந்தக் கதையைக் கட்டிவிசேஷமாய்ச் சொல்ல மனம் ஒத்துவரார்கள். குதர்க்கிகள் ஒருவர் இருவர்க்குச் சந்தேகம் பிறப்பதுபற்றி, இந்தச் சாதாரண பிரமாணியத்தின் பலம் எவ்வளவும் குன்றாது. இதை இல்லதென்று நாவினால் மறுத்துரைக்கும் சிலர் உள்ள தென்று அச்சத்தால் வெளியிடுவார்.

ஆனாலும், இப்பொழுதே திகில் பிடித்திருக்கும் பெக் வாவிற்குப் பின்னும் திகிலைப் பெருக்குவது எனது அபிப்பிராயம் அல்ல. விசேஷமாய் இச்செய்குன்றத்தி லேயே மாயாரூபிகள் குடிகொள்ளுமென்றும், நிர்த்தோ ஷிகளையும் சித்தசுத்தி யுள்ளவர்களையும் வருத்தும் மன மும் வலியும் அவைகளுக்கு உண்டென்றும் நினைக்க நிமித்தம் இல்லை. நாம் இங்கே வந்ததனால் அவைகளு டைய சுதந்தரத்திற்குப் பங்கம் ஒன்றும் இல்லையே. அவைகள் சொத்து ஒன்றையும் நாம் அபகரித்துக்கொள் வதில்லை — பின்னை நம்மால் அவைகளுக்கு அபசாரம் உண்டாவது எப்படி?

**நிசபா**:—என் உயிர்க்கு உயிரான பெக்வா, இனி எப்பொழுதும் உன்னை கைவிட்டு நான் முன்னும் இம்லாக் பின்னும் உனக்கு வழித்துணைவராகச் செல்வோம். நீ அபிஸினிய சக்கரவர்த்தி புத்திரிக்குப் பாங்கி—இதை உன் நினைவில் இருத்திக்கொள்.

**பெக்வா**:—அடியாள் இறப்பது ராஜபெருமாட்டி பலர்களுக்குச் சித்தமானாலும், இந்தப் பயங்கரமான குகையில் அடைத்தார் சொல்வதை விட்டு, அச்சமற்று இறக்கும்படி வற்புறுத்தாலினும் உபாயம் சித்தம் இரங்கிச் செய்யப் பிரார்த்திக்கிறேன். தங்கள் சொல்லைக் கடக்கும் துணிவு எனக்கு இல்லையே. தொடர்ந்துவரச் சொன்னால், தடையின்றி வருகிறேன்; வராது விட விதி இல்லையே. குகைக்குட் சென்றால், அப்பால் எனக்கு மீட்சி இல்லை.

அச்சாதிக்கத்தால் வருந்திய பெக்வாவிற்கு அச்சம் தெளிய நியாயம் எடுத்துச் சொல்வதும், கடிந்துரைப்பதும் விபரீதமென்று கண்டு, ராஜகுமாரி அவளை அணைத்து, நாங்கள் செய்குன்றம் பார்த்துத் திரும்பிவருந்தனையும் கூடாரத்தில் இருக்கக் கற்பித்தாள். பெக்வாவிற்கு அதுவும் திருப்தியாயிருக்கவில்லை. செய்குன்றத்தின் ஒடுக்கிடங்களில் நுழைந்தால், எதும் தீரா அவதி வரினும் வருமென்று, இந்த விபரீத நினைவை விட்டுவிடும்படி ராஜப்பிராட்டியை வேண்டிக்கொண்டாள்.

**நிசபா**:—தீரம் இல்லாதவர்களுக்குத் தீரம் பயிற்றும் திறம் எனக்கு இல்லை. இல்லாதிருந்தும், அச்சம் பயில்வது எனக்கு ஆகவே ஆகாது; இங்கே செய்ய நினைத்து வந்த கருமத்தை செய்யாது விட்டுத் திரும்பவும் ஒண்ணாது.



# 32-ம் அதிகாரம்.

## அவர்கள் செய்குன்றத்தினுள் பிரவேசித்தது.

பெக்வா கூடாரத்திற்கு இறங்கிப்போக, மற்றவர்கள் செய்குன்றத்தினுள்ளே பிரவேசித்தார்கள். அவர்கள் மச்சுமார்க்கத்தின் வழியாய்ச் சென்று, வெண்கற்குகைகளைப் பார்த்து, செய்குன்ற ஸ்தாபகனுடைய உடல் ஒரு பெட்டியில் சேமித்திருக்கிறதென்று சொல்லக்கேட்டதனால், அந்தப் பெட்டியைக் கண்டு கருத்தாய்ப் பரீக்ஷித்தார்கள். அப்பால் சற்று இளைப்பாறித் திரும்பும்படி விஸ்தார கூடம் ஒன்றில் உட்காந்தார்கள்: உட்காந்திருக்கையில், இம்லாக் மொழிந்ததை இதன் அடியிற் காண்க.

இம்லாக்:—நாம் இப்பொழுது மனம் குளிரக் கண்ட இந்தக் குன்றத்திலும் பெரிய கட்டடம் சீனதேசத்தைச் சூழும் மதில் ஒன்றுதவிர, வேறு இல்லையாக்கும்.

அந்த மதிலைப் பிரமாண்டமாய் எழுப்பிய முகாந்தரம் இன்னதென்று எளிதில் குறிக்கலாகும். சீனர் செல்வப் பொழிவும் கோழைமனமுமுள்ளவர்கள். சீனாவிற்கு அயலில் உள்ள தேசத்தாரோ கல்லாத புல்லர்; கைத்தொழில் வித்தியாசாமர்த்தியம் கட்டோடே இல்லாதவர்கள். இந்தக் குறை அவர்களுக்குப் பாரமாகத் தோன்றாது. எக்குறையும் தீர எளிதில் பொருட் சூறையாடி நாள் கழிக்கும் சாமர்த்தியம் அவர்களுக்கு மெத்தவும் உண்டு. அவர்கள் அப்போதைக்கப்போது திரளாய்ச் கூடிச்

சமைத்தவன் அந்தப் பிரயோஜனம் அடைந்தபின், பெருமைக்காகப் பின்னும் கட்டடமுயற்சி தொடங்குவான். அந்தக் கட்டடத்தை விரைவில் முடித்தால் வேறு ஆசை பிறக்குமென்று எண்ணி அதைத் தடுக்கும்படி, தொடங்கிய வேலையை மனுஷர் கைத்திறத்தால் ஆகும் விசித்திரம் அனைத்தும் அமையும்படி வரையறையின்றிப் பெருக்கிக் கொண்டுவருவான்.

இம்மகத்தான கட்டடம் மனுஷருக்கு உரிய போகங்களின் குறையைக் குறிப்பிக்கும் ஞாபக சின்னமென்று எண்ணுகிறேன். மட்டற்ற அதிகாரமும், உள்ள குறை இல்லாத குறை எல்லாம் தீர்ந்து பின்னும் மிராளாகச் சேர்ந்திருக்கும் திரவியமுமுள்ள அதிபதி ராஜாதிகாரம் செலுத்தி மனம் சலித்து, இன்பம் தெவிட்டும்பொழுது இந்தச் சலிப்பையும் தெவிட்டையும் மறக்கும்படி செய்குன்றம் கட்டத் தொடங்குவான். பருவம் முதிர முதிர அவனுக்கு ஒரு நாள் ஒரு யுகம்போல நீடித்து, அலுப்பு உண்டாம். ஆயிரம் பதினாயிரம் பெயர் கல்லின்மேற் கல் எடுத்துவைத்துச் செய்குன்றம் கட்டுவதைப் பார்ப்பது அலுப்புற்ற அரசனுக்குப் பொழுதுபோக்காயிருக்கும். கட்டடம் சமைத்துப் பயன் ஒன்றும் இல்லை. மத்தியம ஸ்திதியில் மனக்குறைகொண்டு, ராஜமகத்துவமே சுகத்திற்கு ஸ்தானமென்று வியர்த்தமாய் நினைந்து, அதிகாரமும் ஐசுவரியமும் இருந்தால் அன்றன்று உண்டாம் ஆசை அன்றன்று தீருமென்று கருதிக் காண்பவர்களே, நீங்கள் யாவரானாலும் சரி, இந்தச் செய்குன்றங்களைச் சிந்தனையோடு பார்த்து உங்கள் மடமையை அறிக்கை செய்யுங்கள்.



# 33-ம் அதிகாரம்.

## ராஜகுமாரிக்கு அகஸ்மாத் ஆபத்து வந்துற்றது.

உட்காந்தவர்கள் எழுந்து முன் போன ஒடுக்கவழியே திரும்பினார்கள். இருள் அடைந்த சுற்றுவழி—வெகு திரவிய விரயம் செய்து சமைக்கப்பட்டிருந்த அறைகள்—வழியில் கண்ட பல விகற்பக் காட்சிகளால் மனதிற் பிறந்த நினைவு இவை அனைத்தையும் ராஜபுதல்வி தன் பாங்கிக்கு அடுக்காய்த் தொடுத்துச் சொல்லச் சிந்தித்துச் சித்தமாயிருந்தாள். பரிவாரம் இறங்கிய கூடாரத்தண்டை போய்ச் சேர்ந்தபொழுது, அங்குள்ளோர் எல்லோரும் பேச்சுமூச்சற்று மனம் குன்றியிருந்தார்கள். ஆடவர் முகத்தில் அச்சமும் நாணமும் தோன்றின; மாதர் மனத் துயர் தாங்க வசமற்று அவரவர் கூடாரங்களில் இருந்து புலம்பினர்.

ராஸிலஸ் முதலானவர்கள் நேர்ந்த விபத்து இன்னதென்று நினைத்துப்பார்க்கப் பொறுக்கவில்லை. மனம் பதைத்து நடந்தது என்னவென்று கேட்டார்கள். பரிஜனங்களில் ஒருவன் "நீங்கள் செய்குன்றத்தினுள்ளே புகுந்தது புகாமுன் அராபியர் சேனை பெயர் எங்கள்மேல் வந்து விழுந்தார்கள்—அவர்களோடு எதிர்க்கவும் எங்களுக்கு ஆள் அணி போதாது. ஓடித் தப்பவும் கால் விரைவு இல்லை. நட்ட கட்டைகள்போல விறைத்து நின்றோம். அவர்கள் கூடாரங்களில் புகுந்து சோதனைபோடவும்,

எங்களைச் சிறைபிடித்து ஒட்டைகளில் ஏற்றிக்கொண்டு போகவும் எத்தனித்தார்கள். எத்தனிக்கையில் தூர்க்கிய குதிரைவீரர் சிலர் கிட்டியது கண்டு ஓட்டம் பிடித்தார்கள். அந்தக் குதிரைவீரரைக் கண்டவுடன் அவர்கள் பெக்வா பெருமாட்டியையும் பணிப்பெண்கள் இருவரையும் பருந் தடிக்கும்வண்ணம் விழுந்து அமர்த்திக் கொண்டுபோய் விட்டார்கள். அந்தப் பாதகரைத் தொடர்ந்து பிடித்துவரக் குதிரைவீரரைத் தூண்டிவிட்டோம். ஆனாலும், அவர்கள் வெகு தொலையில் பறந்துபோய்விட்டதனால் அகப்படு வது கஷ்டமென்று எண்ணுகிறேன்" என அறிக்கை செய்தான்.

இம்மொழி கேட்கவும், பிரமையும் துக்கமும் மீறிச் சக்கரவர்த்தி புத்திரி மெய்மறந்தவளானாள். செய்தி கேட் டபொழுது, ராஷிலஸுக்குக் கோபத்தீ பற்றி எரிந்தது. அது தணியுமுன் அவன் உருவின கத்தி கைக்கொண்டு, குற்றேவல் செய்வோரைத் தன்னோடு வரச்சொல்லிக் கள்வரைத் தொடர எத்தனித்தான். அது கண்டு இம்லாக் அவனைப் பார்த்து, "ராஜரத்னமே, தங்கள் புயபல பராக்கி ரமம் இந்தச் சமயத்தில் எதுக்கு உதவும்? முனைமுகத்தில் அச்சமற்று நிற்கவும், மாற்றான் படை மிஞ்சுவது கண் டால், மின்னிலும் அதிக விரைவாய்ப் பறந்தோடித் தப்ப வும் பயின்ற குதிரைகளில் ஏறிப்போன அராபியரைத் தொடர்ந்து பிடிக்கலாகுமென்று வியர்த்தமாய் நினைந்து போய் ஏமாறிவர நிமித்தம் இல்லை. இவ்விடத்தைவிட்டுக் கள்வர்பின் செல்வோமானால், ஒருவேளை ராஜகுமாரத்தி யையும் பறிகொடுத்துவிடுவோம். பெக்வாவைச் சிறை மீட்க நம்மால் இல்லை" எனச் சமயத்திற்கு ஏற்ற புத்தி சொல்லித் தடுத்தான்.

திருடரைத் தொடர்ந்துபோன துர்க்கியர் சிறிது நாழிகை சென்று அவர்கள் கைகடந்து போய்விட்டார்களென்று வெறுமனே திரும்பிவந்தார்கள். ராஜகுமாரி பின்னும் அதிகமாய்ப் பிரலபித்தாள். ராஸிலஸ் வாய் பதறி அவர்களைக் கோழைகளென்று அபவாதம் சொல்லத் தலைப்பட்டான். இம்லாக் "அகப்படாமல் அராபியர் தப்பிவிட்டதனால் நமக்கு உபத்திரவம் பின்னும் ஒரு பங்கு பெருகியதென்று நான் எண்ணவில்லை. அவர்கள் அகப்பட்டால், சிறைபிடித்த மூவரையும் ஒப்பித்துவிட ஒரு பொழுதும் உடன்படார்கள். கொன்றுபோடுவார்களென்று எண்ணுகிறேன்" எனத் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டான்.



## 34-ம் அதிகாரம்.



### பெக்வாவைப் பறிகொடுத்திட்டு அவர்கள் கயிரோவிற்குத் திரும்பியது.



இனி நாட்பட அங்கிருந்து அவர்களுக்கு என்ன பயன்—ஒன்றும் இல்லை. அதனால், நூதனம் கண்டறியும் தங்கள் ஆசையைக்குறித்துப் பச்சாதாபப்பட்டு, குடிகளின் சுகாசுகத்தைப்பற்றிக் கேள்விமுறை இல்லாதிருக்கும் துரைத்தனத்தாரைக் குறை கூறி, கூடாரத்திற்குக் காவல் வைத்துப் போகாதுவிட்ட தங்கள் பேய்ப்புத்தியை நினைந்து மனம் நொந்து, முன்னமே இன்னின்ன உபாயம் செய்திருப்போமானால், பெக்வாவைக் கையிழந்துபோக நேரிடாதேயென்று மனம் போன போக்கில் பல நினைவு

நினைத்து, பெக்வாவைச் சிறை மீட்கும் உபாயம் ஏதாயினும் செய்ய நிர்ணயித்து அவர்கள் கையிரோவிற்குத் திரும்பினார்கள்.

விடுதி சேர்ந்தபின் நிகாயா அந்தர்ப்புரத்தில் சென்றாள். அங்கு அவள் பணிப்பெண்கள் அவள் மனக்கவலையை மாற்றும் வண்ணம், "மாது சிரோமணீ, இப்பூவுலகில் மனுஷரென்று உடம்பெடுத்த எவரெவர்க்கும் அவரவர் துன்பம் உண்டு. நாட்பட இங்கே சுகம் அனுபவித்த பெக்வா பிராட்டியார்க்கு இனித் துக்கம் வரினும் வரலாமே—இது விபரீதமல்லவே. ஆனாலும், எங்கெங்குப் போய்ச் சேர்ந்தாலும் பெக்வாவிற்கு மங்களம் உண்டாகவும், யஜமானியவர்களுக்கு மற்றொரு நற்பாங்கி வந்து அமையவும் வேண்டுமென்று காதலித்து எதிர்நோக்கியிருக்கிறோம்" என வினயமாகச் சொன்னார்கள்.

அவர்கள் மொழிக்கு மறுமொழி ஒன்றும் நிகாயா சொல்லவில்லை. ராஜகுமாரத்தியுடைய பாங்கி சிறைப்பட்டதைப்பற்றி அவர்களுக்குச் சிந்தையில் விசேஷ துக்கம் இல்லை. இல்லாதிருந்தும், கேதகாரியத்திற்கு உரிய முறைகள் எல்லாவற்றையும் ஒப்புக்குக் கொண்டாடினார்கள்.

மறு நாள் சக்கரவர்த்தி மைந்தன் அதிக்கிரமிகளால் தான் பட்ட அவஸ்தையை விவரமாய்க் கண்டெழுதி, அதற்குத்தக்க பரிகாரம் செய்யும்படி பிரார்த்தித்து விண்ணப்பபத்திரம் ஒன்று சித்தஞ்செய்து பாத்ஷாவிற்கு அனுப்பினான். அதைப் பார்வையிட்டு, பாத்ஷா கள்வரைச் சிக்ஷிப்பதாக உக்கிரத்தோடு சொன்னான். சொன்னதன்றி அவர்களைக் கைதுசெய்ய நினைக்கவில்லை. அவர்களைத் தேடித் தொடர்ந்து பிடிப்பிக்கும்படி அவர்கள்

கோலம் குறி ஒன்றும் பாக்யநாவிற்கு ராஸிலஸ் தெரிவிக்கவில்லை. தனக்குத் தெரிந்தாலல்லவோ தெரிவிப்பான்.

அதிகாரிகளால் ஒன்றும் நடவாதென விரைவில் தெரிய வந்தது. செவிக்கு எட்டும் அதிக்கிரமங்களுக்கெல்லாம் தண்டனை செய்யவும், அநியாயங்களுக்கெல்லாம் பரிகாரம் செய்யவும் அதிகாரிகளால் முடியாது. இப்படிக் கேட்டுக் கேட்டு வழக்கப்பட்டதனால், பாரம்பழியை எண்ணாமல் அவர்கள் நிர்விசாரிகளாயிருப்பார்கள். மனுவாதி முகம் மறையவும், மனுவின் அபிப்பிராயத்தை அவர்கள் மறந்துபோவார்கள்.

இவை கண்டு இம்லாக் சாஹுக் தூது அனுப்பி உளவு அறியப் பார்த்தான். அராபியருடைய உறைவிடம் ஒளிப்பிடம் எல்லாம் திட்டமாய்த் தெரியுமென்றும், அவர்கள் தலைவர்க்கும் தமக்கும் சிநேகப்போக்குவரவு கிரமமாய் நடந்து வருகிறதென்றும் வெகுபேர் இம்லாக்கிற்குச் சொல்லி, பெக்வாவைச் சிறை மீட்டுவரத் தடைசொல்லாது உடன்பட்டார்கள். வழிச்செலவிற்குப் பணம் வாங்கிக்கொண்டுபோன சிலர் திரும்பி வரவேயில்லை. செய்தி அறிந்து வந்தோமென்று சொல்லி மனம் குளிரக் கூலி வாங்கின சிலருடைய வாய்ப்பிறப்பு எட்டு பத்து தினத்திற்குள் சுத்த அபத்தமென வெளிப்பட்டது. ஆனாலும், வாய்க்கும் துறை வாய்க்காத்துறை அனைத்தையும் பரீக்ஷைபார்ப்பதன்றி ஒன்றையாவது விட்டுவிடுவது ராஜகுமாரிக்குச் சம்மதமேயல்ல. முயற்சி செய்யும்பொழுதெல்லாம் அவள் மனம் பெக்வா வருவாள் வருவாளென்று வழிபார்த்துக்கொண்டிருந்தது. தொடுத்த உபாயம் ஒன்று சிதற மற்றொன்று அவர்கள் சிந்தையில் தோன்றிய வண்ணமா

யிருந்தது. சென்ற தூதன் ஒருவன் சித்தியற்றுத் திரும்பி வர, மற்றொருவனை வேறு திக்கில் போக்கிக்கொண்டுவந்தார்கள்.

இந்த முயற்சி செய்யத்தொடங்கி இரண்டு மாசம் சென்றும், பெக்வாவின் செய்தி ஒன்றும் தெரியவில்லை. பெக்வா வருவாள் வருவாளென்று அவர்கள் ஒருவர்க்கு ஒருவர் ஆசை புகட்டிக்கொண்டு வந்தார்களே—அவ்வாசை வரவா இளைத்தது. இனிச் செய்யும் உபாயம் இல்லையென்று கண்டு நிகாயா தஞ்சமற்றுத் தயங்கி, ஆருத்துயருக்கு ஆளானாள். தன் நற்பாங்கியைத் தன்னை விட்டுப் பிரிந்து கூடாரத்தில் இருக்கத் தடைசொல்லாமல் சம்மதித்து விட்ட தன் மதிகேட்டை நினைந்து நினைந்து தன்னைத்தான் நொந்தாள். "நட்பு மிஞ்சியல்லவா என் செல்வாக்குக் குறைந்தது. என்கூட வாவென்று ஒரு தலையாய்ச் சொல்லியிருந்தேனானால், பெக்வா அச்சம் பாராட்டிப் பின்நிற்கத் துணியாளே. மாயாரூபிகளிலும் அவள் எனக்கு அல்லவா அதிகமாய்ப் பயப்படவேண்டும். சற்று முகம் கடுத்துப் பார்ப்பேனானால், அவள் என்னை வணங்கி வழிப்படுவாளே. இப்படிச் செய்யென்று திட்டமாய்ச் சொன்னால், எதிர்பேசாமல் சொற்படி செய்வாளே. நான் என் மதிகெட்டு இளக்காரத்தை மிஞ்சவிட்டேன்? அவளை வாய் எடுக்க விடாமல் நான் என் ஒரு மொழியாய் நிறுத்திக்கொள்ளவில்லை?" என நிகாயா தன் குறையைச் சொல்லித் தானே பழிகாரி என்றாள்.

**இம்லாக்:** — மகத்துவம் மிக்க ராஜபெருமாட்டி, தங்கள் சுகிர்தத்திற்காகத் தங்களைக் குறைசொல்லத் தகாதே. தாம் ஒன்றைச் செய்ய, ஆகஸ்மிகமாய் ஆபத்து நேர்ந்தால், தாம் செய்தது தோஷமென்று நினைக்கலாகாதே. பெக்

அவனை வருத்துமானால், ஆ அவன் கிலேசம் தீர்க்க மருந்து இல்லையே!

ராஜகுமாரீ, இதை நெஞ்சில் அழுந்த நினைந்துபாரும். பெக்வா பிராட்டி தம்மோடுகூடச் செய்குன்றம் பார்க்கப் போக இடம் தரும்படி தம்மைப் பரிந்து கேட்கவும், தாம் மறுத்துக் கூடாரத்தில் இருத்திவிட்டுப் போகவும், தாம் போயிருக்கையில் அந்தப் பிராட்டியை அராபியர் கூடாரத்தில் புகுந்து சிறைபிடித்துக்கொண்டு தப்பிவிடவும் சம்பவித்தால், தமது மனம் என்னென்ன பாடுதான் படாது? அல்லது, தாமே பலாத்காரமாய்ப் பெக்வாவைச் செய்குன்றத்தின் அகத்தில் கொண்டுபோகவும், அங்கவர் அஞ்சி நடுங்கி அவஸ்தைப்பட்டு தமது கண்ணெதிரில் இறந்துபோகவும் சம்பவித்தால், அந்தப் பரிதாபத்தைக் கண்டு தமது மனம் சகிக்குமா?

**நீகாயா:**—இவ்விருகண்டத்தில் எதற்கும் தப்பி இதுவரையில் என் உயிர் நிற்காது; அந்தக் குரூரத்தை நினைத்து நினைத்து வருந்திப் பைத்தியகாரியாய்ப் போய்விடுவேன்; அல்லது பூலோகவாழ்வும் ஒரு வாழ்வாவென என்னை வெறுத்து நலிந்து உலர்ந்துபோய்விடுவேன்.

**இம்லாக்:** — நன்னெறியில் செல்வோர் எவ்வகைத் துன்பம் வரினும், அந்நெறியில் செல்வதை நினைந்து வருந்தார். இம்மையில் நல்லொழுக்கத்திற்கு வேறு பயன் இல்லாதிருப்பினும் இந்தப் பயன் உண்டு—இது கைமேலே கிடைக்கும்.



## 35-ம் அதிகாரம்.

### பெக்வா இல்லாத குறையால் சக்கரவர்த்தி புத்திரி தவித்துத் தளர்ந்தது.

மேற்சொல்லியவாறு சுகதுக்கம் இரண்டும் மனுஷருக்குச் சகஜமென்று கண்டு மனம் ஆறியிருந்த நிகாயா எவ்வகைத் துன்பத்தையும் எளிதில் சகிக்கலாம்—செய்த வினையின் பயனென நெஞ்சறிய வரும் துன்பத்தையோ சகிப்பது அரிது என்று கண்டாள். அன்றுதொட்டு அவள் கிலேசம் என்னும் சண்டமாருதச் சுழல் வந்து அடிக்கும் பீடைக்குத் தப்பிப் பதைப்பற்று அடங்கிக் குறுவிசாரமுற்றாள். தன் பாங்கி பெக்வா செய்தது சொன்னது யாவையும் உதயாதி அஸ்தமனபரியந்தம் பெயர்த்துப் பெயர்த்து நினைத்தாள்; அதது நேர்ந்தபொழுது முக்கியமெனப் பெக்வாவின் நினைவில் தட்டிய அற்பசங்கதிகளையும், நடந்த அற்பகாரியம்—வியர்த்தமான சம்பாஷணை இவற்றின் சார்பு அனைத்தையும் மறந்திடாமல் அரும்பொருளென மனதில் சேமித்துவைத்தாள். பெக்வாவை இனி இவ்வுலகில் காண இடம்பெறுவதில்லையென்று அவள் எண்ணமிட்டிருந்தாள். அதனால் பெக்வாவின் வாக்கினின்று அப்போதப்போது பிறந்த யுத்திக்குறிப்புகளைப் பின்னுக்கு உதவும் நன்னெறிப் பத்ததியென்று ஞாபகப் பொக்கசத்தில் பத்திரமாய் வைத்திருந்தாள். அவள் அவைகளைச் சீர்தூக்கிப் பார்த்தாள். சீர்தூக்கிப் பார்த்தது மற்றொன்றுக்குமல்ல, உற்ற சமயத்தில் உறுந்

துணையாகப் பெக்வா இருப்பாளானால், என்னென்ன யுத்திபுத்தி சொல்வாள் என்று உத்தேசிக்க.

அவளைக் காத்திருந்த பணிப்பெண்களுக்கு அவள் உள்ளத்தின் மர்மம் ஒன்றும் தெரியாது. அதனால் அவர்களுடன் பேசும்பொழுது, அவ்வந்தரங்கம் தோன்றா வண்ணம் நாவை அடக்கிச் சூதானமாய்ப் பேசுவாள். தான் கண்டு கேட்டு அறிந்தவைகளைச் சொல்லச் சமயம் வாய்க்காததனால், பின்னும் அறியவேண்டுமெனும் ஆசை குன்றியது. அவ்வாசை இல்லாதொழியவே, அதிசயம் காணும் அவாவின் வேகம் தணிந்தது. ராஸிலஸ் தன் சகோதரிக்குத் தேறுதல் சொல்லவும், அதன்மேல் ஏதும் பராக்குக் காட்டவும் பார்த்தான். சங்கீதவித்தையில் வல்லவர்களை வரவழைத்துச் செவிக்கு இனிய நாதகீத விநோதம் செய்வித்தான். நிகாயாவின் செவியில் அவர்கள் சங்கீதம் நுழையவேயில்லை—அவள் உற்றுக் கேட்பவள்போல ஒப்புக்கு இருந்தாள். பற்பல கல்வித்துறைகளின் கரை கண்ட பண்டிதரை அவன் அழைத்துப் பிரசங்கம் செய்வித்தான். அவர்கள் சொன்னது ஒன்றும் அவள் மனதில் புகவில்லை. மறுதரமும் முன் சொன்னதையே சொல்லும்படி நேர்ந்தது. இன்பரச இந்திரியம் அவளுக்கு இல்லாதொழிந்தது—மேம்பாடு அடையும் ஆசைப்பெருக்கம் அடியறத் தொலைந்தது. அவள் சிந்தனையைச் சிறுகச் சிறுக வேறு துறைகளில் செலுத்தும் நிர்ப்பந்தம் உண்டாயிருந்தும், அந்த நிர்ப்பந்தம் ஒழியவும், தன்னைப் பிரிந்த இன்னுயிர்த்தோழியின் உருவெளித் தோற்றமே அவள் சிந்தையில் குடிகொண்டது.

அன்றன்று காலையில் பெக்வாவை ஆள் அனுப்பித் தேடுவிக்க நிகாயா இம்லாக்கிற்குத் திட்டம் செய்வாள்.

யாலையில் செய்தி ஏதும் தெரியவந்ததாவென்று கேட்பாள். பெக்வாவைக்குறித்துச் செய்தி எட்டினாலல்லவா அவன் அதை நிகாயாவிற்குத் தெரிவிப்பான்? ஒன்றும் தெரியவில்லையென்று நித்தமும் சொல்லச்சொல்ல, நிகாயாவிற்குத் துயரம் பெருகிற்று. இப்படித் துயர் வருத்தாவண்ணம் இம்லாக்கிற்கு ராஜகுமாரி சமூகத்தில் சேரும் ஆசை வர வர இளைத்தது. அவன் தன்முன் வரப் பின்னிடைவதைக் கண்டு நிகாயா அவனைக் கட்டளை போக்கி வரவழைத்து, "பெக்வாவைக் காணப் பதைக்கும் என் பதைப்பை மனக்கடுப்பென்று நீர் வரையறை தப்பி நினைக்கத் தகாது; உமது முயற்சி வாய்க்காததை நினைந்து என் மனம் வருந்துவதுபற்றி, உமது அஜாக்கிரதையால் இப்படிக் கருமம் சிறியதென்று நான் குறைசொல்வதாக நீர் உத்தேசிக்கவுங் கூடாது. ஆனாலும் நீர் என் கண்ணெதிரில் வரப் பின்னிடைவது அதிசயமல்ல. மனத் துன்பமுள்ளவர்களைக் காண்பது எவர்க்கும் பிரீதியல்லவே; துயரப்படுவோரைக் கண்டால், தொத்து வியாதி போல அத்துயர் தம்மையும் பீடிக்குமென்று நழுவி விலகும் இயற்கை மனுஷர் எல்லோருக்கும் உள்ளது அறிவேனே. சுகித்து வாழ்வோர்—துன்புற்று வருந்துவோர் இருதிறத்தார்க்கும் குறைகேட்பது அலுப்பு. இம்மையில் அவரவர்க்கு அப்போதப்போது உண்டாகும் உல்லாசம் எனும் ஒளி நீடித்திராது. அவ்வொளியை இடைக்கொள்ளையாய் வரும் வியாகுலம் எனும் இருட்படலத்தில் மறைப்பிக்க விரும்புவார் ஆர்? தன் துயர் தாங்க ஆற்றாமல் தத்தளிக்கும் யாவன் பிறர் துயரையும் அதனுடன் சேர்த்து உத்தரிக்க மனம் கொள்வான்?

"இனி நிகாயாவின் நெட்டுயிர்ப்பால் எவர்க்கும் சஞ்சலம் உண்டாகாதொழியும் காலம் கிட்டியது: சுகம் பெற நாடிய நாட்டத்தை இம்மட்டில் நிறுத்திவிடுகிறேன். இங்கிதமும் வஞ்சனையும் நிறைந்துள்ள இல்வாழ்வை விட்டு, எவர் கண்ணுக்கும் எதிர்ப்படாமல் ஒதுங்கி ஓரிடத்தில் ஏகாந்தமாய் நாள் கழிக்கச் சங்கற்பித்திருக்கிறேன். அங்கே விசாரமற்று மனப்பதைப்புத் தீர அடங்கியிருந்து நாழிகைக்கு ஒன்றாக நூதன காலக்ஷேபங்கள் செய்து நாள் கழித்துக்கொண்டு வருவேன். வாழ்நாளறுதியில் பூலோக வாஞ்சையற்றுச் சித்தசுத்தி பெற்றுப் பரகதி அடைவேன். மானிடர் எல்லோரும் பரத்திற்கு விரைந்து செல்வதனால், அங்கே பெக்வாவைக் கண்டு மீளவும் அவளுடன் உறவாடிச் சுகித்திருப்பேன்" என்று உரைத்தாள்.

**இம்லாக்:**—பெருமாட்டி, செய்தபின் தவிர்க்க முடியாத சங்கற்பங்களால் உங்கள் சிந்தையைப் பிணிக்கவும் வேண்டாம், துன்பத்தை வலியப் பெருக்கி வாழ்நாட் சுமையை அதிகப்படுத்திக்கொள்ளவும் வேண்டாம். பெக்வாவைப் போக்கடித்த நினைவை மறந்திடுவீர்கள். ஏகாந்த வாழ்வின் அலுப்போ நித்தமும் நிலைநிற்கும், பெருகினாலும் பெருகும். ஒரு இன்பத்தைப் பறிகொடுத்ததனால் மற்றுள்ள இன்பம் அனைத்தையும் தவிர்க்கவேண்டுமென்று சொல்லும் நியாயம் செல்லாதே.

**நிகாயா:**—பெக்வாவைப் பறிகொடுத்த எனக்கு அப்பால் தள்ளவும் தள்ளாது கொள்ளவும் வேறு இன்பம் இல்லையே. அன்புகூரவும் ஆதரவென்று நம்பவும் எவரும் இல்லாதவளுக்கு அப்புறம் ஆசை ஏது? அவளுக்கு வேண்டுவது சுகத்திற்கு மூலாதாரமாகிய தத்துவம். இம்

மையில் மனுஷருக்கு எவ்வளவேனும் திர்ப்தி உண்டா மானல், அது செல்வப்பொருள்—கல்விப்பொருள்—குண நலம் இம்மூன்றும் ஒருங்கு சேர்ந்து உண்டாகவேண்டு மென்று சொன்னாலும் சொல்லலாம். பிறருக்குக் கொடாத செல்வப்பொருள் செல்வமல்ல, பிறருக்கு உணர்த்தாத கல்விப்பொருள் கல்வியல்ல. அதனால் இவ்விரு பொருளை உடையவர்கள் வியர்த்தமாகாவண்ணம் பிறருக்கு ஈயவேண்டும். நான் இப்பொழுது அவைகளை யார்க்கு உள்ளம் உவந்து கொடுத்துதவமாட்டுவேன்? சற்குணம் ஒன்றே பிறருடன் கூடாதிருந்து அநுபவிக்கத்தக்க சுகம். ஏகாங்கியாயிருந்தும் சற்குண சாதனை செய்யலாகும்.

**இம்லாக்:** — ஏகாந்த நிலையில் சற்குணம் எவ்வளவு உண்டாமென்றும், உள்ளது எவ்வளவு விர்த்திக்குமென்றும் நான் இப்பொழுது விவாதிக்க நினைக்கவில்லை. பக்தியுள்ள முனிவர் செய்த அறிக்கையை நினைத்துப் பாருங்கள். பாங்கியின் உருவெளிப்பாடு தங்கள் இதயத்தை விட்டு நீங்கவும், பலர் கூடிவாழும் இடத்திற்கு மீண்டும் வரப் பதைப்பீர்கள்.

**நிகாயா:** — அந்தப் பதைப்பு எனக்கு ஒருநாளும் உண்டாகாது. ஜீவன் உள்ளளவும் தீமையையும் மதிகேட்டையும் காண்பேன். காணக்காண, பெக்வாவின் தர்மகுணம்—சுத்தமனம்—அடக்கம் – அமைவு – பக்தி – அந்தரங்க யோக்கியதை இவைகள் சிலையில் எழுத்துப்போல என் நினைவில் அழியாதிருக்கும்.

**இம்லாக்:**—இப்பூவுலகின் உற்பத்திக்காலத்தில் இதில் குடியேறிய மனுஷர் முதல்முதல் பொழுதுபட்டு இருளவும், இனிப் பொழுது விடிந்து பகற்காலம் ஆகாதென்று

எண்ணித் திகைத்தார்களென லோகவதந்தி உண்டு. சடிதியில் உண்டாம் உபத்திரவபாரம் பொறுத்து உழலும் மனதின் நிலை அந்த மனுஷர் மன நிலையோடு ஒக்கும். கிலேசம் எனும் மேகம் அடர்ந்து இருண்டிருக்கும்பொழுது, அதற்கு அப்பால் உள்ளது ஒன்றும் நமக்குத் தோன்ருது. அன்றியும், அவ்விருள் மேகம் அகன்று வெளிவாங்குவது எவ்வாறென்று நாம் அறியோம். ஆனாலும் மேற்சொல்லிய பூர்வ மனுஷருக்கு மீண்டும் பொழுது விடிந்து பகற்காலம் ஆயிற்றே—அதுபோல, கிலேசமும் சுக உதயமின்றி நீடித்திராது. அந்தப் பூர்வ மிலேச்சர் பொழுதுபட்டிருளவும், அவரவர் நேத்திரம் இரண்டையும் சூன்றெடுத்து எறிந்திடுவார்களானுல், நாம் அவர்களைக் கஜமடையரென்று சொல்வோமே. துக்கம் தீர்த்து மனப்புண் ஆற்றும் அருமருந்தன்ன சொல்லைக் கேட்பதில்லையென்று பிடிவாதம் செய்வாரும் அவர்களுக்குச் சமானர்தாம். நமது தேகத்தைப்போல மனமும் இடையருது செல்கின்றது; செல்லச்செல்ல, நாழிகைதோறும் ஏதாயினும் ஒன்று கைநெகிழ்ந்து போய்விட மற்றென்று கையகப்படுவது இயற்கை. ஒரேதடவையில் அதிக நஷ்டப்படுவது தேகத்திற்கும் சுகமல்ல, ஆன்மாவிற்கும் சுகமல்ல. ஆயினும், பிராணமயம் உள்ளளவும் நஷ்டநிவிர்த்திசாதனம் எவர் முயற்சியும் இன்றித் தானே உண்டாம். தூரம் என்பது ஊனக்கண்ணுக்கும் சரி உள்ளக்கண்ணுக்கும் சரியே. நாம் எல்லோரும் காலம் எனும் நதியில் செல்லுகிறோம். செல்லச்செல்ல, அங்கங்கே கண்டு பின்னிடையும் பொருள் சிறுத்தும், கண்ணுக்கு எதிர்ப்படும் பொருள் பருத்தும் தோன்றும். தங்கள் வாழ்க்கைக்கிரமம் எனும் ஆற்றை ஓட்டமற்று நிலைநீராக நிற்கவிடாதி

ருங்கள். விட்டால், அது சலனமின்மையால் மலினஜல மாகும். பூலோக வியாபாரம் எனும் ஆற்றில் மீளவும் இறங்குங்கள். அது தம்மைக் கொண்டுபோய்ச் சேர்க்கு மிடத்தில் சேர்க்கட்டும். வரவரப் பெக்வா தமது கண் ணுக்கு மறைந்துபோவாள். அவள் அகல, வழியில் தம் மனதிற்கு இனிய மற்றொரு பெண்ணமிர்தம் கிட்டுவாள். கிட்டாவிடில், நால்வருடனும் கலந்து உறவாடப் பயில் வீர்கள்.

**ராஸிலஸ்:**—இதற்கும் உமக்கு இஷ்டம் இல்லாவி டில் ஒன்று செய்யும். செய்யத்தக்க பிரயோகம் அனைத் தும் செய்து முடிகிறவரையிலாவது துயரப்படாதிரும். அவ்வதிர்ஷ்டம் கெட்ட பெருமாட்டியைத் தேடிப்பார்க் கும் முயற்சி இன்னும் நடந்துவருகின்றது. இன்றுதொ டங்கி ஒரு வருஷத்திற்குள் செய்தபின் தவிர்க்கலாகாத நிர்ணயம் ஒன்றும் செய்யேனென்று வாக்குறுதி சொல் வீரானல், பதைக்காமல் பொறுத்திரும். பெக்வாவைத் தேடும் முயற்சியைப் பின்னும் அதிக ஜாக்கிரதையாய் நடத்துவிப்பேன்.

இவ்வாறு நிகாயாவிடத்தில் வாக்குறுதி கேட்கும்படி ராஸிலஸைத் தூண்டிவிட்டவன் இம்லாக். இந்தக் கேள்வி நியாயமான கேள்வியென்று எண்ணி நிகாயா சகோதரனுக்கு மேற்குறித்தபடி வாக்குறுதி சொன்னுள். கைகடந்துபோன பெக்வா மீளவும் அகப்படுவாளெ ன்று இம்லாக் நினைந்திருக்கவேயில்லை. ஆனல் ஒரு வருஷவரையில் நிகாயாவைப் பதருதிருக்கப்பண்ணி ஞல், அப்புறம் அவள் கன்னி மடத்தில் சேர்ந்து வீரக் தியாவாளென நினைந்து வருந்த எது இல்லையென்று அவன் உத்தேசித்தான்.



# 36-ம் அதிகாரம்.

## பெக்வாவை இன்னம் மறவாதிருந்தது—கிலேசம் பெருகியது.

தன் தோழியைத் தேடிப்பார்க்கும் எத்தனம் ஒன்றுவது செய்யாது விடவில்லையென்பதைக் கண்டும், ஏகாங்கியாய் நாள் கழிக்கும் அபிப்பிராயத்தைப் பின்னிட்டுப் பிறந்த வாக்குறுதியால் சில காலவரையில் நிறுத்தியதை நினைந்தும் நிகாயாவிற்கு நால்வர்க்கும் உள்ள சாதாரண விசாரமும் விஞேதமும் தோன்ருவண்ணம் மீண்டும் உண்டாயின. சஞ்சலம் நிறுத்திவிடப்பட்டதை எண்ணி அவள் சந்துஷ்டியடைந்தாள். அந்தச் சந்துஷ்டி அவளுக்கு இதய சம்மதமேயல்ல. பெக்வாவை எந்நாளும் மறப்பதில்லையென்று பிரதிக்கினை செய்யாதிருந்தாளே. அவள் நினைவு வரவரத் தன் இதயத்தினின்று நீங்குவது கண்டு சிறிதுவேளை நிகாயாவிற்குச் சினம் மூண்டது.

அப்பால் அன்றன்று ஒரு மணிநேரம் குறித்து, பெக்வாவின் நற்குண நற்செய்கைகளையும் நட்பையும் சிந்தனைசெய்துகொண்டு வந்தாள். நாலைந்து வாரம் இம்முறை அற்பமும் தவருது நடந்தேறிற்று. தியானம் செய்து திரும்பிவரும்பொழுது அவள் விழி இரண்டும் வீங்கி முகத்தொளி மழுங்கியிருக்கும். நாள் ஏற ஏற அவள் நிர்ணயபலம் குன்றியது. தவிர்க்கமுடியாத மூக்

கியமான வேலை ஏதாவதும் இருக்கும்பொழுது அவ்வருத்தம் இவளைக் கவனிக்கிறதை செலுத்தாது விட்டதும் உண்டு. சிலவேளை வேறு விசேஷமுயற்சி இல்லாதிருக்கும்பொழுதும் அவள் தன் விசாரத்தை விட்டுவிடுவாள். சிலவேளை அந்த நித்திய கர்மத்தை அவள் மறந்திருப்பாள். அதை நினைக்க அவள் மனம் தரிக்காது, நினைப்புறம். அதுதினம் ஒரு முறை இதயத்தை வருத்தும் அந்த நேர்ச்சையை அவள் சீக்கிரமாய் விட்டுவிட்டாள்.

பெக்வாவில் அவனுக்கு உள்ள நட்பு மெய்நட்பு. அது இன்னும் குன்றவில்லை. எத்தனை எத்தனையோ சங்கதிகள் நடந்த சமயங்களில் நெகாயாவிற்குப் பெக்வாவின் நினைவு வந்தது. அந்தரங்க விசுவாசியாலன்றித் தீராத குறைகள் அநேகம் வந்தபொழுதெல்லாம் அவள் பெக்வாவை நினைந்து மனம் நைந்து துக்கித்தாள். ஆனதுபற்றி, பெக்வாவைத் தேடி விசாரிப்பிக்கும் எத்தனத்தை ஒருபொழுதும் நிறுத்திவிடலாகாதென்று அவள் இம்லாக்கிற்குப் பரிவுடன் சொன்னாள். அன்றியும், செய்தி அறிதற்கு உதவும் உபாயம் அனைத்தும் செய்து வியர்த்தமாய்ப்போனால், தன் நெஞ்சறியத் தான் இதில் எவ்வளவும் பராமுகமாயிருக்கவில்லையென்றும், தாமசம் செய்யவில்லையென்றும் நினைக்கவாவது மனம் தேறலாமேயென அவள் அவனுக்குச் சொன்னாள். பின்னும் அவள் மொழிந்தது: — "ஆனாலும், இவ்வுலக இயற்கையைச் சிந்திக்கும்பொழுது, தேடும் சுகமே பின்பு துக்கத்திற்கு வித்தாகிறதென்று நமக்குத் தெரிகிறதே—தெரிந்திருக்கக் கொள்ள, சுகத்தைத் தேடிப் பயன் என்ன? சுகத்தை நம்மை விட்டு நீங்காதிருத்திக்கொள்ளும் திறமை

லைக்கு இல்லையே—பின்னை நாம் சுகம் பெற வகை தேடினேனென்? இனி நான் எவ்வளவு வயப்பெறுந் தலைவரும் மாண்புடையோனைக் காணினும் அவனை இச்சிக்கவும், சேவை நட்புடையோனைக் காணினும் அவனோடு உறவாடவும் என் மனம் உடன்படாது.—அந்திகின்றிப் பின்னிடும்—என், பெக்வாலைப் பறிகொடுத்ததுபோல் இவையும் இழுக்காவிட வருமே ஆசையும வேண்டாம், அல்லலும் வேண்டாம்.



## 37-ம் அதிகாரம்.



### பெக்வாலைப்பற்றி ராஜகுமாரி செவிக்குச் செய்தி எட்டியது.



ராஜகுமாரன் சக்கராதிபத்தியத்தில் வாக்குறுதி பெற்ற தினமே பெக்வாலைத் தேடிப் பார்க்கும்படி ஒரு தூதனை அனுப்பியிருந்தான். போன தூதன் நாட்பட அங்கங்கே தேடித்திரிந்தும் காணவில்லை. வரவர அவன் மனம் அலுத்துப்போயிற்று. நாடிப்போன கருமம் வாய்க்கவில்லையே என்று அவனுக்கு மிக்க வியாகுலம் உண்டாயிற்று. இப்படி இருக்கையில், ஒரு நாள் அவன் பெக்வா இருக்கும் இடத்தைத் தெய்வ எத்தனமாய்க் கண்டுகொண்டு தெரிந்து, புறப்பட்ட ஏழாம் மாசம் ஸிரியாவினின்று திரும்பிப் போய், "பெக்வா அராபிய குறுநில மன்னன் ஒருவன் கைவசப்பட்டிருக்கிறான். அந்த மன்னன் எகிப்துதேச அந்தத்தில் ஒரு கோட்டையில் வாச

மாயிருக்கிறான். ஊரார் சொத்தைச் சூறையிடுவதன்றி அவனுக்கு அரசிறை வேறில்லை. இருநூறு ஔன்ஸ் பொன் கொடுத்தால், பெக்வாவையும் பணிப்பெண்கள் இருவரையும் ஒப்பித்துவிடுவேனென்று சொல்லுகிறான்” என அறிக்கை செய்தான்.

சிறைமீட்சிக்குக் குறித்த ரொக்கம் ஏறத் தாழ இருந்ததென்று எவரும் விசாரிக்கவில்லை. தனக்குப் பிராணபதமான பாங்கி பிழைத்திருப்பதையும், மிதமாக ரொக்கம் கொடுத்து அவளைச் சிறைமீட்கச் சமயம் வாய்த்ததையும் கேட்டு அதிபதி புதல்வி ஆனந்த பரவசம் அடைந்தாள். பெக்வாவிற்கும் தனக்கும் மிகு மனோசுகம் தரும் சிறைமீட்சி யத்தனத்தைச் செய்யத்தொடங்காது க்ஷணப் பொழுதாயினும் ஆலசியமாயிருப்பதை நினைக்க அவள் மனம் சகிக்கவில்லை. கேட்ட தொகையைக் கொடுத்து வந்த தூதனைத் திருப்பி அனுப்ப அவள் சகோதரனைப் பரிந்து கேட்டாள். பின்பு, அவர்கள் இருவரும் உமது அபிப்பிராயம் என்னவென்று இம்லாக்கைக் கேட்க, அவன் “தூது போய் வந்து செய்திசொன்ன மனுஷன் சத்தியவாதியென்று என் மனம் பூர்த்தியாய் நம்பவில்லை. அன்றியும், அராபிய மன்னன் வசனநிர்வாகியென்று ஒப்புக்கொள்வதற்கு நமக்கு உறுதி என்ன? இது பின்னும் சந்தேகாஸ்பதமாய்த் தோன்றுகிறது. ‘ஆய்ந்தோய்ந்து பாராதான் தான் சாவக்கடவன்’ எனும் பழமொழி கேட்டதில்லையா? மன்னன் சொல்லை நம்பி, ரொக்கம் கொடுத்து அனுப்புவோமானல், அவன் பணத்தையும் பற்றிக்கொண்டு, சிறையிருப்பவர்களையும் நிறுத்திக்கொள்ளினும் கொள்வானே. அவன் பிரதேச எல்லைக்குள் அடிவைப்பது நமக்கு அனர்த்தமாய் முடியினும் முடியும். ‘தன்

நிலத்தில் குறுமுயல் தந்தியிலும் வலிது.' அவன் எல்லைக்குட் சென்றபின் நாம் அவன் அதிகார வசப்பட்டவர்கள் தானே. மேலும் அந்த ஆருடியுமோ வெளிகொண்டு இந்நாட்டகத்தில் வரத் துணியான். வந்தால், ஒருவேளை பாத்ஷாவின் தளம் தன்னை அகப்படுத்திக்கொள்ளுமென்று அவன் அறிவானே.

“இருதிறத்தாரும் ஒருவரை ஒருவர் நம்பாதிருக்க, உடன்படிக்கை செய்வது கஷ்டம். ஐயமான காரியத்தைச் செய்யலாகாது” எனத் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டான். பின்பு சிறிது சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்து, அவன் தூதனை வரவழைத்து, ‘சொல்லக் கேள், எகிப்திய பாலைவனத்தில் ஒரு கன்னிமடம் இருக்கிறது. குதிரைவீரர் பத்துப்பெயரை அங்கு ஆசராயிருக்க அனுப்புவோம். அரசன் பெக்வாவைத் தன் குதிரைவீரர் பத்துப்பெயர் வசம் அம்மடத்திற்கு அனுப்பி அங்கு அவர்கள் வரவைக் காத்திருக்கும் பத்துப்பெயரிடத்தில் ஒப்பித்தால், அந்தக்ஷணமே கேட்ட சிறைமீட்சி ரொக்கம் கொடுக்கப்படும். இப்பொழுது நீ என்னுடன் வந்து இந்தப்படி குறுநில மன்னனுக்குச் சொல்லு, எனத் திட்டம் பண்ணினன்.

இதற்கு அந்த மன்னன் இணங்குவானென்று மனந்தேறி, வீண்பொழுது போக்காமல் அவர்கள் எல்லாரும் அந்த க்ஷணமே கன்னிமடத்திற்குப் பிரயாணப்பட்டார்கள். மடம் போய்ச் சேர்ந்தபின், அராபிய மன்னன் கோட்டைக்கு மேற்சொல்லிய தூதனுடன் இம்லாக் புறப்பட்டான். இம்லாக்குடன் ராஸிலஸும்

போகப் பதைத்தான். அவன் பதைப்புக்கு இம்மாக்கும் சம்மதிக்கவில்லை, சகோதரியும் இணங்கவில்லை. நம்பிப் போனவர்களுக்கு அராபிய மன்னன் தேசாசார முறை தவறாது அதிதி பூஜை செய்து, பெக்வாவையும் பணிப்பெண்களையும் கொண்டு புறப்பட்டு, குறுக அருசல்லைத்தாப் பிரயாணம் செய்து சில தினத்தில் குறித்த மடத்தில் சேர்ந்தான். சேர்ந்து பெக்வாவைச் சிறை நீக்கி, ஆப்தர்கள் வசம் மிகு வினயமாய் ஒப்பித்து ரொக்கத்தை வாங்கினான். மேலும், வழியில் கொள்ளை-கொலைமுதலிய ஆபத்து விபத்திற்குத் தப்புவித்து அவர்களை வந்தவழியே கைரோ நகரத்தில் சேமமாய்க் கொண்டு போய்ச் சேர்க்க வலிய உடன்பட்டான்.

ராஜகுமாரியும் பாங்கியும் சொல்லரிய ஆனந்த பரவசமடைந்து ஒருவரை ஒருவர் கட்டித் தழுவியபின், பிறர் கண்காணா ஒதுக்கிடத்தில் நின்று உள்ளன்புருகிக் கண்ணீர் முத்துச்சொரியவும், ஒருவர்க்கொருவர் நன்றி செய்ததையும், செய்யப் பெற்றதையும் சொல்லிக்கொண்டாடவும் வெளிப்பட்டார்கள். நாலைந்து நாழிகை சென்று அவர்கள் மடத்திற்குத் திரும்பி அன்னசாலையில் சேர்ந்தார்கள். அப்பால் அங்கே கூடிய மடபதி முதலிய துறவோர் சபையில், சூறைக்காரர் கைவசமானபின் பட்ட கதை உற்ற கதை அனைத்தையும் சொல்லும்படி ராஜகுமாரன் பெக்வாவைக் கேட்டான்.



# 38-ம் அதிகாரம்.

---

## பெக்வா பிராட்டி சிறையிருந்த கதை.

பெக்வா:—சூறைக்காரர் என்னைப் பலாத்காரமாய்ப் பிடித்துக்கொண்டு போன காலம், பிடித்துக்கொண்டு தப்பிய வகை முதலிய வரலாறுகளைத் தங்கள் தாசர் வாக்கு மூலமாய்க் கேட்டிருப்பீர்களே. எனக்கு இந்த விபத்து அசதியில் நேர்ந்ததனால் தட்டுக்கெட்டுத் தடுமாறிப்போனேன். ஆதியில் நான் மரம்போல விறைத்ததொழிய, கெடிகலங்கி வியாகுலித்துச் சலிக்கவில்லை. துர்க்கியர் எங்களைத் தொடரத் தொடர, நாங்கள் மேலு மேலும் விரைந்து பறந்தோம். அதனால் என் மனம் மிகவும் மலைவுற்றது. அந்தத் துர்க்கியர் எங்களை மறித்துப் பிடித்துக்கொள்வது கஷ்டமென்றோ, அராபியருக்குப் பயந்தோ கொஞ்சத் தூரம் தொடர்ந்து நின்றுவிட்டார்கள்போலும். துர்க்கியனைக் கண்டால் அராபியர் அஞ்சுவார்களென்று ஊர் மெச்ச அவர்கள் ஓடியதொழிய மற்றப்படியல்ல.

இனித் தமக்கு அச்சம் இல்லையென்று காணவும், அராபியர் கதிதீவிரம் குறைந்தது. எனக்கு அவர்களாலே சரீர உபாதி மெத்தவும் இல்லை. மனோபாதியோ வாவரை மிஞ்சியது. சிறிது நேரம் சென்றபின், கண்ணுக்குக் குளிர்ச்சியான பசும் புன்னிலத்தில் மர நிழல் வளமுள்ள குளக்கரைக்கு அயலில் தங்கினோம். அவர்கள் எங்களையும் தரையில் இறக்கிவிட்டார்கள்;

அப்பால் பிரயாணப்பட அவர்கள் எங்களை இனம் பிரித்துக் குதிரைகள்மீது ஏற்ற எத்தனித்தபொழுது, பெண்கள் என்னை விட்டு விலக மனமின்றிக் கட்டிப் பிடித்துக்கொண்டார்கள். நான் அவர்களைப் பார்த்து, நம்மைக் கைவசப்படுத்தியிருக்கும் இவர்கள் சொல்லைத் தட்டி நடப்பீர்களானால் கோபம் கொள்வார்களே—சொன்னபடி செய்யுங்கள்—போங்கள் என்று ஏவினேன். அப்பால் அன்று பொழுதுபடுந்தனையும் நாங்கள் சென்ற நாட்டில் ஜனசஞ்சாரம் இல்லை.—வழி தெரு இல்லை. பொழுதுபட்டுச் சந்திரோதயமானபின் ஒரு குன்றின் சாரிலில் சேர்ந்தோம். அங்கே இவர்கள் கூட்டாளிகள் கூடாரம் அடித்திருந்தார்கள். அடுப்பில் நெருப்பு எரிந்தது. அவர்கள் ராஜமாளிகையென விளங்கியது. அவர்கள் குறுநிலமன்னனை வாழ்த்தி உபசரித்தார்கள்.

எங்களைக் கொண்டுபோய் ஒரு கூடாரத்தில் விட்டார்கள். அது சற்றுப் பெரிது. கொள்ளையிடப் புறப்பட்ட கணவருடன் கூடிவந்த மனைவியர் அங்கிருந்தனர். இராத்திரிக்குச் சமைத்துவைத்த ஆகாரத்தை அவர்கள் எங்கள்முன் வைத்தார்கள். எனக்கு அத்தனை பசித் தீபனம் இல்லை. இல்லாதிருந்தும், என் பணிப்பெண்களைத் தேற்றும்பொருட்டுப் புசித்தேன். போஜனம் செய்து உச்சிட்டம் எடுத்துக் கொண்டுபோகப்பட்ட தன்மேல், படுத்து நித்திரைசெய்யக் கம்பளம் விரித்தார்கள். எனக்கு இளைப்பு மெத்த. அயர்ந்து நித்திரை செய்தால் என் மனத்துயர் ஆறுமென்று எண்ணினேன். ஆனதுகொண்டு, நான் உடுத்த ஆடையைக் களைவித்தேன். அங்கிருந்த ஸ்திரீகள் விழித்த கண் இமைக்காமல் என்னைப் பார்த்தவண்ணமாயிருந்தார்

கள்; பணிப்பெண்கள் என் சொற் கேட்டு எனக்கு ஏவல் புரிவது அவர்களுக்கு அதிசயமாயிருந்ததுபோலும். மேலாடை களைந்தபின் உள்ளாடையின் அலங்காரத்தைக் கண்டு அவர்கள் மிகவும் வியப்புற்றார்கள். ஆடையில் விந்தையாய் இழைத்திருந்த சரிகை வேலைப்பாட்டை ஒருத்தி பயந்து பயந்து கைவிரலால் தடவிப் பார்த்தாள். பார்த்துவிட்டு அவள் வெளிப்பட்டுச் சற்றுச் சென்று மீளவும் கூடாரத்திற்குள் வேறொரு மனுஷியுடன் வந்தாள். வந்த ஸ்திரீ குலத்திலும் செல்வாக்கிலும் உயர்ந்தவளெனத் தோன்றிற்று. வந்தவுடன் வழக்கமாய் ஒருவர்க்கு ஒருவர் செய்யும் மரியாதைகள் செய்து, அவள் என்னைக் கையில் பிடித்து மற்றொரு சிறிய கூடாரத்தில் கொண்டுபோய் விட்டாள். அதில் மிக்க நாணயமான வேலைப்பாடுள்ள இரத்தினக்கம்பளங்கள் விரித்திருந்தன. அதில் நானும் பணிப்பெண்களும் அன்றிரவு ஆறி அடங்கித் தூங்கினோம்.

மறுநாட் காலையில் பசும்புற்றரையில் நான் உட்கார்ந்திருந்தேன். இருக்கும்பொழுது, தளபதி என் அண்டையில் வந்தான். நான் அவனைக் கண்டு எழுந்தேன். அவன் எனக்கு வணக்கமாய்ச் சிரக்கம்பம் செய்து, "மஹாப் பிரபுணீ, எனக்கு இத்தனை அதிர்ஷ்டம் பிறக்குமென்று நான் முன் எண்ணியிருக்கவில்லை. என் பாளயத்தில் ஒரு ராஜகுமாரி இருப்பதாக இங்குள்ள பெண்பாலார் சொல்லக் கேட்டேன்" என மொழிந்தான். அதற்கு நான், "பிரபூ, தங்கள் பெண்பாலார் என்னைக்குறித்து அபத்தம் நினைத்துத் தமக்கு அபத்தம் சொன்னார். நான் ராஜகுமாரியே அல்ல. மனம் நொந்து வருந்தும் பரதேசி; இத்தேசத்தினின்று விரைவிற் பிரயா

ணப்பட நினைத்திருந்தவள். எந்நாளும் இங்கே சிறை யிருக்க லபிக்குமென்று நான் எண்ணியிருக்கவில்லை" என மறுமொழி பகர்ந்தேன். அதுகேட்டு, அந்தத் தளகர்த்தன், "தமது பெயர்—ஊர்முதலிய விவரம் ஒன்றும் அறியேன். தாமும் தம் பணிப்பெண்களும் தரித்திருக் கும் வஸ்திரங்களால் தமது குலம் உயர்குலமெனவும், தமது செல்வம் பெருஞ்செல்வமெனவும் குறிப்பாய்த் தெ ரிகின்றது. எளிதாகச் சிறை நீங்கிப்போகத் தமக்கு இய ல்பு இருக்கின்றதே—பின்னை, என்றென்றும் சிறையிருக்க லபித்ததென்று நினைந்து வருந்துவானேன்? நான் தாவடி வந்தது என் செல்வத்தை விர்த்திசெய்துகொள்ள; நிதா னமாய்ச் சொல்லில், இஸ்மவேலின் சந்ததியாராகிய நாங் கள் திரை சேர்க்க இங்கே பிறந்து வளர்ந்தவர்கள்—இந் தப் பிரதேசம் தொன்றுதொட்டுப் பரம்பரையாய் எங்கள் காணியாட்சி. பின்னிட்டு இழிகுலத்தாராகிய நிஷ்டூர மன்னர் தாவடிவந்து இதை எங்கள் வசத்திலின்று அப கரித்துக்கொண்டார்கள். நியாயவரம்பு கடந்து அவ்வி திக்கிரமிகள் கவர்ந்த எங்கள் சொத்தைக் கத்தியெடுத் துப் பொருதேனும் மீட்டுக்கொள்ளத்தானே வேண்டும். பிரசண்ட யுத்தம் நடக்கும் சமயத்தில் இன்னார் இனைய ரென்று பொறுத்து முகம் பார்க்கச் சந்தர்ப்பப்படாது. தோவதிகளையும் பராக்கிரமரையும் கருவறுக்க ஓங்கி வீசும் கத்தி நிர்த்தோஷிகளுக்கும் குலமக்களுக்கும் பட் டாலும் படும்" என்றான்.

அந்தக் கத்தி நேற்றையதினம் என்மீது விழுமென்று என்னளவும் அறியேனே என உரைத்தேன்.

என் சொற்கேட்டு, அந்த அரபி, "ஆபத்து விபத்தை அனுதினமும் எதிர்பார்த்திருக்கத்தான் வேண்டும். வணங்

செலுத்தப்படும். சொல்லச் சொல்லக் கேளாமல் என்னை ராஜ சன்னிசையென்று சிலாகித்துக் கொல்லாமற் கொல்வது தர்மமல்ல" என நான் அந்த அராபியனுக்குச் சொன்னேன். கேட்கத் தரும் தொகை இவ்வளவென்று சிந்தித்துத் தீர்ப்பதாச வார்த்தை சொல்லி, அவன் முகமலர என்னைப் பார்த்துச் சிரக்கம்பஞ் செய்து போய்விட்டான்.

அடிக்குள்ளே மேற்சொல்லிய மாதர் என் கிட்ட வந்து ஆசார உபசாரம் செய்வதில் ஒருவர்க்கு ஒருவர் முந்தப் பார்த்தனர். எனக்கு நடந்த பிரதிஷ்டை என் பணிப் பெண்களுக்கும் நடந்தது. அங்கிருந்து கிளம்பி அன்றன்று மந்தாரம் பிரயாணஞ்செய்தோம். சிறைமீட்சிக்குக் குறித்த தொகை இருநூறு ஔன்ஸ் பொன்னென்று குறுநில மன்னன் நாலாம் நாள் எனக்குச் சொன்னான். அது கொடுத்துத் தீர்ப்பதாக வாக்கிட்டேன். அன்றியும் என்னையும் பெண்களையும் மானபங்கமின்றிக் காத்துக் கொண்டால் பின்னும் ஐம்பது ஔன்ஸ் பொன் கூட்டிக் கொடுப்பேனென்று சொன்னேன்.

பணத்தின் மிடுக்கு இத்தன்மையதென்று அதற்கு முன் ஒருபொழுதும் எனக்குத் தெரியாது. அன்றுதொட்டு அந்தக் களத்திற்குத் தலைவி நானே. நெடுகவானாலும் குறுகவானாலும் தினம் தினம் செல்லும் தூரம் இவ்வளவென்று முன்னறுதிப் பதிசெய்தவள் நான்; எனக்கு இளைப்பாற இஷ்டமான இடத்தில் கூடாரம் அடிக்கப்பட்டது; பிரயாணத்திற்கு வேண்டிய ஒட்டைமுதலிய சமஸ்தமும் எங்களுக்குக் குறைவற அமைந்தன; பணிப்பெண்

கள் எப்பொழுதும் என் பக்கத்தில் இருந்தார்கள். நாடோடிகளாய்த் திரியும் மனுஷருடைய நடை நொடி பாவனைகளையும், உருக்குலைந்து பாழாய்க்கிடக்கும் பூர்வ கட்டடங்களையும் பூராயமாய்ப் பார்த்துப் பொழுது போக்கினேன். பூர்வம் இப்பாழ்ந்தேசத்தில் கண்கொள்ளாச் சிங்கார மண்டபங்கள், மாடகூடங்கள் திரளாயிருந்தனபோலும்.

அந்தத் தளபதி கற்றறியாத மூடனே அல்ல. அவன் நக்ஷத்திரங்களின் ஸ்தான வரைபறை கண்டும் திசையறி கருவி பார்த்தும் பிரயாணம் செய்துவரும் நிபுணன். அவன் அங்கங்கே நாவடிபோய்த்திரியும் மார்க்கத்தில் பிரயாணிகள் கவனிக்கத் தகும் ஸ்தலங்களைக் குறித்துவைத்திருந்தான். "மனுஷசஞ்சாரம் இல்லாமலும், எளிதில் போகவரத் திறவு இல்லாமலும் இருக்கிற பிரதேசத்தில் உள்ள கட்டடங்கள் நாட்படப் பழுதுறுதிருக்கும். ஒரு தேசத்தின் பூர்வாலங்காரம் குன்றும்பொழுது, குடியெழுந்துபோகாமல் அங்கிருக்கும் ஜனம் பெருகப் பெருக அத்தேசம் தீவிரமாய் நாசமுறும். வீடு கட்டுவோர் கல் விளை நிலத்தில் கல் வெட்டி எடுப்பது கஷ்டமென்று பூர்வ ஆலயங்களின் மதிலை இடித்துக் கல்லை வேண்டும் அளவிற்கு எடுத்துக்கொள்வார்கள்; அரண்மனைகளையும் தேவாலயங்களையும் இடித்து விழுத்திக் கருங்கல்லால் குகிளைப்பந்தி கட்டுவார்கள்; குடிசை கட்டுவார்கள்" என்று அவன் எனக்குத் தெளியச் சொன்னான்.



# 39—ம் அதிகாரம்.

பெக்வா சிறையிருந்த கதை (தொடர்ச்சி).

சில வாரமளவும் நாட்டகத்தில் இப்படித் திரிந்தோம். திரிந்தது எனக்குத் தேசாதிசயம் காட்டிப் பிரீதி உண்டாக்கும்பொருட்டென்று குறுநிலமன்னன் மாயமடித்தான். நான் அதை நம்பவில்லை. அவன் ஏதோ தன் சுகத்தை நாடி இவ்வாறு செய்தானென்று என் மனம் ஐயுற்றது. நான் அவனிடத்தில் ஒட்டாரம் செய்தும் சினந்தும் பயன் ஒன்றும் இல்லையே—செல்லாத இடத்தில் கோபமும் இல்லாத இடத்தில் பசியும் என்ன செய்யும்? அதனுல், இவள் மனம் ரமித்திருக்கிறதென்று என்னைக் காண்பவர்க்குத் தோன்றும்படி நடந்தேன். இந்த உபாயம் என் மன உபசாந்திக்கு அனுகூலித்தது. ஆனுலும், நான் எப்பொழுதும் உடல் அங்கும், நிகாயாவோடு உயிர் இங்குமாயிருந்தேன். பகலில் அனுபவிக்கும் விநோத இன்பத்திலும் இரவிற் படும் மனோபத்திரவம் அதிகம். தங்கள் விசாரபாரத்தை எல்லாம் என் தோள்மீது இறக்கி வைத்திட்டு இருந்த பணிப்பெண்கள் அராபியர் என்னைச் சம்மானித்து வருவதைக் கண்டார்களே—கண்ட தினம் முதலாக அவர்கள் கிலேசமற்றிருந்து சிந்தனையின்றித் துயர் ஒழிந்து, எங்களுக்கு அப்போதப்போது வழியில் உண்டாம் இளைப்புத் தவிப்பைத் தவிர்க்கும் உபசாந்தி செய்கிற முயற்சி ஒன்றிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார்கள். அவர்கள் மனமகிழ்ந்திருப்பது கண்டு

உவப்புற்றேன். அவர்கள் அச்சமற்றிருப்பதைக் காணக் காண எனக்கு உற்சாகம் உண்டாயிற்று. அந்த அராபியன் நாட்டகத்தில் ஒடுகாலியாகத் திரிவது திரவியம் தேடவன்றி மற்றப்படியல்லவென்று மர்மம் அறிந்துகொண்டேனே. அதனால், எனக்கு முன் உள்ள அச்சம் மூக்காலே மூன்று வீசம் தெளிந்தது. பணப்பித்து என்பது ஒருவனுக்கு ஒருவிதம் ஒருவனுக்கு ஒருவிதமல்ல—யாவருக்கும் ஒரே தன்மையாயிருக்கிறது. இந்தத் துர்க்குணத்தை எளிதில் வசப்படுத்தலாம். மற்றுள்ள மனப்பிணிகளோ அவரவர் மன இயற்கைப்படி வெவ்வேறு கோலம் கொள்ளும். ஒருவனுடைய அகந்தைக்கு உபகாரமாயிருப்பது ஒருவனுடைய அகந்தைக்கு அபகாரமாகத் தோன்றும். பணப்பித்தர் தயவைப் பெற்றுக்கொள்வதோ மிக எளிது. அவர்கள் தயை பெறத் தவறாது உதவும் உபாயம் உண்டு. அவர்களுக்குப் பணம்மாத்திரம் கொண்டுபோய்க் கொடுத்தால், கேட்கும் எவ்வகை உபகாரமும் இல்லை என்னாமற் செய்வார்கள்.

கடைசியில் குறுநிலமன்னன் வாசஸ்தானத்திற்போய்ச் சேர்ந்தோம். அது நீல் நதி ஆற்றிடைக்குறை ஒன்றில் இடம்பெறக் கட்டிய அரணான கல்வீடு. அவ்வாற்றிடைக்குறை அபய எல்லைக்குள் இருப்பதாகச் சொல்லக் கேள்வி. குறுநிலமன்னன் என்னைப் பார்த்து, "பிராட்டியாரே, பிரயாண இளைப்புத் தீர நாலைந்து வாரம் இவ்விடத்தில் வாசமாயிருங்கள். தாமே இவ்விடத்திற்குச் சர்வாதிபதியென்று எண்ணிக்கொள்ளுங்கள். சண்டை செய்வது என் குலவிர்த்தி. அதனால் இவ்வெளிய இருப்பிடமே எனக்கு வாய்க்குமென்று இங்கிருக்கிறேன். இருந்தாற்போல் இங்கிருந்து புறப்படவும், பகைஞர்

தொடராமல் இங்கு வந்து சேரவும்மாட்டுவேன். தாம் இங்கே அச்சமற்று ஆறியிருக்கலாம். இங்கே தமக்குள்ள இன்பகாலக்ஷேபம் மிதம். அச்சத்திற்கு நிமித்தமோ அணுவளவும் இல்லை" என மொழிந்து அந்தப்புரத்திற்கு இட்டுக்கொண்டுபோய், அங்கொரு பஞ்சணைமஞ்சத்தில் உட்காரச் சொல்லி, தரையில் தலை வணங்கி உபசரித்தான்.

என்னைச் சக்கரவர்த்தியென்று எண்ணி அவன் மனைவிகள் வெங்கண்ணேணைக்காய்ப் பார்த்தார்கள். பின்பு நான் மகத்துவமுள்ள பெருமாட்டியென்றும், மீட்சி ரொக்கம் வரப் பெறுந்தனையும் சிறையிருக்கிறேனென்றும் கேள்வியுற்று, அன்றுதொட்டு அவர்கள் எனக்குத் தொண்டுசெய்வதிலும் என்னை வணங்குவதிலும் ஒருவர்க்கு ஒருவர் முந்தப் பார்த்தார்கள்.

விரைவிற் சிறைநீக்கி விடுவதாக மீண்டும் வாக்குறுதி சொல்லக் கேட்டு மனம் தேறி, சிலநாள்வரையில் பதைப்பற்று அடங்கி, அவ்விடத்து நூதனத்தைப் பார்த்துப் பராக்காயிருந்தேன். அம்மாடசிகரத்தில் நின்று பார்க்க நாட்டுப்பிரதேசம் வெகுதூரம் தெரிந்தது. நதி அங்கங்கே நெளிந்து வளைந்து செல்லும் மார்க்கம் தெளியத் தோன்றியது. ஆதித்தகதியின் இயற்கையால் தேசக்காட்சி அலங்காரம் அங்கங்கே வேறுவேறாயிருந்தது. பகற்காலத்தில் அங்கங்கு உலாவி அநேக இடங்களைப் பார்வையிட்டேன். முன் ஒருபொழுதும் காணாத காட்சி அநேகம் கண்டேன். அந்த நிர்மானுஷியப் பிரதேசத்தில் முதலை, நீர்க்குதிரை இவைகள் சாதாரணம். நீரில் வாழும் அந்த ஜந்துக்களால் எனக்கு விக்கினம் இல்லையென்று அறிந்திருந்தும், அவைகளைக் காணும்பொழுது பெரும்பாலும்

எனக்குத் திகில் எடுத்தது. நீல்நதியில் நீரரமகளிர், வருணன் காளகர் எனும் ஜந்துக்கள் சஞ்சரிப்பதாக ஐரோப்பிய பிரயாணிகர் எழுதியிருப்பதை இம்லாக் கவிஞர் சொல்லக் கேட்டிருக்கிறேனே. அவைகள் என் கண்ணுக்குத் தட்டுப்படுமென்று கொஞ்சக் காலவரையில் நாட்டமாயிருந்தேன். அவ்வகை ஜீவிகளை நான் காணவேயில்லை. குறுநிலமன்னனைக் கேட்டேன். அவன் என் பேதைமையைக் கண்டு பெருநகை செய்தான்.

இராத்திரிகாலத்தில் அவன் என்னைத் தாராங்கணக் கோபுரத்திற்கு இட்டுக்கொண்டுபோய் நக்ஷத்திரங்களைக் காட்டி அவற்றின் நாமம்—மார்க்கம் முதலிய வரலாறுகளை எனக்குப் போதித்துவருவான். இவ்வித்தையில் என் மனம் கவியவில்லை. ஆனாலும், ககோள வித்தியா நிபுணனென்று தன்னை மெச்சியிருந்த அவன் எனக்கு அதை வலிய கற்பிக்கும்பொழுது, கருத்து அதில் செல்லாதிருப்பினும், ஒப்புக்காவது காதலித்துக் கேட்பவள்போல மாயமடித்து அவனுக்குப் பிரீதி உண்டாக்க வேண்டுமே. நாட்டகத்தில் பகல்முழுதும் கண் சலிக்கக் கண்டுவந்த பொருள்வகையையே நித்தமும் திரும்பத் திரும்பப் பார்வையிட்டு மன ஊக்கம் இளைத்திருந்த எனக்குப் பொழுது நீடிக்காது கழிய இராத்திரிகாலத்தில் நூதன காலக்ஷேபம் கிட்டியது நல்லதுதானே. அதனால், சிலகாலம் கருத்துக் கூர்ந்து நட்சத்திரங்களைப் பார்வையிட்டு வந்தேன். ஆனாலும், எப்பொழுதும் என் மனம் பதைப்பற்று விஷயத்தில் பிரவர்த்திக்கவில்லை. என்னைக் காண்பவர்கள் இவளுக்கு நட்சத்திர விசாரணையில் நாட்டம் அதிகமென்று எண்ணும்படி, நான் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தவண்ணம் இருக்க, என் மனமோ

நிகாயாவை நினைந்து வருந்தும். அடுத்துச் சிறிது காலத்திற்குள், அந்த அராபியன் மீண்டும் பிரயாணப்பட்டான். பின்பு நாங்கள் சிறையிருக்கச் சம்பவித்த துக்கத்தையும், சிறை நீங்கப்பெறில் எங்களுக்கு உண்டாம் சுகத்தையுங்குறித்து என் பணிப்பெண்களுடன் சம்பாஷிக்கும் இன்பம் ஒன்றொழிய, மற்றின்பம் எனக்கு இல்லை.

**நிகாயா:**—அவ்வராபியனுடைய கோட்டையில் ஸ்திரீகள் இருந்தார்களே. நீ அவர்களுடன் தோழமைகூடிச் சம்பாஷித்துக் கொண்டாடி அவர்கள் காலக்ஷேபங்களில் கலந்து அளவளாவாததேன்? அவர்களுக்கு இதமான விநோதமும் வேலையும் இருக்கும் இடத்தில் நீ ஒருத்தி மாத்திரம் உட்காந்தவண்ணமாயிருந்து வியர்த்தமாய்க் குறுவிசாரப்பட்டுக் கரைய நிமித்தம் என்ன? அல்லது, உள்ள நாள் உள்ளமட்டும் அவர்களுக்கு லபித்த கதியை ஆறு ஏழு மாசகாலம் சகித்துக்கொள்ள உன்னால் ஆகாததேன்?

**பெக்வா:**—அம்மாதர் விநோதம் எல்லாம் சிறுபிள்ளைகள் விளையாட்டே தவிர மற்றப்படி அல்ல. அறிவிற்கு ஏற்ற பொழுதுபோக்கிற பயின்ற மனது அவ்வகை விநோதங்களில் பிரவர்த்தியாது. என் அந்தக்கரணங்கள் கைரோ நகரத்திற்குப் பறந்துபோய்விட, அம்மாதர் மனம் களிந்து செய்த கிரியைகளில், கேவலம் என் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களால் நானும் கலந்து கொண்டேன். பஞ்சரத்தில் அடைத்திருக்கும் குருவி கம்பி விட்டுக் கம்பி தத்தும்வண்ணம் அவர்கள் அறைக்கறை ஓடியாடித் திரிவார்கள். பசும்புன்னிலத்தில் ஆட்டுக்குட்டிகள் துள்ளிப் பாய்ந்து திரிவதும் அவர்கள் நடனம் செய்வதும் சரி. அவர்கள் நாட்டியத்தில் அங்கம்

அசைவயொழிய அழகு இல்லை. சிலவேளை மற்றவர்களுக்கு அச்சம் காட்ட ஒருத்தி வருந்துவதாக மாயமடிப்பாள். சிலவேளை ஒருத்தி ஒளித்துக்கொள்ள மற்றொருத்தி அவளைத் தேடித்திரிவாள். அவர்கள் பொழுதுபோவது ஆற்றில் மிதந்து அலையொடு செல்லும் லகுவான வஸ்துக்களைப் பார்த்துக்கொண்டிருப்பதிலும், ஆகாயத்தில் மேகம் பின்னப்பட்டு வெவ்வேறு உருவாக விளங்கும் விநோதத்தைக் கவனிப்பதிலுமே.

தையல் தைப்பது ஒன்றே அவர்கள் வேலை. அவ்வேலையில் சிலவேளை நானும் பணிப்பெண்களும் அவர்களுக்குக் கையுதவி செய்ததுண்டு. ஊசி பிடித்துத் தைக்கின்ற விரலிற் செல்லாமல் எளிதிற் சிதறுவது மனதின் இயல்பென்று தமக்கு என்ன தெரியாதா—அன்றியும், பூச்சித்திரப்பட்டுத்தையல் நிகாயாவைப் பிரிந்து சிறைப்பட்டிருக்கும் என் மனக்குறையை ஆற்றவல்லதென்று தாம் க்ஷணமேனும் நினையீர்களே.

மேலும், அவர்களுடன் சம்பாஷித்து அதிக திர்ப்தியடையும்படி ஆசைகூர எதுவும் இல்லை. அவர்கள் என்ன விஷயத்தைத்தான் எடுத்துப் பேசுவார்கள்? அவர்கள் ஒன்றையும் கண்டவர்கள் அல்ல; அதி பால்யகாலம் பிடித்து அவ்வொடுக்கிடத்தில் அடைந்திருந்தவர்கள். கண்ணெதிரிற் காணுதயொன்றையும் அவர்கள் அறியார்கள்; எழுத வாசிக்கப் பயின்றவர்களல்லவே. அவர்கள் திர்ஷ்டியின் எல்லைக்கு உட்பட்ட பொருள் சிலவற்றின் ஞாபகமொழிய வேறு கருத்துப்பொருள் அவர்கள் மனக்களஞ்சியத்தில் இல்லை. உண்ணும் அன்னத்திற்கும் உடுக்கும் வஸ்திரத்திற்கும்மாத்திரம் அவர்கள் பெயர் அறிவார்கள். அவர்கள் ஒழுக்கத்திற்கு என் ஒழுக்கம்

மேல். ஆனதுபற்றித் தமக்குள் உண்டாம் பிணக்குத் தீர்க்க என்னை அடிக்கடி அழைப்பார்கள். நான் அவர் கள் வழக்கைக் கூடியவரையும் பக்ஷபாதமின்றி நடுத் தெரிந்து தீர்த்துவிடுவேன். அவர்கள் வழக்கெல்லாம் அற்ப வழக்கு—பிரீதியாய்ச் செவிகூர்ந்து கேட்கத் தக்க வழக்கல்ல —செவிசாய்த்துக் கேட்கச் சம்பவித்தால், இல்லாத புராணம் எல்லாம் சொல்லி என்னைப் பெயரப் பிரியவிடார்கள். வழக்குச் சொல்லத் தொடங்கும் பொழுதே அதன் காரண காரிய தாற்பரியம் எல்லாம் வெளிப்படையாய்த் தோன்றும். தோன்றவே, அலுப் புற்று அம்மட்டில் நிறுத்தும்படி சொல்வேன்.

**ராஸிலஸ்:**—அந்த அராபியன் சிறந்த பண்டிதன் என்றீரே—அவனுக்கு இவ்வகைப் பெண்கள் இருக்கும் அந்தப்புரத்தில் இன்பம் உண்டாம் வகை என்ன? அவர் கள் அற்புத ரூபவதிகளா?

**பெக்வா:** — உல்லாசம் – மாட்சிமை – மனோற்சாகம்— சுகிர்த மகத்துவம் இவை இல்லாத சிலருக்கு இழிதக வான இயற்கையழகு இருந்தாலும் இருக்குமே — இவ் வழகு அந்தப் பெண்களுக்கும் உண்டு. ஆனாலும், அந்த அராபியனைப்போலும் மனுஷருக்கு மேற்படி பெண்க ளுடைய அழகு லக்ஷியமா—அது கண்ட இடத்தில் பறி த்துக் கருதலின்றி எறிந்துவிடும் புஷ்பத்திற்குச் சமா னம். அவர்களுடன் கூடி அவனுக்கு இன்பம் எதும் உண்டாமானால், அவ்வின்பம் இணக்கமும் இன மும் அறிந்து கூடி இணங்கி வாழ்வோர்க்கு உரிய இன் பமே அல்ல. அவன் கண் காண அவர்கள் விளையாடும் பொழுது, அவன் அவர்களை லக்ஷியமின்றி ராஜநோக் காய்ப் பார்ப்பான். அவனால் மதிப்புப் பெற அவர்கள்

ஒருவர்க்கொருவர் முந்தப் பார்க்கும்பொழுது, அவன் உபேக்ஷையாய் அவர்களை விட்டு விலகுவதும் உண்டு. அவர்கள் அறிவிலிகள் — ஆதலால், அவர்கள் பேச்சைக் கேட்டு அவன் அலுப்புத் தீராது. அவனை விட்டுப் பிரிந்து தமக்கு இணக்கமான மற்றொருவனோடு உறவாடும் சுதந்தரம் அவர்களுக்கு இல்லையே—ஆனதுபற்றி, அவர்கள் உள்ளத்தின் பரிவையும் பரிவின் கோலத்தையும் காணும்பொழுது, அவனுக்கு ஆத்ம சம்மானம் உண்டாவதுமில்லை, அவன் உள்ளம் செய்நன்றி நினைப்பதுமில்லை. தன்னையன்றி மற்றொரு ஆடவனையும் காணாத பெண் பேதையின் முகமலர்ச்சியைக் கண்டு தான் பெற்ற பேறு யார் பெற்றாரென்று அவனுக்கு ஆத்மாபிமானம் உண்டாகவில்லை; அவன்மீது அந்தப் பெண்களுக்கு உள்ள காதல் யதார்த்தமோ அபத்தமோ எதென்று தெளிய வகை இல்லை. அன்றியும், அவர்கள் அவனைத் தொழுது உபசரிப்பது அத்தனையும் அவனை ஆனந்திப்பிக்கவல்ல, சக்களத்திக்கு மனத்துன்பம் வருத்தவேயென்று சிறுபான்மை அவன் சிந்தையிற் பட்டது. ஆதலால், அந்தத் தொழுகள்ளிகள் பாசத்தால் அவன் கட்டுப்படவில்லை. வேலை ஒழிந்து மீந்திருக்கும் வேளையில், அவன் ஏறவும் தாழவும் சற்றுச் சற்றுவேளை அவர்களை ஒப்புக்குத் தனித்தனி கண்டுபேசுவான். இதுதான் அவன் கொடுக்க அவர்கள் பெற்ற ஐக்கிய சின்னம். இவ்வகை ஐக்கிய சின்னத்தை ஒருவன் தான் அவமதி செய்பவனுக்கும் கொடுக்கலாமே. அன்றியும் இவ்வன்பில் ஆசை எது அச்சம் எது, இன்பம் எது துன்பம் எது.

**இம்லாக்:** — பெருமாட்டீ, நீர் இவ்வாறு எளிதிற் சிறைநீங்கியது பெரும்பாக்கியமென்று நெஞ்சு குளிர

நினைக்க நிமித்தம் உண்டு. வித்தியாபோஜனம் கிட்டாமல் மிகப்பசி உபத்திரவப்படும் மனதுடையோன் ஞானப் பஞ்சகாலத்தில் உமது மதுரபாஷிதம் எனும் சம்பிரம விருந்தைப் போக்கடித்துவிட உடன்படுவது எப்படி?

டேக்வா:—சிறிது காலம் என்னைச் சிறைவிட அவனுக்குத் திடசித்தம் உண்டாகவில்லையென்று எண்ணுகிறேன். இப்படி எண்ணுவதற்கு ஏது இது: சிறைவிடுவதாக அவன் வாக்கிட்டிருந்தும், கைரோவிற்குத் தூதனுப்பும்படி நான் அவனைக் கேட்கும்பொழுதெல்லாம் அவன் வேளைக்கொரு பக்குவம் சொல்லிக் காலம் கடத்துவான். நான் அவன் வீட்டிற் சிறையிருக்க, அவன் அடிக்கடி அயல் நாட்டகத்திற்குத் தாவடிபோய் வருவான். ஆசையின் அளவிற்குக் கொள்ளைப்பொருள் அகப்பட்டதுண்டானல், என்னைச் சிறைவிடாது மறித்துக்கொள்வானென்று எண்ணுகிறேன். தாவடிபோய்த் திரும்பிவரும் பொழுதெல்லாம் அவன் என்னை அதிவினயமாய் உபசரிப்பான். பிரயாண வரலாறுகளைச் சொல்வான். நான் சொல்வதைக் கேட்டு ஆனந்திப்பான். நக்ஷத்திர வித்தையில் எனக்குப் பின்னும் விற்பத்தி ஏற்றப் பார்ப்பான். என் கடிதங்களை அனுப்பிவிடும்படி நான் அவனை நெருக்கிக் கேட்டால், தான் சொல் திறம்பாத மானியென்றும் சுத்தசித்தனென்றும் சொல்லி என் மனக்குறையை ஆற்றுவான். மிகவும் பரிந்து வருந்திக் கேட்கும்பொழுது, சொன்ன சொல் புரண்டால் தன் மானத்திற்கு ஈனமென்று தான் வருமளவும் குடும்ப ஆட்சிகொள்ள என்னை விட்டு, விரைவில் தளத்துடன் தாவடிபோவான். அவன் இப்படி ஆய்ந்து ஓய்ந்து காலம் கடத்தியது கண்டு எனக்கு மிகு மனோபத்திரவம் உண்டாயிற்று; நீங்கள் என்னை

உரிய எத்தனம் யாவும் உற்சாகத்துடன் விரைவிற் செய்தான். அவன் வீட்டில் என் கூட்டாளிகளாயிருந்த ஸ்திரீகளிடத்தில் செலவுபெற்றுப் புறப்பட்டேன். அவர்கள் ஏனோதானோவென்று எண்ணமற்றிருந்தார்கள்.

இந்தப்படிக்கு பாங்கி சொன்னதை கேட்டு முடிந்தவுடன் எழுந்து கோயா அவனைத் தழுவிக் கொண்டாடினான். பின்பு ராவிலவன் அவன் வாக்கிட்டிருந்த பொன் ஐம்பதுக்கு நூறு அவன் கையிற் கொடுத்து அராபியனுக்குக் கொடுப்பித்தான்.



# 40-ம் அதிகாரம்.



## பண்டிதன் ஒருவன் சரித்திரம்.



கைரோவிற்குத் திரும்பிப் போய் எல்லாரும் ஓரிடத்திற் கூடிவரப்பெற்ற பாக்கியத்தை நினைந்து மகிழ்ந்து, அடிக்கடி எவரும் இணைப்பிரிந்து வெளிப்படாதிருந்தார்கள். ராஜகுமாரன் கல்வியில் ஆசைகூரத் தொடங்கினான். வித்தியாவிரதனாகி, இனித் தான் உள்ளளவும் ஏகாந்தமாயிருந்து வித்தியாவிமர்சை செய்துவர அபிப்பிராயப்பட்டிருப்பதாக அவன் ஒரு நாள் இம்லாக்கிற்குச் சொன்னான்.

இம்லாக்:—நாம் இந்த வியாசத்தைக் கடைப்பிடியாய்க் கொள்ளுமுன், இதில் உண்டாம் இடையூறுகளைத் தேறவிசாரித்து, உள்ள நாள் உள்ளமட்டும் பிறர் சகவாசமின்றித் தன்னந்தனியே இருந்து பயின்றவர்களைக் கண்டு

வார்த்தையாகப் பார்ப்பது ஆவசியகம். ககோள வித்வ சிரோமணியென உலகெல்லாம் வியக்கத்தகும் நிபுணர் ஒருவருடைய நக்ஷத்திராலயத்தினின்று இப்பொழுது தான் திரும்பிவருகிறேன். அவர் சந்திர சூரிய நக்ஷத்திராதிகளின் ரூப கமன சூக்ஷ்மத்தை நாற்பது வருஷ காலம் அவதானம் செய்துவருகிறார். அனந்த கணிதங்களிலும் பயின்று பயின்று அவர் அறிவு அகன்றிருக்கின்றது. அவர் மாசம் ஒரு முறை தமது நண்பர் சிலரை வரவழைத்துத் தாம் கிரகித்த அனுபவங்களைச் சொல்வார். அவர் தேடிக் கண்டபிடித்த கல்விப்புதைபொருளை வியந்து அவர்கள் களிகூர்வார்கள். மதிக்கத்தக்க கல்விமானென்று என்னை ஒருவர் அவரோடு அறிமுகமாக்கிவிட்டார். ஒரேயொரு துறையில் இறங்கி வெகு காலமாய் அதில் சித்தைவைத்து அதை நன்றாகச் சாதனை பண்ணிவரும் நிபுணருக்கு வேறு கல்வித்துறைகளுக்கு உரிய சங்கற்பங்கள் பிழைபாடாய்த் தோன்றுவதன்றி. பல துறைகளை நன்குணர்ந்து சொல்வளமுடையோரெனப் பிரக்கியாதி பெற்றவர்களைக் கண்டால், அவர்களை மரியாதை செய்து இனிது வாழ்த்துவது அவர் இயற்கை. என் பேச்சைக் கேட்கக் கேட்க அவருக்கு ஆனந்தம் உண்டாயிற்று. என் பிரயாண வரலாறு கேட்டு அவர் முகம் மலர்ந்தது. சிறிதுநேரம் தாரகாகணத்தை மறந்துவிட்டு, இறங்கிப் பூலோக வியாபாரத்தில் புலன் செலுத்துவது அவருக்கு ஆனந்தமாயிருந்தது.

அடுத்த விடுமுறைத் தினத்திலும் நான் அவரைக் கண்டு பேசினேன். அன்றையதினமும் என் வாய்மொழி அவருக்குத் தேன்மொழியெனத் தித்தித்தது. அன்று பிடித்து அவர் தினவலாயறைக் கிரமத்தைத் தளரவிட்டு,

எனக்கு இஷ்டமானபொழுதெல்லாம் தடையறப் போகவும் தம்மைக் கண்டுபேசவும் இடம் தந்தார். நான் போகும் சமயந்தோறும் அவர் மனம் அதன் துறையில் பிரவர்த்தித்திருக்கும்; என்னைக் காணவும், அவர் என்னை வேண்டி, தமது முயற்சியைச் சந்துஷ்டியாய் நிறுத்திவிட்டு என்னுடன் வார்த்தையாடுவார். எங்கள் இருவரில் ஒருவர் அறிய விரும்பியதை ஒருவர் விஸ்தாரம் அறிந்திருந்ததனால், ஒருவர்க்கொருவர் சொல்வது கேட்டு இருவரும் ஆனந்தமடைந்தோம். நாளொருவண்ணம் எனக்கு அவரால் மதிப்பு ஏறிற்று. அவர்க்குள்ள ஆழ்ந்த கல்வியைப்பற்றி அன்றன்று எனக்கு மேன்மேலும் வியப்பு உண்டாதற்கு நிமித்தம் கண்டேன். அவர் நுணுகி வியாபித்த புத்தியும், அகன்று பலமுற்ற ஞாபகமும், கிரமப்பிரசங்க சக்தியும், தெளிமொழியு முடையவர்.

அவர் மனநிறையும் தயையும் அவர் கல்விக்குச் சமமாயிருக்கும். பிறர்க்குச் சொல்லுதவி பொருளுதவி செய்யச் சமயம் கிட்டும்பொழுதெல்லாம், அவ்வுத்தமர் உள்ளாழ்ந்து செய்துவரும் அரிய வித்தியாவிசாரணைகளையும் தமக்கு முக்கிய இஷ்டமான துறைகளிற் பயில்வதையும் சந்தோஷமாய் நிறுத்திவிடுவார். அவர் ஏகாந்தமாயிருக்கும் உள்ளுக்குள்ளான ஒடுக்கிடத்திலும், அவருக்கு அவகாசம் அற்பமேனும் இல்லாத வேளையிலும் அவர் உதவியை விரும்பும் சர்வ ஜனத்திற்கும் அவரைத் தடையறப் போய்க் காண இடம் கிடைக்கும். அவர் சொல்லியது:—"நான் தவிர்ப்பது சோம்பையும் இன்பகாலக்ஷேபத்தையும், பிச்சைவாங்கிப் பிழைக்க வருவாரை அல்ல. அவர்களை வரவிடாமல் நான் ஒருபொழுதும்

கதவைப் பூட்டிக்கொண்டு இரேன். ஆகாயமண்டவத்தில் உள்ள அதிசயங்களை ஆய்ந்து அறிய இஷ்டமுள்ளவர்களுக்கு இடம் உண்டு. எல்லோரும் அறியவேண்டுமென நிபந்தனை இல்லை. அறம் செய்வதோ ஒருவர் இருவரல்ல, யாவரும் கைக்கொள்ளவேண்டுமென எப்பொருட்கும் இறைவன் விதித்த கற்பனை."

**நிகாயா**:—இம்மஹானுபாவர் சுகசெல்வர்தாம் — இது வாஸ்தவம்.

**இம்லாக்**:—'நித்தம் போக முற்றம் சலிக்கும்' எனப் பழமொழி சொல்லும் பண்பு அவருக்கு இல்லை. வரவர அடுத்தடுத்துப் போய் அவரைக் காணத் தலைப்பட்டேன். எனக்கு நாளொருவண்ணம் அவர் சம்பாஷணையில் ஆசை பெருகிற்று. அவர் உன்னத புருஷர்—அகந்தை என்பது அவருக்கு இல்லை, அவர் அதி விநயமுள்ளவர்—ஒப்பாசாரம் அவர் இயற்கையல்ல, அவர் எவருடனும் தாராளமாய்ப் பேசுவார்—ஒட்டோலகம் அவர் கிட்டவும் வராது. ராஜபிராட்டியாரே, அவரைப்போல் அத்தனை சுகம் பெற்றவர்கள் இவ்வுலகில் இல்லை என ஆரம்பத்தில் நானும் தம்மைப்போல எண்ணமிட்டிருந்தேன். தங்கள் சுகபோகமே போகம் என்று நான் அவரைப் பலகாலும் வாழ்த்திவந்தேன். என்னென்ன சொன்னாலும் பராமுகம் செய்யாமல் இதயபூர்வமாய்க் கேட்கும் அவர் தமக்கு எவராவது முகஸ்துதி சொல்லும்பொழுதோ கேட்டும் கேளாதவர்போல் இருப்பார்—எதாயினும் சாதாரண உத்தரம் சொல்லி, உடனே அவ்விஷயத்தை விட்டு மற்றொரு விஷயத்தை எடுத்துச் சம்பாஷிக்கத் தொடங்குவார்.

பிறர் சொல்லை மனம் உவந்து கேட்டும், தமது சொல் லாற் பிறருக்கு உவப்பு உண்டாக்கியும் இருந்த அவரை ஏதோ மிகு மனத்துயர் பீடித்ததென்று எண்ண விரைவில் நிமித்தம் கண்டேன். பெரும்பாலும் அவர் பேசிக்கொண் டிருக்கும்பொழுது, காதலித்து ஆதித்தனை அண்ணாந் துபார்த்துச் சடிதியில் பேச்சை நிறுத்திவிடுவார். பிற ரின்றி, நானும், அவருமாக இருக்கும்பொழுது சிலவேளை அவர் என்னை உற்றுப் பார்த்துக்கொண்டிருப்பார். வெளியிடாது அடக்கிக்கொள்ளும்படி நிர்ணயித்திருக் கும் ஏதோ ஒரு விஷயத்தை எனக்கு வாய் திறந்து சொல்ல விரும்பும் குறிப்பு அவர் முகத்தில் விளங்கும். தம்மைக் காண விரைந்துவரும்படி அவர் அடிக்கடி எனக் குச் செய்திசொல்லி அனுப்புவார். வரச்சொல்லி ஆள் அனுப்பும்பொழுது, நான் ஆடங்கமின்றி அவரிடத்திற் குப் போவேன். போய்ச் சேர்ந்தபின் நூதனமாக ஒன் றும் அவர் எனக்குச் சொல்லுகிறதில்லை. சிலவேளை அவரைக் கண்டு திரும்பி வரும்பொழுது அவர் அடிக் குள்ளே மீண்டும் வரவழைப்பார். அழைத்து நாலைந்து நிமி ஷம் மௌனமாயிருந்து அப்பால் செலவுகொடுப்பார்.



## 41-ம் அதிகாரம்.



### சகோள சாஸ்திரி தன் மனோபத்திரவத்தின் காரணத்தை வெளியிட்டது.



கடைசியில், அவர் வெளியிடாது அடக்கிக்கொண்ட மர்மத்தை வெளியிடச் சமயம் கிட்டியது. நேற்றி

ராத்திரி நானும் அவரும் வியாழனைச்சேர்ந்த உபகிரகம் ஒன்று உதயமாவதைப் பார்க்கும்படி அவருடைய மாடத்தின் சிகரத்தில் உட்கார்ந்திருந்தோம். சடிதியில் புயலடித்து ஆகாயம் எங்கும் மப்பாயிருந்தது. அதனால் கிரகோதயம் பார்க்கச் சந்தர்ப்பிக்கவில்லை. இருட்டில் சற்றுவேளை ஒன்றும் பேசாதிருந்தோம். பின்பு அவர் எனக்குப் பின் வருமாறு சொன்னார்:—"இம்லாக், உன் உறவு நான் பெற்ற பேறு அனைத்தினும் பெரும்பேறென்று வெகுநாளாய் நினைத்திருக்கிறேன். அறிவின்றி மனநிறை இருந்தால், அம்மனநிறைக்குப் பலமும் இல்லை, அதனாற் பயனும் இல்லை; மனநிறையின்றி அறிவு இருந்தால் விக்கினமும் திகிலும் விளையும். விசுவாசபாத்திரர்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று. அருள்—அனுபவக் காட்சி—ஆண்டகைமை. இம்மூக்குணங்களும் உன்னில் ஒருங்கு திரண்டிருப்பதைக் கண்டுகொண்டேன். நான் நாட்பட நிர்வகித்துக்கொண்டுவரும் உத்தியோகம் ஒன்று உண்டு. எனக்குச் சாங்காலம் கிட்டும்பொழுது நான் அவ்வுத்தியோகத்தை விட்டுவிடவேண்டும். பலம் குன்றி மரணயாதனை தொடங்கும் நாழிகையில், என் உத்தியோக பாரத்தை உன் தோள்மீது இறக்கிவிட்டுப்போவது எனக்கு இஷ்டம்."

என் யோக்கியதையைச் சுட்டி அவர் இவ்வாறு பகர்ந்த சாட்சி எனக்கு அத்தனையும் கௌரவமென்று எண்ணி, நான், ஐயா, எதெது உமது சுகத்திற்கு ஆகுமோ, அதெல்லாம் என் சுகத்திற்கும் ஆகும் என்று உறுதிமொழி சொன்னேன்.

அப்பால் அவர் சொல்லியது:—இம்லாக், கேள்—என் சொல்லை உன் மனம் எளிதில் நம்பாது. ஐந்து வருஷ

காலமாய்க் காற்று மழை வெயில்முதலிய கால விசேஷத்தைக் கிரமப்படுத்தி, வேனிற்காலமுதலிய பருவங்களை வகுத்து நிர்வகித்துவருகிறேன். ஆதித்தன் என் சொற் கேட்கின்றது; எனது ஆணைப்படி உத்தராயணத்தினின்று தெட்சணாயனத்திற்கும் தெட்சணாயனத்தினின்று உத்தராயணத்திற்கும் செல்கின்றது. நான் ஒரு சொல் சொல்ல, மேகம் புஷ்களமாய் மழை வருஷிக்கும்; நீல்நதி என் கற்பனைப்படி பிரவாகிக்கும்; சுவாதி நட்சத்திரத்தின் ஆக்குரோஷத்தை அடக்கி, கற்கடகத்தின் வேகத்தை ஆற்றினேன். பிருதிவிமுதலிய பூதங்களில் வாயு ஒன்றுமாத்திரம் எனக்கு அடங்காதிருக்கின்றது. கிராந்தி பாதங்களில் ஆதித்தன் நிற்கும்பொழுது அடிக்கிற கடும் புயலைத் தடுக்கவும் அடக்கவும் எனக்கு வல்லமை இல்லாதேபோயிற்று. அந்தப் புயலில் இறந்தோர் சேனைபெயர். இந்தக் கம்பீரமான உத்தியோகத்தை நடுவுநிலைமை தவறாமல் நிர்வகித்துக்கொண்டுவருகிறேன். மண்ணுலகில் வாழும் சர்வ தேசத்தார்க்கும் மழை-வெயில் இரண்டையும் பக்ஷபாதமின்றிச் செம்பாகமாய் விபாகித்துக் கொடுத்துவருகிறேன். மேகத்திரளைச் சில தேசங்களில்மாத்திரம் நிறுத்தியிருப்பேனானால், அல்லது ஆதித்தனை உத்தராயணத்திலாயினும் தெட்சணாயனத்திலாயினும் கட்டுண்டு நிற்கும்படி செய்திருப்பேனானால், பூலோகத்தில் படுபாதி மனுஷருக்கு என்னென்ன பீடைகள் சம்பவித்திருக்குமோ?



# 42-ம் அதிகாரம்.

## ககோள சாஸ்திரியின் அபிப்பிராய விளக்கமும் நிர்த்தோஷ நிர்ணயமும்.

நாங்கள் உட்கார்ந்த அறையில் தீபம் இல்லையே—அவர் சொன்ன சொற் கேட்டு என் உள்ளத்தில் மலைவும் சந்தேகமும் உண்டானது இருட்டில் என் முகக்குறியால் அவருக்குத் தோன்றியதுபோலும் — சற்றுப்பொறுத்து அவர் தொடருமாறு சொல்ல ஆரம்பித்தார்:

**ககோளசாஸ்திரி:**—என் சொல்லை நீர் எளிதில் நம்பாதிருப்பது அதிசயமுமல்ல, எனக்கு அபசாரமுமல்ல. ஏன், — எனக்குமுன் இவ்வுத்தியோக பதவி மனுஷர் எவர்க்கும் அமையவில்லையெனத் தோன்றுகிறது. இந்தப் பிரதிஷ்டை எனக்கு அனுக்கிரகமோ நிக்கிரகமோ அறியேன். இந்த வரம் பெற்றபின் என் மனோசுகம் மிகவும் குன்றியது. ஓயாமல் எப்பொழுதும் ஜாக்கிரதையாயிருப்பதனால், எனக்கு உண்டாகும் ஆயாசம் மிகுதி. நான் அதைத் தாங்கும் தரமல்ல. நெஞ்சறிய என் மனம் சுத்தமாயிருந்ததனாலேதான் அந்த ஆயாசத்தைத் தாங்கிக் கொண்டுவருகிறேன்.

**இம்லாக்:**—ஐயா, இவ்வரிய உத்தியோகபதவி தமது வசப்பட்டு எவ்வளவு காலம் ஆயிற்று?

**ககோளசாஸ்திரி:**—வானத்தின் தோற்ற விகாரங்களைப் பிரதிதினமும் கருத்தாய்க் கவனித்துக்கொண்டு வந்த என் நெஞ்சில் பத்து வருஷத்திற்கு முன் ஒரு நாள் கால

பேத நிர்ணயசக்தி எனக்கு அமையுமேயானால், மண்ணு லகிற் சஞ்சரிப்பவர்களுக்குத் தானியாதிகள் மேலுமே லும் விர்த்திக்கும்படி செய்யமாட்டுவேனு எனச் சிந்தனை பிறந்தது. இச்சிந்தனை என் நெஞ்சில் ஆணி அறை ந்தது போல நிலைபெற்று நீங்காதிருந்தது. இராப்பகல் எப்பொழுதும் யோகநிஷ்டையில் இருந்து, தேசங்கள் தோறும் தழை செழிக்க மழை வருஷிக்கும்படி செய்வ தும், மழை விட்டபின் அதற்குத்தக்க வெயில் எறிக்கும் படி செய்வதுமாக மனோராச்சியபாரம் தாங்கிவந்தேன். எனக்கு நன்மை செய்ய மனம் இருந்தது. இம்மாத்திரம் தான், கிராணி உண்டாமென்று என் நினைவில் தட்ட வில்லை.

ஒரு நாள் கடுமெயிலால் கழனிப்பயிர் எல்லாம் வாடி உலர்ந்து கருகிப்போவதைப் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது, தென் மலைத்தொடரில் மழை வருஷிப்பித்து நீல்நதியைப் பிரவாகிப்பிக்க வல்லவனாகும் அபேட்சை சடிதியில் என் உள்ளத்திற் பிறந்தது. மனோசங்கற்ப வேகத்தில் மழை வருஷிக்கக்கடவது என்று கற்பித் தேன். சற்றுச் சென்று பிரவாகம் வந்தது. நான் கற்பித்த காலத்திற்கும் பிரவாகம் வந்த காலத்திற்கும் இடையிற் சென்ற காலத்தை அளவிட்டுப்பார்த்து, மழைபெய்யக் கடவதென்று என் வாக்கினின்று பிறந்த சொற்கேட்ட க்ஷணமே மேகம் மழை வருஷித்ததென்று கண்டேன்.

"இம்லாக்:—மற்றேதாயினும் ஒரு காரணத்தால் இவ் வாறு சந்தர்ப்பித்திருக்கலாகாதா? மலையில் மழை வரு ஷிக்கும் அன்றையதினமே நீல்நதி எப்பொழுதும் பிரவா கிக்கிறதில்லையே.

ஒடுங்கும். விருத்ததசைக்கு உரிய பலக்ஷயம் எனக்கு மேலுமேலும் உண்டாகின்றது. மகுடபட்டத்தை முறை வழுவற நடத்திவிக்கும் இவ்வற்பாத பிண்டமும் இறந்து மண்ணொடு மண்ணாய்ப் போகும் காலம் விரைந்து வரும். எனக்குப்பின் இப்பதவிக்கு ஒருவனை நியதிசெய்யும் விசாரம் என் இதயத்தை கொடுநோயாய்ப் பிடித்தது. நான் அறிந்தோர் அனைவரையும் இராப்பகல் ஓயாது நினைத்துத் தாரதம்மியம் பார்த்தேன். இவ்வுயர்பதத்திற்கு உன்னளவு யோக்கியதையுடையோன் ஒருவனையும் இன்றளவும் காணேன்.



# 43-ம் அதிகாரம்.



## ககோள சாஸ்திரி இம்லாக்கிற்குத் திட்டம் சொல்லியது.

ஆனதுபற்றி, பூலோகக்ஷேமத்திற்கு இன்றியமையாத புத்திமதிகள் சொல்லுவன்—அவதானமாய்க் கேட்பாயாக. பார் ஆளும் மன்னர் பிரதிபாலிக்கும் பிரஜைகள் தொகை அத்தனை பெரிதா—அல்ல, நாற்பது ஐம்பது லக்ஷத்திற்கு அதிகப்படாது. அந்தப் பிரஜைகளுக்கு நன்மை தீமை உபகாரம் அபகாரம் அதிகம் செய்ய அம்மன்னரால் ஆகாது. இத்தனை அற்ப ராஜாதிகாரத்தை முறைமையாய் நிர்வகித்துவருவது கஷ்டமென்று அவர்கள் மனம் தத்தளிக்கின்றது. இவ்வளவிற்கு இவ்வளவானால், பஞ்சபூதங்களை அதனதன் இயற்கை தவறாது பிரவர்த்திக்கச்செய்து, ஒளியும் வெப்பமும் தரும் மகத்தான சூரியசந்திராதி

விடாது நிறுத்தி உன் தேசத்தில் வருவிப்பிக்காதே—
நமக்கு நீல்நதிப் பிரவாகம் போதுமே.

இத்திட்டங்களைக் கிகோசாஸ்திரி சொல்லக் கேட்டு,
நான் அதிகாரம் செலுத்த வல்லவனாகும்பொழுது மன
நிறை வழுவாது நேர்கோல்போல நின்று செலுத்துவே
னென்று அவருக்குப் பரவசம் சொன்னேன். அப்பால்
அவர் என் கையைப் பிடித்துப் பரிவாய் உபசரித்து எனக்
குச் செலவுகொடுத்தார். பின்னும் அவர் "இனி என்
மனம் இளைப்பாறும், இனி எனது அருள் என் மனவ
லையிலை நசிக்காது. ஞானமும் சுகுண சுகிர்தமுமுள்ள
ஒருவனைக் கண்டேன். அகித்தமண்டலாதீன சுதந்தரத்
தை நான் அவனுக்கு மனமகிழ்ந்து கொடுத்துவிடுவேன்"
என மொழிந்தார்.

சக்கரவர்த்தி குமாரன் இந்தக் கதையை மிகு வணக்க
மாய்க் கேட்டான். குமாரியோ குறுநகை நகைத்தாள்.
பெக்வா குலுக்கென்று சிரித்தாள். அதுகண்டு, இம்லாக்
"பெருமாட்டிகாள், மனுஷருக்கு உண்டாம் உபத்திர
வம் அனைத்திலும் தாங்கரிய மிகக்கொடிய உபத்திர
வத்தை நீங்கள் இப்படிப் பரிகாசம்பண்ணுவது தர்மமு
மல்ல, புத்தியுமல்ல. இவரைப்போல் அறிஞரும் நெறி
நின்றவரும் இல்லை; ஆனால், இவருக்கு வந்த ஆபத்து
எல்லாரையும் பிடித்தாலும் பிடிக்கும். இகத்தில் மனுஷ
ருக்கு அறிவு—இளமை—இன்பம்—உயர்வு—சுற்றம்—செல்
வம்—பெருமை—யாக்கை இவை ஒன்றும் சதமல்ல. இவற்
றுள் எல்லாம் அறிவுநிலையாமை ஒன்றே அதிக திகிலும்
துயரும் வருத்தும்" என எச்சரித்தான்.

அதுகேட்டு ராஜகுமாரிக்குப் புத்தி தெளிந்தது;
பாங்கி வெட்கி விறைத்தாள். இதை நெஞ்சு அழுந்த நினை

மென்று எண்ணுவார் இல்லை. அது அடக்கமற்று வசனத்தையும் கிரியையையும் தன் வசமாக்கிக்கொள்ளும் பொழுதன்றி, அதைப் பைத்தியமென்று சொல்லுகிறதில்லை.

மௌனமாயிருந்து விசாரஞானத்தில் மிதந்தப்பி இன்புறுவோர்க்குக் கற்பனாசக்திக்கு இடங்கொடுத்துச் சங்கற்பத்தைச் சிறகுவிரித்துப் பறக்கவிடுவது பெரும்பாலும் மனதிற்கு இனிய விநோதமாம். தன்னந்தனியே இருக்கும் சமயந்தோறும் நாம் உழைத்தவண்ணமாயிருக்கிறதில்லை. உபாயம் சூழ்ந்தறியும் முயற்சி பிரசண்டவேகமுள்ளது. அது நீடித்திராது. சிலவேளை சோம்பும் தெவிட்டும் மிஞ்ச, விசார ஞானவார்த்தை ஒழிந்துபோவதும் உண்டு. புறத்தில் பார்க்க ஒன்றும் இல்லாதவனுக்கு அகத்தில் இன்பகாலக்ஷேபம் வேண்டும். அவன் பழுதையைப் பாம்பெனவும், தறியை மகனெனவும், கானலை நீரெனவும் காண்பதுபோல, தன்னைத் தான் அல்லாத ஒன்றாக விகற்பித்துக் காண்பான். தன் இயற்கையை நினைந்து மகிழ்ந்திருப்பவன் யாவன்? ஒருவனும் இல்லையே. அவன் எதிர்காலம் எனும் கரைகாணாச் சமுத்திரத்தில் அகல உலாவுவான்; மனோசங்கற்பத்தில் தோன்றும் பதவிகள் அனைத்தினுள்ளும் தனக்குத் தற்சமயத்திற்கு உவப்பான பதவியை ஆசையாய்த் தெரிந்துகொள்வான்; அசாத்தியமான போகங்களில் ஆசைவைத்துப் பொழுது கழிப்பான்; பெறுதற்கரிய ராஜரீகம் பெற்றதாகப் பாவித்து அகங்கரிப்பான்; அவன் மனம் கண்ட கூத்தெல்லாம் ஆடும்; சர்வ இன்பங்களையும் பலவாறு புணர்த்திக் காணும்; ஜன்ம விசேஷத்தாலும் பொருட்செல்வத்தாலும் எத்தேசகாலமும் எவர்க்கும் அமையாத இன்பப் பெருக்கில் உண்டாடிக் கொண்டாடும்.

காலக்கிரமத்தில், ஏதாயினும் ஒரு சங்கற்பத்தொடரில் அவதானம் நிலைகொள்ளும்; அறிவிற்கு உரிய மற்றெல்லா அனுபவங்களையும் அற்பமென்று தவிர்த்துவிடும். மனமானது சலிப்புறும்பொழுதும், அவகாசம் காணும் பொழுதும் அடிக்கடி தனக்குப் பிரீதியான சங்கற்பத்தை நினைக்கும்; நினைந்து, மெய்ம்மை கசந்து வெறுப்புத் தட்டும்பொழுதெல்லாம் தீங்கனி ரசத்தினும் மிகு தித்திப்புள்ள பொய்ம்மை எனும் அமிர்தத்தை விருந்துண்டு மகிழும். வரவர, தன் அரசாட்சி நிலைபெறச் சங்கற்பத்திற்கு முதலில் தடுக்கும், அப்புறம் சிறிதுகாலம் கழிந்து, நிஷ்டூரமும் உண்டாம். அப்பால், அசத்தியம் சத்தியமென வழங்கத்தொடங்கும்; அபத்தமான கோட்பாடுகள் மனதில் நீங்காவண்ணம் நிலைகொள்ளும்; ஜீவனுள்ளளவும் ஆனந்தபரவசம் உண்டாக்கும் சொப்பனங்களோ, வியாகுலம் வருத்தும் சொப்பனங்களோ காணப்படும்.

ராஜநாயகமே, இதுதான் ஏகாந்தமாய் நாள்கழிப்பவர்க்கு உண்டாம் விக்கினங்களில் ஒன்று. ஏகாந்த வாழ்வு சற்குணவிர்த்திக்கு எப்பொழுதும் அனுகூலமல்லவென்று சன்னியாசி வாய்மொழி பிறந்ததும், ஞானசித்திக்கு எப்பொழுதும் வாய்க்காதென்று ககோளசாஸ்திரி பட்ட பாட்டால் நிதரிசனப்பட்டதும் அறிவீர்களே.

**பாங்கி**: — நானே அபிஸினிய ராணியென்று சங்கற்பித்திருப்பதை இனி ஒழித்துவிடுவேன். ராஜகுமாரியால் எனக்குக் கிடைத்த விடுமுறைக் காலங்களில், பெரும்பாலும் ராஜதரிசனக்கிரமம் முதலிய பல ஏற்பாடுகள் செய்தேன்; வலியாருடைய அகந்தையை அடக்கினேன்; எளியார் செய்த மனுக்களைக் கேட்டு அவர்கள் மனக்குறையைத் தவிர்த்தேன்; விசேஷ நிலவளம்பார்த்து

நூதன அரண்மனைகளைச் சமைப்பித்தேன்; மலைச்சிகரங்களில் சோலைகள் தோப்புகளை நாட்டுவித்தேன்; ராஜோபகார கிர்த்தியம் செய்து ஏக்களித்தேன். வரவர, ராஜகுமாரி எழுந்தருளிவரும் சமயத்தில் வணக்கம் செய்வதை முக்காலே மூன்றுவீசம் மறந்துபோனேன்.

**ராஜகுமாரி:**—நான் மனோபாவனையில் இடைச்சியாட்டம் ஆடுவதை இனி விட்டுவிடுவேன். இடைத்தொழில் செய்வோர்க்கு உள்ள சாந்தத்தையும் நிர்த்தோஷத்தையும் நினைக்கநினைக்க, பெரும்பாலும் என் மனப்பதைப்பு அடங்கியது. நாள் ஏற ஏற, என் வீட்டினுள் காற்றுக் கிசுகிசென்று வீசுவதையும் ஆடு அழுவதையும் காதாரக் கேட்டேன். சிலவேளை ஆட்டுக்குட்டி புதரில் நுழைந்து மாட்டிக்கொண்டது கண்டு சிக்கறுத்து வெளிப்படுத்தி விட்டேன். சில ஆட்டைப் பிடிக்க வந்த ஓனாயைத் துறட்டுக்கோலால் அடித்துத் துரத்திவிட்டேன்; குப்பக்காட்டு இடைச்சியர் உடுக்கும் ஆடை ஒன்று, வேய்ங்குழல் ஒன்று வைத்திருக்கிறேன். என் சங்கற்பத்திற்கு உபபலமாக, நான் அவ்வாடை உடுத்து, வேய்ங்குழல் ஊதி, மந்தை என்னைத் தொடர்ந்து வருவதாக நினைந்திருந்ததும் உண்டு.

**ராஜகுமாரன்:** — நீங்கள் சொன்னதைக்காட்டிலும் அதிக விக்கினம் உண்டாக்கும் சங்கற்ப ஆனந்த சாகரத்தில் நான் மூழ்கியிருந்ததை அறிக்கை செய்கிறேன். அக்கிரமம் அனைத்தையும் தலைப்படவிடாது அடக்கி, சீர்ப்பிழை யாவையும் திருத்தி, சாந்த சித்தரும் நிர்த்தோஷிகளுமாய் வாழும்படி பிரஜைகளைப் பிரதிபாலித்து, ஒருவிதத்திலும் குறைவராமல் துரைத்தனம் செய்வது சாத்தியமென்று அடிக்கடி சங்கற்பித்துப் பார்த்தேன். சீர்ப்

பிழை திருத்தும்படி என் சங்கற்பத்தில் தோன்றிய உபாயங்கள் எண்ணித்தொலையா; காரியத்திற்கு உதவும் சட்ட திட்டங்களும், தேசக்ஷேமத்திற்கு அனுகூலமான கட்டளைகளும் அநேகம். ஏகாந்தமாயிருக்கும்பொழுது இது தான் எனது கேளிக்கை; சிலவேளை இதே நான் வருந்தி உழைக்கும் உழைப்பு. என் பிதாவும் சகோதரரும் இறந்துபோகவேண்டுமென்று நான் ஒரு முறை எவ்வளவும் மனம் பதைக்காமல் எண்ணினேன். இப்பொழுது அதை நினைக்க என் நெஞ்சு திடுக்கிடுகின்றது.

இம்லாக்:—சங்கற்ப உபாயங்களின் சித்தி இத்தன்மையதே. இவ்வகை யுக்திகள் கருக்கொள்ளும் பருவத்தில் விபரீத யுக்திகளென்று நமக்குத் தெரியும். அப்பால் பழகப்பழக, அவை பைத்தியமென்று நம் மனக்கண்ணுக்குத் தோன்றாது மறைந்துபோம்.

## 45-ம் அதிகாரம்.

அவர்கள் ஒரு விருத்தனுடன் வார்த்தையாடியது.

பொழுதுபட்டு வெகு நாழிகை சென்றது. அவர்கள் வீட்டுக்குத் திரும்பிப்போக எழுந்தார்கள். "எழுந்து, நீல்நதிக் கரைவழியாய்ச் செல்லும்பொழுது, தெண்ணீரில் தளம்பித் தோன்றும் சந்திரனது நிறையொளியைக் கண்டு, ஆனந்த பரவசமடைந்தார்கள். ஒரு விருத்தர் சற்றெட்ட நின்றார்; அறிஞர் சபையில் அவர் பிரசங்கித்ததை ராஜகுமாரன் பல நாள் கேட்டதுண்டு. அவர் எட்ட நின்றது கண்டவுடன், ராஜகுமாரன், "அதோ

நிற்கும் புருஷருக்குப் பருவம் முதிர ஆசைமுதலிய மனோவிகாரங்கள் அடங்கிப்போயின; விவேகதீக்ஷண மோ மழுங்கவில்லை. இதுவரையும் விஷயவிசாரத்திற் பொழுதுபோக்கிக்கொண்டிருந்த நாம் நித்திரைசெய்யப் போகுமுன் அவரைக் கண்டு, மனோசஞ்சலத்தால் வருந்து வோர் வாலிபர்மாத்திரமோ, தள்ளாத பருவத்திற் சஞ்சல நிவிர்த்தி உண்டாமோ எனும் இச்சந்தேகம் தெளியும் பொருட்டு, இம்முதிர்வயசில் உம்மைக்குறித்து என்ன நினைக்கிறீர்–உமது இன்பதுன்பம் என்ன என்று கேட் டறிவோம்" என மொழிந்தான்.

இவ்வாறு ராஜகுமாரன் சொல்லி அடிக்குள்ளே விருத் தர் சமீபித்து, அவர்களுக்கு அபிவந்தனம் செய்தார். அகஸ்மாத் வழியில் எதிர்ப்பட்ட அவரைத் தமக்குப் பரிச் சயமானவர்போல, அவர்கள் பிரதிவந்தனம் செய்து அழைத்துக்கொண்டுபோனார்கள். விருத்தர் முகமலர்ந்து அவர்களுடன் வார்த்தையாடினார். அவர் கூடியபின் அவர்களுக்கு வழித்தூரம் சற்றும் தோன்றவில்லை. அவர் கள் தம்மைப் பராமுகம் செய்யாதது கண்டு விருத்தர் மனம் பூரித்தது. வீடு சேருந்தனையும் கூடிப்போன அவர் ராஜகுமாரன் வேண்டிக்கொண்டதனால் வீட்டிற் பிரவேசித்தார். அங்கு அவர்கள் அவரைக் கௌரவ ஆச னத்தில் வீற்றிருத்தி, திராக்ஷாரசமும் தீம்பண்டம் பலவும் அவர்முன் வைத்தார்கள்.

**ராஜகுமாரி**:—ஸ்வாமீ, அஸ்தமனகாலத்தின் பின் வெளி யில் உலாவுவது பண்டித சிரோமணியாகிய தமக்குச் சொல்லரிய ஆனந்தமாயிருக்குமே. அவிவேகிகளாகிய வாலிபர் மனதிற்கு அவ்வானந்தம் எட்டுமா—எட்டாது. கண்ணுக்குத் தோன்றும் சராசரம் அனைத்தின் குண

காரண சூக்ஷமம் தமக்குத் தெரியும். ஆறு பெருகுவது இன்ன விதிப்படி என்று அறிவீர்கள்; கிரகவட்டகால கணிதம் தமக்குத் திருணம்; சர்வமும் தமது நெஞ்சகத்தில் விசார ஞானத்தைப் புகட்ட, தமது பிரபாவத்தைப்பற்றித் தமக்கு மேலுமேலும் உணர்வுறுதி உண்டாம்.

**விருந்தர்:**—பிராட்டியாரே, உல்லாசமும் திடகாத்திரமுமுள்ளவர்களுக்கு வெளியில் உலாவிவருவது இன்பம். பருவம் முதிர்ந்தவர்களுக்கு ஆரோக்கியம் அமையமானல், அதுவே போதும். எனக்கு இவ்வுலகில் இனிப் புதுமை ஒன்றும் இல்லை: எண்திசையும் பார்க்கும்பொழுது, நான் உல்லாசமாயிருந்த காலத்தில் கண்டவைகளையே காண்கிறேன். ஒரு மரத்தோடே சார்ந்துகொண்டு நிற்கும்பொழுது, பிரேதக்குழியில் இப்பொழுது பேச்சு மூச்சற்றிருக்கும் இஷ்டர் ஒருவருடன் நீல்நதி வருஷம் ஒரு முறை பிரவாகிப்பதைப்பற்றி முன் ஒரு சமயத்தில் நான் தர்க்கித்துக்கொண்டிருந்தது இம்மர நிழலிலே தானென்று என் ஞாபகத்தில் வருகின்றது. வானத்தை அண்ணாந்துபார்த்து வளர்பிறை தேய்பிறை காணும் போது காலசக்கரத்தை நினைந்து துன்புறுகிறேன். பிரபஞ்ச தத்துவவிசாரணையில் எனக்கு இப்பொழுது முன் போல அதிகம் பிரீதி இல்லை. விரைவில் இங்கிருந்து செலவு பெற இருக்கும் எனக்கும் பிரபஞ்சத்திற்கும் இனிச் சம்பந்தம் என்ன?

**இம்லாக்:**—தமக்கு வேறு விநோதம் இல்லாவிடினும், தாம் கனவானுகவும் தேசோபகாரியாகவும் இருந்ததை நினைப்பதே மனதிற்கு இனிய விநோதமாகுமே. யாவரும் மனம் வாக்கு ஒத்துத் தம்மைப் போற்றுவது தமக்கு ஆனந்தமாயிருக்குமே.

இது கேட்டு அந்த ஞாதாப் பெருமூச்சுவிட்டுச் சொல்லியது:—

ஞாதா: — பிறர் போற்றுவது விருத்தனுக்கு வெற்றொலி. மைந்தன் கீர்த்தி கேட்டு மனமகிழ என்னைப் பெற்ற மாதாவும் இல்லை; மணமகன் பெற்ற சம்மானம் தனக்கும் சம்மானமென்று மனம்பூரிக்க மனைவியும் இல்லை; என் மித்துருக்கள் சத்துருக்கள் இருதிறத்தாரும் காலம் கடந்துபோனார்கள். எனக்கு இப்பொழுது காம்பீரியம் ஒன்றும் இல்லை; நான் இறந்தபின் என் சொத்துக்குச் சுகத்துக்குத் துக்கத்துக்குப் பாத்தியஸ்தர் எவரும் இல்லையே; பிறரால் புகழப்படுவது வாலிபருக்குப் பிரீதி—என்—பின் விளையும் பயனுக்கு அந்தப் புகழ்ச்சி அச்சாரமாயிருக்கின்றது. அன்றியும், அவர்களுக்கு இன்னம் வெகுகாலம் இருக்கிறது. முதிர்ந்து நரைதிரை கண்டு தேகம் தளர்ந்துவரும் எனக்கு மனுஷருடைய கெடுநினைவால் விக்கினம் உண்டாமென்று அஞ்ச நிமித்தம் இல்லை; நேசத்தாலும் அபிமானத்தாலும் சுகம் உண்டாமென்று ஆசைகூரச் சற்றுவது எது இல்லை. திரவியம் எனக்கு இப்பொழுது செலவு இல்லை; உயர்ந்த உத்தியோகபதவி எனக்கு இன்பமல்ல, துன்பம் தரும். செல்காலத்தில் நான் செய்தது பட்டதைப் பின்னோக்காய்ப் பார்க்குமிடத்தில், செய்யத்தக்கவைகளைச் செய்யும் பருவத்தில் செய்யாது விட்டதும், வியர்த்தமான செய்கைகளில் மெத்தவும் வீண்பொழுது போக்கியதும், பின்னும் அதிககாலம் சோம்புற்றும், செயலொழிந்திருந்ததும் என் ஞாபகத்தில் வருகின்றன. முக்கிய அபிப்பிராயங்கள் பலவற்றை முயலாது விட்டேன்; செய்யத்தொடங்கிய பெருமுயற்சிகள் பலவற்றை அரை

குறையாய் நிறுத்திவிட்டேன். நான் ஏதாயினும் மாபாதகம் செய்து அதன் சுமை என் நெஞ்சை அழுத்தவில்லை; ஆனதனால், பதைப்பற்று என் மனம் உபசாந்தியாயிருக்கின்றது; ஆசையையும் அலைச்சலையும் என் சிந்தையினின்று அகற்ற எத்தனிக்கிறேன். ஆசையும் அலைச்சலும் வியர்த்தமென்று விவேகம் அறியும்; அறிந்திருந்தும், ஜந்மவாசனையாயுள்ள அவைகள் இந்நாள்வரையும் குடிகொண்ட மனையை விட்டு அகலாதிருக்கப் பார்க்கின்றன. இனி எனக்குச் சாங்காலம் வர நாட்படாது; நான் அதை மனோசாந்தத்துடன் வணக்கமாய் வழிக்கு வழி பார்த்திருக்கிறேன்; பரலோகப் பிராப்தி அடைந்தபின் மண்ணுலகில் தேடிக் காணாத மனோசுகம் எனக்குக் காணியாட்சி ஆகுமென்றும், இங்கெனக்குக் கிட்டாத சுத்த குணம் எளிதில் அமையுமென்றும் மனம் குளிர நம்புகிறேன்.

இவ்வாறு மொழிந்து அவ்விருத்தர் எழுந்துபோய்விட்டார். அவர் சொற் கேட்ட ராஜகுமாரன் முதலானவர்களுக்குத் தீர்க்காயுள் பெறும் ஆசை பெருகவில்லை. ராஜகுமாரன் பின்வருமாறு சொல்லித் தம் மனக்குறையை ஆற்றினார்:—இந்த வரலாறு கேட்ட நாம் அபிப்பிராயபங்கம் நேர்ந்ததென்று நினைக்க நிமித்தம் இல்லை. மனோசுகம் பெற்றுக்கொள்வது விர்த்தாப்பியகாலத்திலே என்று ஒருபொழுதும் நாம் எண்ணமிட்டிருக்கவில்லையே—பருவம் முதிர்ந்து தேகபலம் குன்றியிருக்கும்பொழுது கவலையற்றிருக்கச் சாத்தியப்படுமானால், தேகபலமும் உல்லாசமும் உள்ள பருவத்தில் மனுஷருக்கு மனப்பாக்கியம் அமையுமெனத் தோன்றுகிறது. மனுஷர் பருவத்தின் அந்திப்பொழுதில் சாந்தி உண்டாமானால், நண்பகற்பொழுதில் காந்தி உண்டாகுமே.

குறைகூறுவதும் பிறருக்குத் தீங்கு நினைப்பதும் பருவம் முதிர்ந்தோர் இயற்கையென்றும், பூலோக வியாபாரத்தில் புதிதாய்ப் பிரவேசிப்பவர்கள் நினைத்திருப்பவைகளைத் தலைக்கொள்ள ஒட்டாமல் தடுப்பது அவர்க்கு ஆனந்தமென்றும், சக்கரவர்த்தி புத்திரியின் இதயத்தில் சந்தேகம் பிறந்தது. ஸ்திதிமதியுள்ள செல்வர்கள் தமக்குப்பின் தம் சொத்துக்கு உரியோனை நச்சுக் கண்ணோக்காய்ப் பார்ப்பதை அவள் கண்டதுண்டு; தமக்குள் அடங்கியிருக்கிறவரையிலன்றி, தம்மைவிட்டு அகன்றபின் எவ்வகை இன்பத்திலும் உவப்புறுதிருக்கும் வெகு பெயரை அவள் அறிந்திருந்தாள்.

இவ்விருத்தருக்குப் பருவம் முகக்குறிப்பால் தோன்றும் அளவிற்கு அதிகம். இவர் குறைகூறியதற்கு நிமித்தம் சித்தப்பிரமையால் விளைந்த மனத்தளர்வு; அல்லது, இவருக்கு ஏதோ துர்க்கதி சம்பவித்தது; ஆனதுபற்றியே, மனக்குறையடைந்து வருந்துகிறார் எனப் பெக்வா உத்தேசித்தாள். "ஏனெனில், பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்க்கும்வண்ணம், எவனும் தன் சுகதுக்கத்தை எண்ணித் தரணி எல்லாம் தன்னைப்போல் என்பான்" என மொழிந்தாள்.

அவர்கள் மனம் தளர்வது காண இம்லாக்கிற்குப் பிரீதி இல்லை. அவர்கள் அத்தனை விரைவில் வருவித்துக் கொண்ட மனோசஞ்சல நிவிர்த்தியை நினைந்து அவன் குறுநகை நகைத்தான். சஞ்சலமற்ற வாழ்வு அமையுமென்று அவர்கள் பருவத்தில் அவர்களைப்போலத் தனக்கும் மனவுறுதி பிறந்ததையும், மனக்குறை தீர்க்கும் உபாயங்கள் நிறைந்துண்டானதையும் நினைவுகூர்ந்தான். அவன் பின்னிட்டு அறிந்ததை அவர்களுக்கு வலியுறுத்

திச் சொல்லாது விட்டான். அப்பொழுது அவர்கள் மனதிற்கு இதமாகாத அவ்வுணர்ச்சி பின்னும் சிறிதுகாலம் செல்லுமுன் அவர்கள் நெஞ்சில் வலியத் தோன்றி நிலைநிற்குமென்று அவனுக்குத் தெரியுமே. பின்பு ராஜபெருமாட்டியும் பாங்கியும் பள்ளியறைக்கு எழுந்துபோய் விட்டார்கள். போகும்பொழுது, ககோளசாஸ்திரியின் வைத்தியத்தைப்பற்றிய நினைவை அவர்கள் மறக்கவில்லை. உமது உத்தியோகத்தில் பிரவேசித்து, நாளை அருணோதயத்தைத் தரிசித்துக்கொள்ளும் என்று அவர்கள் இம்லாக்கிற்குச் சொல்லிப் போனார்கள்.



## 46-ம் அதிகாரம்.



### ராஜகுமாரத்தியும் பெக்வாவும் ககோள சாஸ்திரியைக் கண்டு பேசினது.

இம்லாக் சொன்ன ககோளசாஸ்திரியைப்பற்றி ராஜபுதல்வியும் பாங்கியும் அந்தரங்கத்தில் பேசினார்கள். அவன் குணம் இனிதென்றும், புத்தி விகாரமென்றும் அவர்கள் சிந்தையிற் பட்டது. அவனுடன் நெருங்கி வார்த்தையாடி அறியாது விடுவது அவர்கள் மனதிற்குத் திருப்திகரமாயிருக்கவில்லை. அவனைச் சந்திக்கும் உபாயம் சூழும்படி அவர்கள் இம்லாக்கை வேண்டிக்கொண்டார்கள்.

இது சற்றுப் பிரயாசந்தான்; அந்நகரத்தில் ஐரோப்பியர் வெகுபெயர் வாசமாயிருந்து தங்கள் தேசாசார மதாசாரங்களைக் கைவிடாது அனுசரித்தார்கள். இதரதேசங்களி

னின்று போயிறங்கியவர்கள் பலர் ஐரோப்பியனைப்போல ஸ்வாதீனராக அங்கிருந்தார்கள். மேற்படி பண்டிதர் பெண் பாலார் எவரையும் கண்டு பேசினதில்லை; கண்டுபேச இடம்பெறுதிருப்பது அந்தப் பெருமாட்டிகளுக்குப் பிரீதியேயல்ல. அதனால், அவர்கள் சிந்தித்தபடி செய்ய வெவ்வேறு உபாயங்களை எடுத்துச் சொன்னார்கள். மிடியில் அடிபடும் பரதேசிகளென்று பெருமாட்டிகளைக் கொண்டுபோய்ப் பண்டிதர் முகதாவில் விட்டால், தடையின்றிப் பேசுவாரென்று யுத்திசொன்னார்கள். சற்று வேளை சிந்தித்து, இந்த யுத்தியைச்சார்ந்து நடந்தால், அறிமுகம் செய்துகொள்ளச் சந்தர்ப்பிக்காதென்றும், இரண்டொரு பேச்சுக்கு மிஞ்ச அவர் பேசாரென்றும், பல கால் இரக்கப்போவது மானபங்கமென்றும் சொல்லி ஆட்சேபித்தார்கள். பின்பு ராவிலஸ் சொல்லியது:—"மெய்தான். நீங்கள் யாசகரென்று மாறுபாடாய்ச் சொல்லல் ஆகாது. இதற்கு மேற்சொன்னதைவிடப் பின்னும் பலமான ஆட்சேபம் ஒன்று உண்டு. மனுஷர் இயற்கை என்பது மஹா பிரஜாதிபத்தியம்-பாரகாரியங்களிலானாலும் சரி, அற்பகாரியங்களிலானாலும் சரி, நற்குண நற்செய்கையுள்ள ஒருவனை எளிதில் ஏமாற்றலாமென்று அபத்தம் சொல்வது அந்தப் பிரஜாதிபத்தியத்திற்குத் துரோகமென்று எப்பொழுதும் என் சிந்தனையிற் படுகிறது. எவ்வகைப் பொய்யும் தகாது. அது விசுவாச பலத்தை ஒடுக்கும், ஜீவதயையைக் கொல்லும். நீங்கள் பொய்வேஷம் கொண்டுவந்தவர்களென்று அந்தப் பண்டிதர் கண்டுகொள்வார். காணும்பொழுது உங்கள் பெயரில் அவருக்கு மிகுந்த சினம் உண்டாம்; தன் அருமை பெருமையை அறிந்திருக்கும் கல்விமான் ஒருவன் அற்ப கல்வியுடையோர் தன்னைப் பொய் சொல்லி ஏமாற்றி

யதைக் கண்டால், அவனுக்கு மிகு மனக்கடுப்பு உண்டாவது இயற்கைதானே. அவர் மனதில் உண்டாகும் சந்தேகம் அப்புறம் ஒருபொழுதும் தெளியாது; அது அவர் சொல்லத்தக்க சற்புத்தியைத் தடுக்கும்; தர்மம் செய்யும் கையைப் பொத்திக்கொள்ளும்படி செய்தாலும் செய்யும். அப்பால் அவனைக்கொண்டு மனுஷருக்கு நன்மை செய்விக்கவும், அவர் மனதிற்குச் சமாதானம் உண்டாக்கவும் வல்லவனைக் காண்பது எங்கே?"

இந்தக் கேள்விக்கு அவர்கள் உத்தரம் சொல்லத் துணியவில்லை. அவர்கள் ஆசை அம்மட்டில் அற்றுப்போமென்று இம்லாக் எண்ணமிடத் தொடங்கினான். ஆனால், மறுநாள் பெக்வா இம்லாக்கைக் கண்டு, "ககோள வித்தியாபண்டிதனைக் கண்டுபேசக் கபடமற்ற உபாயம் ஒன்று அறிவேன். அராபிய குறுநிலமன்னன் எனக்குக் கற்பிக்கத் தொடங்கிய கல்வியை விட்ட துறையினின்று கற்பிக்கும்படி நான் அவனைப் பணிந்து பிரார்த்திக்க நினைக்கிறேன். ராஜபெருமாட்டி என்னுடன் சகபாடியாய் வந்தாலும் வருவார், துணைகூடி வந்தாலும் வருவார். நானோ ஒரு பெண்பேதை—வேறுபெண் துணையின்றித் தனிவழி போவது மானத்திற்குத் தாழ்வல்லவா" என்று உரைத்தாள். அவள் வாய்மொழி கேட்டு, இம்லாக், "தம்மோடுகூடி வார்த்தையாடினால் அவர் மனதிற்கு விரைவில் அலுப்பு உண்டாமென்று என் மனம் ஐயுறுகின்றது. வித்தையில் விஸ்தாரம் ஆராய்ச்சிச் செய்திருக்கும் நிபுணர்களுக்கு நூலாதார விதிகளை மீளவும் எடுத்துரைக்க மனம் கவியாது; நூலாதாரவிதிகளை மனம் வணங்கிச் சொல்லினும், அந்தப் பண்டிதர் அர்த்தாபத்தியோடும் புறனடை கலந்தும் எடுத்துரைப்பார். தமக்கு அவை புலப்படுவது சந்தேகம்" என்று சொன்னான். இப்பால் பெக்வா

"அதற்குப் புத்தி நான் அறிவேன்—நீர் என்னை அவரிடத்திற் கொண்டுபோய் விடும். இம்மாத்திரம் செய்ய உம்மை வேண்டுகிறேன்; என் கல்வி நீர் எண்ணியதற்கு அதிகமாயிருந்தாலும் இருக்கும். அவர் மதத்திற்கு எப்பொழுதும் சம்மதம் சொல்லிவருவேனானால், என் கல்வியை அவர் ஏற மதிப்பிடுவார்" எனத் தடுத்துச் சொன்னாள்.

இந்த நிர்ணயப்படி, இம்லாக் ககோள பண்டிதனைக் கண்டு, "ஸ்வாமீ, வித்தியா திரவியம் தேடும்பொருட்டுத் தூரதேசத்தினின்று இந்நகரத்தில் வந்திறங்கியிருக்கும் பெருமாட்டி ஒருவர் தங்கள் பிரக்கியாதி கேட்டு, தங்களிடத்தில் கல்வி பயில வாஞ்சித்திருக்கிறார்" என்று அறிக்கைசெய்தான். அபூர்வமான இந்தக் கேள்வி பண்டிதருக்கு வியப்பும் விநோதமுமாயிருந்தது. சிறிதுநேரம் தியானித்து, விரும்பியவாறு தடையறத் தம்மை வந்து காணும்படி அவர் அந்தப் பெருமாட்டிக்கு இடம்கொடுத்தார். மறுநாள் அந்தப் பெருமாட்டியைக் காணுமளவும் அவர் மனம் மிகு ஆத்திரப்பட்டது. 'ஆக்கப் பொறுத்தவர்க்கு ஆறப் பொறுதா?'

பெருமாட்டிகள் இருவரும் அலங்கார வஸ்திரம் தரித்து இம்லாக்குடன் ககோள சாஸ்திரியிடத்திற்குச் சென்றார்கள். அத்தனை உயர்ந்த ஆடை ஆபரணாதிகள் தரித்த குலமாதர் தம்மைத் தேடிவந்தது கண்டு பண்டிதர் ஆநந்தபூரிதரானார். ஆரம்பத்தில் இருதிறத்தாரும் ஒருவர்க்கொருவர் அதி விநயத்தோடு மரியாதை செய்தனர். பண்டிதருக்குச் சிறிது அச்சமும் சங்கோசமும் உண்டாயின. அப்புறம் சம்பாஷணை தொடங்கி ஒருவழிப்பட்டபின், அவர் தமது வல்லமையை எண்ணிக் காம்பீரியமாயிருந்தார். இம்லாக் அவரைக்குறித்து முன் உரைத்தது வாஸ்

தவமெனத் தோன்றியது. ககோளசாஸ்திரம் கற்கப்பு குந்த காரணம் யாதென்று அவர் கேட்க, பெக்வா செய் குன்றம் பார்க்கப்போனது, கண்டது, பட்டது, அராபியனுடைய தீவிற் காலம் கழித்தது யாவையும் தடையற நயமுற விநயமாய் மொழிந்தாள். அவள் வாக்குசாதுரியத்தைக் கண்டு பண்டிதருக்கு அவள்பெயரில் மிகு வியப்பு உண்டாயிற்று. பின்பு சம்பாஷணை ககோள வித்தியாதுறையில் திரும்பியது. பெக்வா தான் கற்ற கல்வியைக் காட்டினாள். பண்டிதர் அவளை உற்பாத பிண்டமென்று எண்ணி, இத்தனை திட்ப நுட்பமாய்ப் பயிலத்தொடங்கிய கல்வியை முதிரப் பயிலாது நிறுத்தலாகாதென்று அவளை வேண்டிக்கொண்டார்.

பெருமாட்டிகள் மேலுமேலும் பலகால் பண்டிதனைப் போய்க் கண்டு பேசினார்கள். அவர் ஒருமுறைக்கொருமுறை விசேஷமாய் அவர்களை மனம் உவந்து உபசரித்தார். இடையில் நின்றுவிடாமல் நெடுநாள்வரையும் தம்மைக் கண்டுகொண்டுவர அவர்களுக்கு ஆசை கொளுத்தும்பொருட்டுப் பண்டிதர் வெகு விநோதமாய்ப் பேசினார். அவர்களுடன் கலந்து பேசப்பேசத் தமது சித்தம் தெளிந்ததை அவர் உள்ளுற அறிந்தார். அவர் அம்மாதரைச் சற்காலக்ஷேபத்தால் களிப்புறுவித்து வர வர, கவலை எனும் இருள் மேகம் கலைந்தது. அவர்கள் எழுந்து போகவும் அவர் விசனம் அடைந்து, பருவங்களைக் கிரமப்படுத்தும் பழைய தொழிலைக் கைவிடுவார்.

ராஜகுமாரியும் பாங்கியும் நாலைந்து மாசவரையும் அவர் வாய்மொழியைக் கருத்தாய்க் கேட்டுவந்தார்கள். அற்புதம் செய்யும் வரம் தமக்கு உண்டென்று அவர்

எண்ணமிட்டிருந்தாரே—இக்கோட்பாட்டை அவர் இன்னும் தழுவியிருப்பதை, அல்லது தள்ளிவிட்டதைக் குறிப்பிக்கும் ஒரு சொல்லாவது அவர் வாக்கினின்று எப்பொழுது பிறக்குமென்று அவர்கள் பதறுமற் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு சொல்லும் அகப்படவில்லே. அவர் மதத்தை அவர் வாக்கினுலே வெளியிடுவிக்க அவர்கள் பலகால் பல உபாயம் செய்தார்கள். அவரோ அவர்கள் உபாயவலேக்குள் அகப்படாமல் எளிதில் விலகிக்கொண்டார். அவரை அவர்கள் எந்தப் பக்கத்தில் நெருக்கி அகப்படுத்தப் பார்த்தாலும், அவர் தந்திரமாய் நழுவி வேறு துறையில் இறங்குவார்.

பழகப் பழக, அவர்கள் அவரை இம்லாக்கின் விடுதிக்கு விருந்துக்கு அழைத்து, விசேஷ பிரதிஷ்டை செய்து உபசரிக்கத் தலேப்பட்டார்கள். வர வர, பூலோக இன்டங்கள் அவருக்கு இதமாயின. அவர் முந்திப் போய் நாழிகை சென்று திரும்புவார். மிகு சிரக்தையும் இணக்கமுமுள்ளவராகி அவர் மேலுமேலும் அவர்களுக்குத் தம்மில் ஆசை புகட்டினுர். தமது உதவி அவர்களுக்குப் பின்னும் வேண்டுமெனத் தோற்றுவிக்கும்படி நூதன வித்தைகளில் ஆவல் உண்டாக்கினுர். உல்லாசத்திற்காகவாயினும், கல்விப்பொருளே நாடியாயினும் அவர்கள் வெளிகொள்ளும்பொழுதெல்லாம் அவர் தம்மையும் இட்டுக்கொண்டுபோகக் கேட்பார்.

அவருடைய மனநிறையையும் ஞானத்தையும் நெடுநாள் பழகி அறிந்தபின், அவரை அச்சமற நம்பத்தகுமென ராஜகுமாரன் குமாரி இருவரும் மனம் தேறினுர்கள். தாம் அவருக்கு அரிய மரியாதை செய்துவருவதை நினைந்து அவர் எதாயினும் வீணுசை கொண்டா

லும் கொள்வாரே என்று எண்ணி, அவர்கள் அதைத் தவிர்க்கும்படி, தங்கள் ஸ்திதியின் மர்மத்தையும், பிரயாண முகாந்தரத்தையும் அவருக்குத் திறந்து சொன்னார்கள்; சொல்லி, உலகத்தில் உத்தமமென்று வியந்து அங்கிகரிக்கத் தகும் நிலை எதென்று அபிப்பிராயம் கேட்டார்கள்.

**பண்டிதர்** வாயப்பிறப்பு இது:—உலகப்பரப்பில் உங்கள் கண்ணுக்கு எதிரே தோன்றும் பேதாபேதமான நிலைகள் அநேகம். அவற்றுள் எதாயினும் ஒன்றைச் சுட்டி, இதுவே சிரேஷ்டமென்று உங்களுக்கு உணர்த்த நான் வல்லவனல்ல. நான் உத்தமமென்று ஒரு நிலையைக் கைக்கொண்டு ஏமாறிப்போனேன். இம்மாத்திரம் சொல்லமாட்டுவேன். என் வாழ்நாள் எல்லாம் அனுபவமின்றி ஏட்டுக்கல்வி கற்றுக்கொண்டுவந்தேன் — பெரும்பாலும் மனுஷருக்குக் கைமேல் உதவாத கல்வித்துறைகளைக் கற்று விற்பத்தியடைந்தேன். உலகத்தில் நால்வர்க்கும் பொதுவான சுகம் அனைத்தையும் கிரயம் கட்டிக்கொடுத்துவிட்டுக் கல்விப்பொருளை வாங்கினேன். பெண்பாலார் உறவு எனும் மனதிற்கு இனிய நாகரிகம் அறியேன்; நெஞ்சை உருக்கும் குடும்ப ஐக்கிய வியாபார சுகம் அறியேன். இதர வித்தியார்த்திகளுக்குக் கிட்டாத விசேஷ அதிகாரம் ஏதும் அடைந்தேனானால், அவ்வதிகாரத்துடன் அச்சமும், அலைச்சலும், ஐயமும் சேர்ந்திருக்கின்றன. நாலு பெயரைக் கண்டு கலந்து உறவாடி லௌகிகம் அறிய அறிய, என் நினைவு பல துறைகளிற் பிரவர்த்திக்கின்றது. பிரவர்த்தித்தபின், அவ்வதிகாரங்கள் எவை ஆனாலும் சரி, வாஸ்தவமல்லவென்று என் மனம் ஐயுறுகின்றது. மனதிற்கு இனிய துறைகளில்

என் நினைவு சில நாள்வரையில் சிதறியிருக்கும்பொழு தெல்லாம், என் விசார ஞானம் தப்பாய் முடிந்ததென் றும், அபரிமிதமாய் நான் பட்ட பாடனைத்தும் வீண்பா டாய்ப் போயினவென்றும் என் மனம் எண்ணுகின்றது.

பண்டிதருடைய மனக்கண்ணொளி அதை மூடியிருந்த கன இருளை உருவத்தொளைத்து வெளிவரத் தொடங்கு வது கண்டு இம்லாக் சந்துஷ்டி அடைந்தான். அன்றி யும், அவர் நவக்கிரக ஆட்சியை மறந்து, அவர் விவேகத் திற்கு மீளவும் பூர்வபலம் உண்டாந்தனையும் அவன் அவ ருக்கு ஏதாயினும் பராக்குக் காட்டிக்கொண்டுவர நிர்ண யித்தான்.

அன்றுதொட்டு, அவர்கள் பண்டிதரோடு நெருங்கி அளவளாவினார்கள். அவர்கள் செய்த உபாயங்கள் முயற் சிகள் இன்ப காலக்ஷேபங்கள் அனைத்திலும் அவரையும் தம்மில் ஒருவராகச் சேர்த்துக்கொண்டார்கள். மானத் திற்கு அஞ்சி அவர் அவர்கள் காலக்ஷேபங்களிற் சிந்தை செலுத்திக்கொண்டு வந்தார். ராவிலஸ் பிரவர்த்தியுள் ளவனாதலால், செயல் ஒழிந்திருக்கும் நேரம் அதிகம் மிஞ்ச விடவில்லை. இடையறாது எப்பொழுதும் ஏதாயி னும் ஒன்று செய்ய இருந்தது. பகல் முழுதும் கருத்தாய்க் கண்டு அவதானிக்கும் விஷயங்களை ராத்திரி காலத்தில் பேசித் தெளிவார்கள். பேசி எழுந்திருக்குமுன் மறு நாளுக்கு உபாயம் சூழ்வார்கள்.

(பின்பு பண்டிதர் இம்லாக்கிற்கு அறிக்கை செய்த வகையை அடியிற் காண்க.)

பண்டிதர்:—பிரபஞ்ச உல்லாச வியாபாரம் எனும் ஆட்டத்தில் நான் உங்களுடன் கலந்து, ஒன்று மாறி ஒன் றாகப் பல விநோதங்களில் காலம் கழிக்கத் தொடங்கிய

பின், கஜோள அதிகாரம் எனக்கு உண்டென்று முன் என் உள்ளத்தில் பிறந்திருந்த தேற்றம் வரவரக் கலைகுறைந்துபோகின்றது. நான் கொண்ட கோட்பாட்டில் எனக்கு நம்பிக்கை குன்றுகிறது. அந்தக் கோட்பாட்டைப் பிறருக்கு நிரூபித்துக்காட்ட ஒருபொழுதும் என்னால் முடியவில்லை. அது விபரீதமான காரணங்களால் வேளைக்கு ஒருவிதமாய்த் திரிகின்றது. சிறிது நாழிகை நேரம் நான் ஆகஸ்மீகமாய்த் தன்னந்தனியே இருக்கச் சம்பவித்தால், பூர்வமதம் வேகமாய்ப் பறந்துவந்து என் நெஞ்சிற் குடிகொள்ளுகின்றது. குடிகொண்டு பலமான விலங்கிட்டு என் மனதைச் சிறைப்படுத்திக்கொள்ளுகின்றது. இப்படி இருக்கையில், ராஜகுமாரனுடைய சம்பாஷணையைக் கேட்கக் கேட்க, அந்த விலங்கு சற்றே நெகிழ்ந்து, பெக்வா வர, உடனே என் சிந்தை சிறை நீங்குகின்றது. எப்போதும் காற்றுக் கறுப்புக்குப் பயப்படும் மனுஷனும் நானும் சரி. விளக்கொளி காணும் பொழுது அவன் அச்சமற்றிருப்பான். முன் இருளில் தன் நெஞ்சை வருத்திய அச்சம் எங்கிருந்து உண்டானதோ என்று ஆச்சரியப்படுவான். விளக்கு அணைந்து போமானல், மீளவும் அவன் பயப்படுவான். விளக்கொளி கண்டவுடன் அந்தப் பயம் தெளியுமென்று அவனுக்கு அனுபவபூர்வமாய்த் தெரியும். ஆனல், செய்கடனை அக்கிரமமாய்க் கைசோரவிட்டு அடங்கியிருந்து, எனக்கு ஒப்படைத்திருக்கும் பாரம்பழியுள்ள உத்தியோகத்தை நெஞ்சார மறந்திருப்பேனே என்றெண்ண, சிறிதுவேளை எனக்குத் திகில் எடுக்கின்றது. நெஞ்சறிந்த அக்கிரமத்தில் இன்புறுவேனனல், அல்லது இத்தனை முக்கியமான விஷயத்தைப்பற்றிய சந்தேகத்தை என்

சுகத்திற்குச் சார்பாய்த் தீர்த்திருப்பேனுனல், என் பாத கம் அஞ்சத்தக்க மா பாதகமாகுமே!

இல்லாக:—தோஷபயத்துடன் தொந்தித்திருக்கும் சங் கற்ப ரோகத்தைப்போல அசாத்திய சங்கற்பரோகம் வே றில்லே. மனேபாவனேயும் ஜீவசாட்சியும் மாறி மாறி நம்மிற் பிரவர்த்தித்து, அடிக்கடி நிலேமாறி நிற்பதனுல், மனேபாவனேயின் உருவெளிக்கும் ஜீவசாட்சியின் கற் பனேக்கும் நமக்குப் பேதம் தோன்ருது. சன்மார்க்கத் திற்கும் சமயத்திற்கும் ஒவ்வாத உருவெளிகளே மனேபா வனே தோற்றுவித்தால், அவ்வுருவெளிகள் மனதை வருத் தும்பொழுது, மனம் அவைகளே அகற்றிவிடும். ஆனல், குறுவிசாரம் உண்டாக்கும் நினேவு செய்கடனின் கோலம் கொள்ளும்பொழுது, அதை அகற்றிவிட நாம் அஞ்சு வோம். அஞ்சுவதனுல், அது கேள்வி முறையின்றி நம் அந்தக்கரணங்களேக் கட்டிக்கொள்ளும். இந்த முகாந்த தரத்தினுலே மூடபக்தருக்குப் பெரும்பாலும் குறுவி சாரம் உண்டாம்; குறுவிசாரமுள்ளவர்கள் மூடபக்தர் ஆவார்கள்.

ஆனல், அச்சத்தால் உண்டாம் நினேவுகளே அறிவிற்கு மிஞ்சவிடாதிரும். கைக்கொள்ளும் கடமை உண்மை யென்று எண்ண எவ்வளவிற்கு ஏது உண்டோ, அதைக் கைசோரவிடுவது அவ்வளவிற்கு வினேயாய் முடியும். நிரப்பந்தமின்றி நீள நினேப்பீராஞல், கடமை உள்ளதெ னக் கொள்ளத்தகும் ஏது சிறுகித் தோன்றும்; அது நாளுக் குநாள் பின்னும் சிறுகும். காலத்திற்குக் காலம் தமக் குத் தோன்றும் ஞான ஒளி தடையற உட்செல்லத் தமது நெஞ்சைத் திறந்துவிடும். அறிவு தெளிந்திருக்கும்பொ ழுது வியர்த்தமெனத் தோன்றும் சந்தேகங்கள் சிலவேளே

நச்சுநச்சென்று அலட்டும். அலட்டும்பொழுது பொறுத்து நின்று வார்த்தையாடாமல் பறந்துபோய்த் தமது வேலையைப் பாரும், அல்லது பெக்வாவிடத்திற்குப் போம். இப்பூலோகத்தில் வாழும் மாந்தர் கோடானு கோடி பெயர். அவர்களைப் பெருமலைக்கும் தம்மை அதில் ஒரு சிறு அணுவிற்கும் ஒப்பிடலாம். இப்படி அணுவளவாயிருக்கும் தாம் அற்புத வரம் பெறத்தக்க புண்ணிய புருஷருமல்ல, அதிசய யாதனைபடத்தக்க பாபிஷ்டருமல்ல. இந்த நினைவைத் தம் உள்ளத்தில் எப்பொழுதும் முக்கியமாய் இருத்திக்கொள்ளும்.



## 47—ம் அதிகாரம்.



ராஜகுமாரன் போய் நூதன விஷய விசாரணை தொடங்கியது.



**ஃபோளசாஸ்திரீ:**—இதெல்லாம் நான் பலகால் நினைத்ததுண்டு. உண்டெனினும், தலை நிமிர ஒட்டாது அமுக்கும் வணங்காமுடி மன்னனைப்போல ஒரு சங்கற்பம் தோன்றி வெகு காலமாய் என் விவேகத்தைக் கீழ்ப்படுத்திக்கொண்டது. அவ்விவேகத்திற்குத் தான் அறுதியிடும் நிகமனங்களை நம்பத் துணிவு இல்லாதேபோயிற்று. உள்ளுக்குள்ளாயிருந்து என்னைப் பக்ஷிக்கும்படி மனோராச்சியத்திற்கு இடங்கொடுத்து, என் மனவமைதியை அநியாயமாய்ப் போக்கடித்துக் கெட்டேனேயென்று இப்பொழுது எனக்குத் தெரிகின்றது; ஆனாலும், குறுவிசாரமானது ஊருடன் கலந்து உறவாடக் கூசிப் பின்னிடும்.

பிறருக்குச் சொன்னால் என் விசாரம் தீருமென்று உறுதியாய் அறிவேன். அறிந்தும், சொல்லி ஆறத்தக்க எவரையும் நான் முன்பு காணவில்லை. எனது அபிப்பிராயம் உமது அபிப்பிராயத்தால் உறுதிப்பட்டது கண்டு சந்துஷ்டியானேன். நீர் எளிதில் ஏமாறிப்போகிறவரல்ல; பிறரை ஏமாற்ற உமக்கு நிமித்தமும் இல்லை. நாட்பட என்னைச் சுற்றிக்கொண்ட அந்தகாரப்படலம் காலம் கழிந்து பல விகற்பங்களைக் காணக் காணக் கலைந்து அகன்றுபோமெனறும், முதிர் பருவத்தில் எனக்கு மனோசாந்தி உண்டாமென்றும் நினைத்திருக்கிறேன்.

இம்லாக்:—தமது வித்தையும் சுகிர்தமும் தமக்கு இந்த நினைவைத் தோற்றுவிப்பது தர்மந்தானே.

பின்பு ராஜகுமாரி, பாங்கி இருவரோடும் ராஸிலஸ் அவர்கள் கூட்டத்திற்போய், நாளைக்கு ஏதும் நூதன காலக்ஷேபம் செய்ய யோசித்திருக்கிறீர்களா என விசாரித்தான்.

நிகாயா:—வரவர நூதனம் உண்டாமென்று எண்ணி எதிர்பார்த்திருப்பதனாலன்றி, வேறு விதத்தால் எவர்க்கும் மனோசுகம் இல்லை. இதுதான் பூலோக வாழ்வின் இயற்கை. நாடிய நூதனத்தைக் கண்டபின் அதில் நமக்கு ரசம் இல்லையென்று வேறு நூதனத்தைத் தேடுகிறோம். பூவுலகில் உள்ள நூதனம் அனைத்தையும் நாம் இன்னம் காணவில்லை. முன் எப்பொழுதும் காணாத நூதனம் ஒன்றை நாளைக் காண விரும்புகிறேன்.

ராஸிலஸ்:—மன ரம்மியத்திற்குப் பல விகற்பம் வேண்டும். அது இல்லாமல் தீராது. சுகத்திற்கு உறைபதி ஆகிய பள்ளத்தாக்கிலும் ஒருகால் அனுபவித்த சுகசெல்வங்களையே மேலுமேலும் பலகால் அனுபவிக்கவேண்

டியிருந்ததனால் எனக்கு வெறுப்புத் தட்டிற்றே. ஆனாலும், அர்ச்சியசிஷ்ட அந்தோனி மடவாசிகளாகிய முனிவருக்கு ஒரு நாளும் சுகம் இல்லை. அவர்கள் எப்பொழுதும் பாடுபட்டு வருந்துகிறார்கள். வருந்தியும், குறைகூறாது மனம் பொறுத்திருக்கிறார்கள். அதைக் கண்டபொழுது, எனக்குமாத்திரம் இந்தப் பதைப்பு உண்டாக நிமித்தம் என்னவென்று என்னையே நொந்தேன். நோவாதிருக்க முடியவில்லை.

இம்லாக்:—சுகத்திற் சிறையிருக்கும் அபிஸீனிய ராஜகுமாரர் படும் அத்தனை துன்பம் ஆரவாரமற்ற மடத்தில் வசிக்கும் அம்முனிவருக்கு இல்லை. அவர்கள் செய்வதற்கு எல்லாம் தகுதியும் முறைமையுமான ஒவ்வொரு முகாந்தரம் உண்டு. அவர்கள் கைப்பாடுபட்டுக் காலந் தள்ளுவதற்கு வேண்டும் அன்ன வஸ்திராதிகளைச் சேகரித்துக்கொள்ளுகிறார்கள். ஆகவே, கைப்பாடு படாமல் தீராது. பாட்டுக்குத் தக்க பயன் அவர்களுக்கு அமைகின்றதே. பக்திசிரத்தையால் பரகதி அடையப் பக்குவதரம் உண்டாகின்றது. அன்றியும், இகத்தை விட்டுப் பரத்திற் சேரும் நாள் வரவரக் கிட்டுகிறதென்று அவர்கள் எப்போதும் சிந்தித்தவண்ணமாயிருக்கிறார்கள். அவர்கள் காலத்தைக் கிரமமாய் விபாகித்து, இன்ன கால வகுப்பில் இன்ன வேலை செய்வதென்று ஏற்பாடுபண்ணி, அந்தந்த வேலையை முறைவழாது செய்துகொண்டு வருகிறார்கள். ஆனதுபற்றி, இன்ன வேளையில் என்ன வேலை செய்வதென்று குறிப்பற்று அவர்கள் மனம் தடுமாற ஏதுவும் இல்லை; விசாரமற்றுச் செயல் ஒழிந்திருப்பதாகிய இருள் அவர்களைச் சுற்றிக்கொள்வதுமில்லை. வேளைக்கொரு வேலை இருக்கின்றதே. அவர்கள் வேலை எல்லாம்

அவர்கள் மனதிற்கு இன்பமாயிருக்கும். ஏன்—அவ் வேலை தம்மை அனந்த சுகானந்தபதவி அடைவிக்கும் பக்தி கிர்த்தியங்களென்று அவர்கள் நினைந்திருப்பத னாலே.

**நீகாயா:**—துறவறம் இல்லறத்தைக் காட்டிலும் அதிக சுத்தமும் பூரணமுமான நிலையென்று எண்ணுகிறீரா? பகிரங்கமாய் மனுஷரோடு ஊடாடி, வறுமை எனும் பிணியால் வருந்துவோர்க்கு ஏதும் கொடுத்துதவி, கல்லா தவர்களுக்குத் தான் கற்ற கல்வியைக் கற்பித்து, தன் முயற்சியால் உலகத்திற்குப் பலவாறு உபகாரி ஆகும் ஒரு வன் சன்னியாசி மடங்களில் பயிலும் அருந்தவம் செய் யாது விட்டு, தன் நிலைக்கு எட்டும் தீங்கற்ற போகங் களை அனுபவித்துவரினும், துறவிகளைப்போல் அவனுக் கும் பரத்திற் சுகம் உண்டென்று எண்ண இடம் இல் லையா?

**இம்லாக்:**—இந்த விவகாரத்தைக்குறித்து நெடுநாள் வரையிற் சான்றோருக்கு அபிப்பிராய பேதமும், சாதுக் களுக்கு மனமலைவும் உண்டு. இது அருவழக்கு. மேற்கு றித்த இருதிறத்தாரில் எத்திறத்தார் பட்சமாயினும் இதைத் தீர்க்க நான் பயப்படுகிறேன். இல்லறத்தில் நின்று இழுக் கற நாள் கழிப்பவன் துறவறம் பூண்டு தோஷமற்றிருப் பவனிலும் உத்தமன். ஆனாலும், ஒருவேளை இல்லாச்சிர மத்தில் உண்டாகும் **சோதனைகளுக்கு எடுபடாது உரங் கொண்டு நிற்க** எல்லாரும் வல்லவரல்ல. வெல்லும் திறம் இல்லாதவன் பின்னிடைந்துபோவது தர்மந்தான். சிலருக்கு நன்மைசெய்யத் திறமும் இல்லை, தீமைக்கு இடங்கொடாது நிற்கப் பலமும் இல்லை. அநேகர் தரித் திரத்தோடு பொருது இளைத்து, நாட்பட வியர்த்தமாய்த்

தம்மை ஆட்டிவைத்த ஆசைகளை விட்டுவிட விரும்புகிறார்கள். விருத்தரும் வியாதிஸ்தரும் வெகுபெயர் முன் செய்த கஷ்ட விர்த்திகளுக்கு இனி உதவார்களென்று தள்ளிவிடப்படுவார்கள். சன்னியாசி மடங்களிலோ, மெலிந்தவர்களும் அச்சமுள்ளவர்களும் அடைக்கலம் புகுந்திருக்க இடம் பெறுவார்கள். அலுப்புற்றவர்கள் இளைப்பாறுவார்கள். பச்சாத்தாபமுள்ளவர்கள் யோக நிஷ்டையில் இருப்பார்கள். ஜபத்திற்கும் தியானத்திற்கும் அனுகூலமான அவ்வடைக்கல ஆலயங்களில் மனுஷர் மனவியற்கைக்கு இனிய தன்மை ஏதோ உண்டு. தன்னைப்போலப் பாரதூர சிந்தையுள்ள சகவாசிகள் சிலருடன் சாங்காலமாமளவும் பக்தி யோகாப்பியாசம் செய்ய நினைந்திரார்தவன் ஒருவனும் அங்கில்லையென்று சொல்லலாம்.

பெக்வா:—இந்த வாஞ்சை எனக்குப் பெரும்பாலும் இருந்ததுண்டு. அன்றியும், ஜனசங்கத்தில் சாகத் தமக்கு மனம் இல்லையென்று ராஜகுமாரியும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இம்லாக்:—தீங்கற்ற போகங்களை அனுபவிக்கும் சுதந்தரம் மனுஷருக்கு இல்லையென்று விவாதிப்பார் இல்லை. ஆனாலும், தீங்கற்ற போகங்கள் எவையென்று இனி ஆராய்ந்து அறியத்தான் வேண்டும். ராஜகுமாரீ, எவ்வகைப் போகமானாலும் சரி, ஒரு போகத்தை அனுபவிப்பதில் தீங்கு ஒன்றும் இல்லை, அதன் காரிய சித்தியாய் விளைவதே தீங்கு. தன்மட்டில் தீங்கற்ற போகபந்தமானது நமக்கு ஒரு விதத்தில் வினைசெய்தாலும் செய்யும் அது எவ்விதமெனில், இப்பூலோக வாழ்வு நமக்குச் சதமல்ல, அநித்தியம்—சிறிதுகாலம் நம்மை இங்கிருத்தித் தெய்வம்

சோதிக்கிறது. பரலோக வாழ்வோ நித்தியம் – அதன் ஆரம்பம் நாழிகைக்கு நாழிகை நமக்குக் கிட்டுகிறது. அதன் அந்தம் நீடூழிகாலம் செல்லினும் கிட்டாது. இப்படி இருக்க, அநித்தியமாகிய பூலோக வாழ்வில் நமக்குப் பிரீதி உண்டாகிறது. நித்தியமாகிய பரலோக வாழ்வை நாம் மறந்திடுகிறோம்--இவ்வாறு வம்பாக அதிற் பிரீதி உண்டாக்கி இதை மறக்கடிப்பது நமது போகபந்தம். இவ்விதமாகவே போகபந்தத்தால் வினை விளையும். அருந் தவம் புரிவது தன்மட்டில் அறமல்ல, ஆனால் அது விஷயானந்த ஜாலத்தினின்று நம்மை விடுவிக்கும். இதுதான் அதனால் விளையும் பயன். இதன்றி வேறு பயன் இல்லை. மறுமையில் நாம் எல்லோரும் பூரணானந்த பதவியை அவாவுகிறோம். அந்தப் பதவியில் நமக்கு உண்டாம் போகத்தில் விக்கினம் இல்லை, அங்குள்ள காவலில் நிர்ப்பந்தம் இல்லை.

இம்மொழி கேட்டு ராஜகுமாரி மௌனம் சாதித்தாள். ககோளசாஸ்திரியை நோக்கி ராஷிலஸ் முன் காணாத ஏதாயினும் ஒன்றைக் காட்டி, பெக்வாவைத் துறவியாய்ப் போகவிடாமல் தடுக்கக்கூடாதா என்று கேட்டான்.

ககோளசாஸ்திரி: — நானா அதிசயங்களையும் ஆவலுடன் விசாரித்து நானா கல்விப்பொருளையும் சலிப்பற்று ஆய்ந்தறிந்திருக்கும் உங்களுக்குச் சொல்ல நூதன விஷயம் ஒன்றும் இப்பொழுது எளிதாய் என் நினைவில் தோன்றவில்லை. ஆனாலும், இறவாதிருப்பவரிடத்தினின்று இனி நீங்கள் கிரகித்துக்கொள்ளக் கூடாததை இறந்தவரிடத்தினின்று கிரகித்துக்கொண்டாலும் கொள்ளலாம். இத்தேச அதிசயங்களில் முக்கியம் இங்குள்ள பிரேதாலயங்கள். அவைகளில் அதிபூர்வகாலத்து மனு

ஷர் உடல்கள் தைலவர்க்கம் இட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. அவை இந்நாள்வரையில் பதம் கெடவில்லை. பதம் கெடாதிருப்பது அந்தப் பிரேதங்களிற் பூசிய பிசின் வர்க்கத்தின் குணநலத்தால்.

ராஸிலஸ்:—பிரேதாலயங்களைப் பார்த்துண்டாம் இன்பம் எவ்வகை இன்பமோ அறியேன். ஆயினும், வேறு காலக்ஷேபம் ஒன்றையும் காணேமே—அதனால், அவைகளைப் போய்ப் பார்ப்பேன். தகுதியான காலக்ஷேபம் இல்லாத வேளைகளில், ஏதாயினும் ஒன்று செய்யாமல் தீராதென்று ஒப்புக்குச் செய்தவைகள் பல உண்டே – அவற்றுடன் இதையும் ஒன்றாய் வைத்துக்கொள்வேன்.

மறுதினம் அவர்கள் காவற் குதிரைவீரரைக் கூலிக்குப் பிடித்துப் பிரேதாலயம் பார்க்கப்போனார்கள். அந்தப் பிரேதாலயங்கள் குகைகள். அக்குகைகளில் இறங்க எத்தனிக்கும் சமயத்தில், ராஜகுமாரி, "பெக்வா, நாங்கள் பின்னும் ஒருமுறை பிரேதலோகத்தில் பிரவேசிக்க வந்திருக்கிறோம். நீ எங்களுடன் வராது இங்கே நின்றுவிடுவாயே–நாங்கள் திரும்பி வருந்தனையும் பத்திரமாயிருக்கப்பார்" என்று சொல்ல, பெக்வா, "அல்ல, நான் இங்கே தனித்து நில்லேன்–பெருமாட்டீ, தமக்கும் ராஜபெருமானுக்கும் இடையில் தங்களோடு கூட வருகிறேன்" என மொழிந்தாள்.

பின்பு அவர்கள் எல்லாரும் இறங்கி, சுற்றுச் சுழற்சியாயிருந்த நிலவறை வழி எங்கும் திரிந்து, இருமருங்கும் நிரைநிரையாய் வைத்திருந்த பிரேத கணத்தைக் கண்டு அதிசயித்தார்கள்.



# 48-ம் அதிகாரம்.

## இம்லாக் ஆத்மலக்ஷணம் உணர்த்தியது.

**ராஜகுமாரன்:**—சில தேசத்தார் பிரேதத்தைத் தகனம் செய்வார்கள். அது சாம்பராய்ப்போம். சில தேசத்தார் பிரேதத்தைக் கனனம் செய்வார்கள். அது மண்ணோடு மண்ணாய்க் கலந்துபோம். அந்திய கர்மம் செய்தவுடன் பிரேதத்தைக் கண்ணெதிரில் வைக்காமல் எப்படியோ கடத்திவிடுவார்கள். இது சர்வஜன சம்மதம். மனுஷர் இயற்கை இவ்வாறு இருக்க, எகிப்து தேசத்தார்மாத்திரம் தம்மில் இறந்தோர் உடலை வெகு திரவிய விரயம் செய்து பதம் கெடாமற் காத்துவைத்திருக்கும் காரணம் ஏதோ?

**இம்லாக்:** — பூர்வ சம்பிரதாயங்களின் ஆதிகாரணம் வாலாயமாய்த் தெரியாது. ஏனென்றால், பெரும்பாலும் ஒரு சாதனையின் காரணம் ஒழிந்துபோனபின்னும் அச் சாதனை நிலைநிற்பது இயற்கை. மூடபக்தி கிர்த்தியங்களின் காரணகாரிய தாற்பரியங்களை உத்தேசிப்பது வியர்த்தம். ஏன்—விவேகம் கற்பிக்காத ஒன்றை விவேகம் தெளிய விளக்கும் தரமல்லவே. பிராணபதமான நட்பினாலே, எகிப்தியர் சுற்றமித்திரர் உடலைப் பதம் குன்றாமல் தைலவர்க்கம் பூசிப் பாதுகாக்கும் வழக்கம் தொடங்கியதென்று நாட்படை எண்ணமிட்டிருக்கிறேன். என் மனம் இவ்வெண்ணத்தையே அதிகமாய்ச் சார்ந்திருக்கின்றது. எல்லாரையும் இவ்வாறு அழியாது ஓம்புவது அசாத்

தியம். இறந்தோர் உடல் அனைத்தையும் தைலம் இட்டு வைக்கச் சம்பவித்தால், இறவாதிருப்பவர் வசிக்கும் மனைகளைக் காட்டிலும் இறந்தோர் ஆலயங்கள் அதிக இடம் கொள்ளும். கனமும் தனமும் மக்கோர் உடல்மாத்திரம் தைலமிட்டுப் பாதுகாக்கப்பட, இதர ஜனங்களின் உடல் எல்லாம் இயற்கைப்படி அழிந்துபோயினவென்று எண்ணுகிறேன்.

ஆனாலும், ஒரு மர்மம் இருக்கிறது. உடல் அழியாதிருக்கிறவரையில் ஆத்மாவிற்கு மரணம் இல்லையென எகிப்தியர் நம்பி, ஆத்ம மரணத்தைத் தவிர்க்கும்படி, உடலைத் தைலவர்க்கம் பூசிப் பாதுகாக்கும் உபாயத்தை அனுசரித்தார்கள்—இது சாதாரண உத்தேசம்.

**நிகாயா:**—அறிவில் மக்கோர் ஆகிய எகிப்தியருக்கு இந்தப் பேய்ப்புத்தி வருமா? ஆத்மா உடலை விட்டுப் பிரிந்திருக்கக்கூடுமானால், அப்புறம் அதற்கு உடலினாலே விளையும் இன்பம் என்ன—துன்பம் என்ன?

**சுகோஷசாஸ்திரி:**—புறச்சமய இருளிற் புதைந்திருந்த எகிப்தியருக்கு ஆத்ம ஞானோதயகாலத்தில் பிறக்கும் யுத்தி விபரீதமாகத்தான் இருக்கும். அவர்களிலும் நமக்கு அறிவு வெகுதூரம் தெளிதற்கு உரிய சமயமும் உபாயமும் உண்டு. உண்டெனினும், ஆத்ம லக்ஷணத்தைப் பற்றி உறுதியாக இன்னம் ஒன்றும் தெரியாது. இந்நாளளவும் விவாதம் நடந்துகொண்டே வருகின்றது. ஆத்மா அழியாவஸ்தென்று உறுதியாய் நம்புகிறவர்கள் சிலர் அது அசித்துப்பொருளாய் இருந்தாலும் இருக்குமென்று இன்றளவும் மயங்குகிறார்கள்.

**இம்லாக்:**— ஆத்மா சித்தல்ல, அசித்தென்றே சிலர் உறுதிசொல்லியிருக்கிறார்கள்; ஆனாலும், எதையும் சிக்

கருத்துச் சீராகச் சிந்திக்கும் முறை அறிந்தோர் எவராயினும் இந்த விவகாரத்தைச் சிந்தித்திருப்பாரென்று என் மனம் நம்பவில்லை. ஏன்—விவேகமானது அறுதியிடும் நிகமனம் அனைத்தும் மனதின் அசடப்பிரகிர்தியை ஸ்தாபிக்கின்றன; இந்திரியக் காட்சிகள் அனைத்தும், சாஸ்திரவிமரிசையும் சடப்பொருள் அசேதனமென்று ஒருங்கொத்து நிரூபிக்கின்றன.

சிந்தனை அசித்துக்குச் சகஜமென்றும், அணுக்கள் அத்தனையும் அத்தனை சேதனவஸ்துகளென்றும் ஒருபொழுதும் உத்தேசித்தவர் இல்லை. ஆனாலும், அசித்துப் பொருளின் அம்சம் எதாயினும் ஒன்று சிந்தனையற்றிருந்தால், சிந்தனையுள்ள அம்சம் எதென்று நாம் எண்ணலாம்? ரூபம்—வைரம்—பருமம்—கதி—கதிநோக்கு இவைகளில்மாத்திரம் அசித்துப்பொருள் வகை ஒன்றுக்கொன்று பேதிக்கும். எவ்வாறு பிரித்தாலும், எவ்வாறு இணைத்தாலும், இவைகளில் எதற்குச் சேதனமானது சம்பந்தப்பட்டிருக்கும்? திரட்சி—சதுரம், வைரம்—திரவம், மஹத்வம்—அணுத்வம், தாமதகதி—தீவிரகதி, ஒரு திசைக்கதி—மறு திசைக்கதி இவை அசித்துப்பொருள் நிலை விகாரங்கள். இவைகளும் வேறு, சைதன்யமும் வேறு. அசித்துப்பொருளுக்குச் சிந்தனாசக்தி இல்லாவிட்டால், நூதனவிகாரம் எதாயினும் ஒன்று ஏற்பட்டாலே அதற்கு அந்தச் சக்தி உண்டாகும். ஆனாலும், அசித்துப்பொருளுக்கு உண்டாகக்கூடிய விகாரம் அனைத்தும் சிந்தனா சக்திக்கு அசம்பந்தமானவைகளே.

சுரோலசாஸ்திரி:—ஆனாலும் லோகாயிதர்கள் அசித்துப் பொருளுக்கு நாம் அறியாத குணங்கள் இருந்தாலும் இருக்குமென்று விவாதிக்கிறார்களே.

**இம்லாக்:**—தனக்குத் தெரியாமல் எதாயினும் ஒன்று இருந்தாலும் இருக்கும் எனும் சந்தேகத்தை நியாயாதாரமாய்க்கொண்டு, அறிந்த உண்மைக்கு விரோதமாய்த் தீர்மானம் செய்பவனை, உலகறிந்த சத்தியத்தை அசம்பாவித சக்கியத்தால் ஆட்சேபிக்கத் துணிவோனை யுத்தி புத்தியுள்ள மனுஷர் வகுப்பிற் சேர்த்துக்கொள்ளவொண்ணாது. அசித்துப்பொருளின் குணங்கள் சேஷ்டையின்மை, புலனின்மை, ஜீவனின்மை. அதைப்பற்றி நமக்குத் தெரிந்ததெல்லாம் இம்மாத்திரந்தான். இது நிசமென்று உள்ளம் தேற அறிவோம். இத்தேற்றத்திற்கு நமக்குத் தெரியாமல் யாதாயினும் இருந்தால் இருக்குமென்று சொல்லும் ஆக்ஷேபமன்றி வேறு ஆக்ஷேபம் இல்லாவிடில், மனுஷர் புத்திக்கு எற்கும் பிரமாணம் அத்தனையும் இருக்கிறது. நாம் அறிந்ததை அறியாதது வெல்லுமானால், சர்வஞ்ஞரல்லாத ஜீவர் ஒருவரும் உண்மை கண்டு கடைத்தேற வல்லவரல்ல.

**ககோளசாஸ்திரி:**—ஆனாலும், சிர்ஷ்டிகர் வல்லமையை அகங்கரித்துச் சிறக்கணிக்காதிருக்கக்கடவோம்.

**இம்லாக் கவிராயன்:**—ஒன்றுக்கு ஒன்று ஒவ்வாதென்றும், ஒரு பிரதிக்கினை எககாலத்திலேயே சத்தியமாகவும் அசத்தியமாகவும் இருத்தல் கூடாதென்றும், ஒரு எண் ஒற்றை எண்ணும் இரட்டை எண்ணும் ஆவது அசாத்தியமென்றும், சிந்தனைசக்தி இன்றி உருவெடுத்த ஒன்றுக்குப் பின்னிட்டுச் சிந்தனைசக்தி அமைதல் கூடாதென்றும் உத்தேசிப்பது சிர்ஷ்டிகருடைய சர்வசக்தியைச் சிறக்கணிப்பது அல்லவே.

**நிகாயா:**—இந்த விவகாரத்தால் பெரும்பயன் எதும் உண்டென்று எனக்குப் புலப்படவில்லை. சித்துலக்ஷண

நிருபணத்தை உமது வாக்குமூலமாய்க் கேட்டு மனம் தேறினேன். சித்துலக்ஷணத்தில் நித்தியபாவிகம் ஆவசியகமாய் அமைந்திருக்கின்றதா?

இம்லாக்:—சித்து தர்மத்தைப்பற்றி நாம் அறிந்திருப்பது அபாவரூபம்—ஆகவே, தெளிவல்ல. சிதைவுறும் ஏது அனைத்திற்கும் நீங்கியிருத்தலால், சித்துத்துவம் என்பதற்கு என்றும் அழியாதிருக்கும் பிரகிர்தி சக்தியென்று அர்த்தம் உண்டாகின்றதுபோலும். அழிவுறுவதெல்லாம் கட்டுவிட்டு பிண்டம் கரைந்து அங்கம் குலைந்து அழியும். அங்கம் இல்லாத ஒன்று பேதனமாகாது. அதற்குச் சிதையும் இயற்கை உண்டாம் வகை ஏதென்று நம் புத்திக்கு எட்டவில்லை.

ராஸிலஸ்:—அகலம் நீளம் இல்லாத பொருளை நினைக்க எனக்குத் தெரியவில்லை. அகலம் நீளம் உள்ள பொருளுக்கு அங்கம் இருக்கவேண்டும். அங்கம் உள்ளது அங்கி. அங்கி எதுவும் அழிவுறும் என்றீரே.

இம்லாக்:—தங்கள் உள்ளத்தில் உள்ள பாவனைகளைச் சிந்தித்துப்பாருங்கள். சிந்தித்தால், சங்கடம் குன்றும். அகலம் நீளம் அற்றபொருள் உளதென்று காண்பீர்கள். சகளரூபத்தைப்போல நிஷ்களரூபமும் உள்பொருள் தான். ஆயினும், நிஷ்களரூபத்திற்கு நீளம்—அகலம்—கனம் இல்லை. தாம் செய்குன்றம் ஒன்றை நினைக்கும்பொழுது, அது எங்குள்ளதோ அங்குள்ள வண்ணம் தம் உள்ளத்திலும் உரு அமைந்து நிற்கின்றது. தம் உள்ளத்தில் சிறிய தினை மணியின் உரு நிற்க வேண்டும் இடத்தினும் பெரிய செய்குன்றத்தின் உரு நிற்க அதிக இடம்வேண்டுமோ—இல்லையே. இவ்வுரு இரண்டில் எதற்காயினும் பின்னம் உண்டாகுமோ—உண்டாகாதே. காரியம் எப்

படி, அப்படிக் காரணம். சிந்தனை எப்படி, அப்படிச் சிந்தனுசக்தி. அந்தச் சக்திக்குப் பாடு இல்லை, சேதம் இல்லை.

**நிகாயா:**—ஆனாலும், திருநாமம் எடுத்துரைக்க எனக்குத் திகில் உண்டாகும் வஸ்து, ஆத்மாவைச் சிர்ஷ்டித்த பராபரவஸ்து அதை அழிக்கவும் மாட்டுவாரே.

**இம்லாக்:**—அழியாப் பிரகிர்தி ஆத்மாவிற்கு எத்துணை உளதெனினும் என்றும் இருக்கும் சக்தியைக் கொடுத்த எப்பொருட்கும் இறைவன் அதை அழிக்கவும்மாட்டுவார். இது நிசம். சடப்பொருளுக்கு அழிவு சிதைவு உண்டாக்கும் சகஜ ஏதுக்கள் தத்துவங்களால் ஆத்மா அழியாது. இதைச் சாஸ்திர நிகமனங்களால் நிரூபிக்கலாம். ஆனால், இதற்கு மிஞ்சச் சாஸ்திரம் ஏதும் சொல்லவல்லதல்ல. சிர்ஷ்டிகரால் ஆத்மாவிற்குச் சங்காரம் இல்லை என்பதை நாம் திருவாய் மொழியாகிய சுருதியால் வணக்கமாய் அறிந்துகொள்ளவேண்டும்.

கூட்டத்தார் அத்தனைபெயரும் சற்றுநேரம் அறிவுதெளிந்து மௌனமாய் நின்றார்கள்.

பின்பு நடந்த சம்பாஷணை:—

**ராஸிலஸ்:**—இனி இந்தப் பிரேதவனத்தினின்று திரும்பிப்போவோம். தனக்கு எந்நாளும் மரணம் இல்லையென்றும், இப்பொழுது கிர்த்தியம் செய்வது செய்துகொண்டே வருமென்றும், இன்று சிந்திப்பது என்றும் சிந்தித்துக்கொண்டே யிருக்குமென்றும் அறிந்திருக்கிறவனுக்கு இப்பிரேதாலயங்கள் எவ்வளவு திமிரம் மூடியவைகளாய் இருக்குமோ! நமது கண்ணெதிரில் இங்கே நீண்டு நிமிர்ந்து படுத்திருப்பவர்கள் பூர்வகாலத்து அறி

ஞர், பராக்கிரமசாலிகள். இவர்கள் பூலோகவாழ்வு கொஞ்சநாள் வாழ்வு என்று நினைக்கும்படி நம்மை எச்சரிக்கிறார்கள். இவ்வுலகில் உத்தமநிலை யாதென்று அறிய நம்மைப்போல நாடி ஓடி ஆடித்திரியும்பொழுதே இவர்களை மரணம் கவ்விக்கொண்டு போய்விட்டதோ — ஆர் அறிவார்.

**ராஜகுமாரி:** — இவ்வுலகில் இன்ன நிலை எற்குநிலையென நிர்ணயித்து அனுசரிப்பது முன்போல முக்கியமாய் எனக்குத் தோன்றவில்லை. இனி நான் பரசுகம் ஒன்றையே சிந்தை செய்துகொண்டுவர விரும்புகிறேன்.

அப்பால் அவர்கள் பிரேத அறைகளினின்று வெளிப்பட்டுக் காவற்சேவகரோடு கயிரோவிற்குத் திரும்பினார்கள்.



# 49-ம் அதிகாரம்.

## ஒன்றும் முடியாத முடிவு.

நீல்நதி பிரவாகிக்கும் காலம் அடுத்தது. அவர்கள் பிரேத அறையைக் கண்டு திரும்பிச் சிலதினம் கழிந்து நீல்நதி பிரவாகித்தது.

அவர்கள் எங்கும் வெளிப்படாமல் வீட்டோடே இருந்தார்கள். அந்த வட்டகை எங்கும் வெள்ளக்காடாயிருந்ததனால், வெளிவிநோதத்திற்கு இடம் இல்லையே. சம்பாஷிக்க விஷயங்கள் வேண்டுமளவிற்கு இருந்தன. தாம் அங்கங்கே கண்ட வெவ்வேறு மனு

ஷர் நிலைக்கும், அவரவர்க்குத் தோன்றிய மனோசுக உபாயங்களுக்கும் ஒப்பு உயர்வு கண்டறிவதே அவர்கள் காலக்ஷேபமாயிருந்தது.

பெக்வாவிற்கு அராபியன் தன்னை ராஜகுமாரி வசம் ஒப்புவித்த அர்ச்சியசிஷ்ட அந்தோணி மடத்தைப்போல் ஆனந்தபதவி மற்றெங்கும் உண்டெனத் தோன்றவில்லை. அங்குள்ள பக்தர்களாகிய கன்னிகளுடன் வாசம்செய்து, அக்கன்னிமடத்திற்குத் தலைவியாக இடம் பெறுவதே அவள் முக்கிய இஷ்டமாயிருந்தது. மேலுமேலும் ஆசைப்பட்டு அலைந்தலைந்து அலுப்புற்றிருந்த அவள் இனி நாளொருவண்ணம் மாருத நிலை ஒன்றைத் தெரிந்து அதில் உறுதியாய் நிற்பதே தனக்குப் பாக்கியமென்று நினைத்தாள்.

பூலோகபோகம் அனைத்திலும் கல்வியே உத்தமபோக மென்று ராஜகுமாரி நினைத்தாள். அவள் முதலில் சம ஸ்த கலைகளையும் கசடறக் கற்கவும், கற்றபின், கல்வியில் வல்லவர்களான ஸ்திரீஜனங்களுக்கு வித்தியாசாலை ஒன்று ஸ்தாபித்துத் தான் சபாநாயகி ஆகவும், முதியோருடன் சம்பாஷித்து அவர்கள் கல்வியைக் கிரகிக்கவும், இளையோர்க்குக் கற்பித்துக்கொண்டுவரவும், இவ்வாறு, அடுத்துவரும் தலைமுறையாருக்கு அனுகூலமாக, புத்திக்கு இவளே, பக்திக்கு இவளே என்று வியக்கத்தகும் குணாதிசயங்களைப் பெண்கள் பலருக்கு வருவிக்கவும் விருப்புற்றிருந்தாள்.

ராஜகுமாரன் சிறு ராஜ்யம் ஒன்றுக்கு அதிபதி ஆகவும், ராஜ்யபாரம் தான் ஒருவனே நிர்வகித்துவரவும், அரசாக்ஷி அங்கம் அனைத்தையும் தன் கண்ணுற் காணவும் அபேக்ஷித்

திருந்தான். ஆனாலும், ராஜ்யத்திற்கு எல்லைகுறித்து அதற்குள் நிற்க அவன் மனம் ஒப்பவில்லை; எப்பொழுதும் பிரஜைகள் தெ[illegible]சையை விர்த்திசெய்துகொண்டுவர அவன் மனம் அவாவியது.

இம்லாக்கும் ககோளசாஸ்திரியும் பூலோக வாழ்வு எனும் ஆழாழியில் இறங்குதுறை இன்னதென்று குறியாமல், வேகமாய் மோதும் அலை தம்மை ஒதுக்கிவிடும் துறையில் விடட்டுமென்று பதைப்பற்றிருந்தார்கள்.

மேற்படியார் காதலித்த இப்போகம் ஒன்றும் கிட்டாதென்று ஐயமற அறிவார்கள். செய்வது எதென்று சிறிது காலம் அவர்கள் சீர்தூக்கிப்பார்த்து, நீல்நதி பெருகி வடிந்தபின் அபிஸினியா ராஜ்யத்திற்குத் திரும்பிப்போகத் தீர்மானித்தார்கள்.




S. P. C. K. PRESS, VEPERY, MADRAS—1916.

